# அண்ணாக் கோவை



ஆசிரியர் : செந்தமிழ் கவிஞர்
புலவர் இரா. மணியன்

# அண்ணுக் கோவை

ஆசிரியர் :
செந்தமிழ்க் கவிஞர்
புலவர் இரா. மணியன், பி.ஓ.எல்; பி.டி.
(பேராசிரியர், மணலி தமிழ்க் கல்லூரி, சென்னை-1.)

விற்பனை உரிமை :
கலைவாணி புத்தகாலயம்
தியாகராய நகர் சென்னை-17

மு. கருணாநிதி
முதலமைச்சர்




தமிழக அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-9

23—6—1970.

கவிஞர் இரா. மணியன் அவர்கள் எழுதிய ‘‘அண்ணா கோவை’’ என்ற கவிதை நூலைக் கண்டேன்.

அன்புக்கோர் அண்ணனாக, அறிவூட்டும் ஆசானாக, சொல்லுக்கும் செயலுக்கும் உதாரணமாக வாழ்ந்த பேரறிஞர் அண்ணா அவர்களை சுவை சொட்டும் தமிழால் பாடிய கவிஞர் மணியன் பாராட்டுக்கு உரியவர்.

அவர் தமிழ்த் தொண்டு வாழ்க - வளர்க என வாழ்த்துகிறேன்.

(Sd) மு. கருணாநிதி

# அணிந்துரை

மடல், தூது, பிரபந்தம், கோவை என்னும் முறைகள் தமிழிலக்கியத்திற்கு மட்டுமே சொந்தமானவையாகும்.

காட்சி பிரித்து களம் அமைத்து நாடகம் எழுதுவதுபோல் காதல் துறையைப் பங்கிடு செய்து ஒரு தலைவனை முன்வைத்து வரையப் பெறுவது இந்த வகைக் கவிதையாகும்.

நவீன இலக்கியத்தில் இந்தமுறைகள் அதிகம் இடம் பெறவில்லை.

நாகரிகக்கலப்புகளாலும் மொழிகளாலும் நவீன இலக்கியமென்பது ஒரு புதிய பாணியை வகுத்துக் கொண்டிருக்கிறது.

புதிய பாணி வரவேற்கப்பட வேண்டியதுதான் என்றாலும் பழைய இலக்கிய அமைப்புகளில் உயிரோட்டமுள்ள அமைப்புகள் பாதுகாக்கப்படவேண்டியது அவசியம்.

விருத்தப்பா என்பது விகற்பங்கள் அதிகம் கொண்டது என்றாலும் தமிழிலக்கண வரம்பில் ஓசை நயம் தெரிந்த எல்லோருக்கும் ஒசைவரக் கூடியதாகும்.

கம்பனுடைய விருத்தங்கள் இன்னும் முதுமையடையாமல் இருக்கின்றன.

புகழேந்தியின் வெண்பா புத்துயிரோடு காட்சியளிக்கிறது.

இந்த இலக்கிய இலக்கண மரபுகளைப் பாதுகாக்கும் கேடயங்களாக அண்மைச் காலத்தில் சில நூல்கள் வெளிவந்துள்ளன.

அவற்றில் ஒன்று புலவர் மணியன் அவர்கள் எழுதியுள்ள இந்த அண்ணுக் கோவையாகும்.

இந்தக் குறுங்காவியம் அண்ணு அவர்களின் பெருமையை மட்டுமின்றி தமிழின் பெருமையையும் நிலை நாட்டுகிறது.

எழுதியவர் புலவர் ஆதலின் யாப்பமைதி சிறந்து விளங்குகிறது.

இரு நூற்று எண்பது கட்டளைக் கலித்துறைகளைக் கொண்ட காவியம் இது.

பழைய பாணியால், ஒரு துறையில், நவீன உலகில், இரு நூற்றி எண்பது விருத்தங்களை எழுதக் கூடியவர்களே குறைவாகத்தான் இருப்பார்கள்.

புலவரது சிறந்த புலமைக்குச் சான்றுகளாக, 72, 85, 110, 139, 152, 252, ஆகிய பாக்கள் காட்சியளிக்கின்றன.

இதுபோன்ற முயற்சிகளைப் புலவர் மேலும் மேற்கொள்ள வேண்டும்.

இதனை வெளியிட்ட கலைவாணி புத்தகாலயம் உரிமையாளர் நண்பர் சீநி. திருநாவுக்கரசு அடக்கமானவர். ஆழ்ந்த கருத்துக்களில் பற்றுள்ளவர்.

புத்தகத் துறையைப் பலசரக்குக் கடையாக்காமல் பயனுள்ள நூல்களை வெளியிடும் பணியை மேற்கொள்ளுங்கள்.

பாடப்புத்தக வரிசையில் சேர்க்கப்படவேண்டிய இந்தக் கோவை நூல் அவரது தயாரிப்பாகும்.

புலவரும், பதிப்பகத் தலைவரும், தொடர்ந்து இந்த நற்பணி செய்ய தமிழ் மக்கள் பேராதரவு தரவேண்டும்!

அன்பன்

சென்னை
4-6-70

**கண்ணதாசன்**

# பாராட்டுரை

''அண்ணுக்கோவை'' என்ற தலைப்பில் பகுத்தறிவுப் புலவர் திரு இரா. மணியன் பி. ஓ. எல் அவர்கள் இயற்றியுள்ள நூலின் பல பகுதிகளைப் படித்தேன். அத்தனையும் படித்தேனாக இனிக்கிறது. புதுமை நோக்கு ஆரம்பமுதல் உள்ள நூல் இது !!

நமது நாட்டுப் புலவர்கள் பலர், இன்னமும் பழமைக்குப் புதுமை விளக்கும் தருவதிலும், பழைய புராணக் குப்பைகளுக்கு புதிய உரைகள், நயங்கள் காணுவதிலும் நேரத்தையும் நினைப்பையும் வீணாக்கி வரும் நிலையில் தமிழ் மக்களது இதயங்களில் விற்றிருக்கும் பகுத்தறிவு மாமேதை பேரறிஞர் அண்ணா அவர்களை பாட்டுடைத் தலைவனாக, காவிய நாயகனாக சுவைத்துப் பாடி இருக்கிறார். 'கோவை' என்ற குறிப்பிட்ட வகை இலக்கணத்திற்கேற்ப பாடியுள்ளார் என்பது அவர் நூலினை அமைத்துள்ள முறையிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அவர் பயின்ற காலை முதல் அவரை நான் அறிவேன். முற்போக்குக் கருத்துக்களை ஏற்றவர் அவர்.

அவரது சீரிய திறனும், சிந்தனை வளமும் இந்நூலின் மூலம் தமிழுலகத்திற்கு விளங்கும் என்பது உறுதி.

தென்னகக் கோமான் அண்ணாவை மையமாக வைத்து ஆயிரக் கணக்கான புதுமை நூல்கள் வெளிவர வேண்டும்.

தமிழர்கள் இதனை சிறந்த கருவூலம் எனக் கருதி வரவேற்பார்கள் என்றே நம்புகிறேன்.

நூலாசிரியருக்கு எனது உளங்கனிந்த பாராட்டுதல்கள்.

கி. வீரமணி

# முன்னுரை

பேரறிஞர் அண்ணு அவர்களின் அறுபதாமாண்டு நிறைவு விழா வில் என் காணிக்கையாக ஒரு நூல் வெளியிட எண்ணினேன். நூல் எழுதி முடிவதற்குள் நம் எல்லாரையும் திடுக்கிட வைத்துவிட்டு அண்ணு அவர்கள் அமரராகி விட்டார்கள். ஆகவே நூலை முற்றுவிக் கும் மனப்பக்குவம் எனக்கு இல்லாமற் போனது. எனவே எழுதிய வரை, அண்ணுவின் முதல் நினைவு நாளன்று வெளியிடலானேன்.

பண்டைய கோவைநூல்கள் பெரும்பாலும் கடவுளர்களையும் அரசர்களையுமே பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டுள்ளன. அத்தகைய தகுதி நம் தமிழ்த் தெய்வம் போன்றவரும் தென்னகத்து முடிசூடா மன்னர் போன்றவருமான பேரறிஞர் அண்ணு அவர்கட்கு உண்டு என்பதைத் தெளிவாக உணர்ந்த பிறகுதான் இக்கோவை நூலை எழுதத் தொடங்கினேன்.

வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அறிஞர் அண்ணு அவர் களுடன் உரையாடியும், சொற்பொழிவுகளைக் கேட்டும் கதை கட்டு ரைகளைப் படித்தும், நாடகம் திரைப்படங்களைப் பார்த்தும் அவரது உள்ளத்தை உணர்ந்தவன் என்ற முறையில் அவரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்ட இக் கோவையைப் பாட எனக்கும் தகுதி இருப்பதாக எண்ணியே இந்நூலை இயற்றினேன். அடுத்து, அண்ணுக் கோவையின் இரண்டாம் பகுதியை, அண்ணுவின் இரண்டாவது நினைவு நாளில் வெளியிட எண்ணியுள்ளேன்.

இந்நூலை வெளியிட எனக்கு உற்சாக மூட்டிய எனது கல்லூரி யின் தலைவரும், மணலி அறநிலைய காப்பாளருமான உயர்திரு. மணலி இராமகிருஷ்ண முதலியார் அவர்களுக்கும், பல்லாற்ருனும் உதவி செய்த பேராசிரியர்கள் இரா. செல்வ கணபதி, ஆ. நரசிம்மன் ஆகியோர்க்கும், எனது கல்லூரி மாணவர்கட்கும், அவ்வப்பொழுது பாடல்களைப் படித்துப் பாராட்டிய, என்னிடம் தமிழ்மொழி பயின்ற அமெரிக்க நாட்டுப் பேராசிரியர் திரு. இர்ஷிக், அரசியல் ஆய்வாளர் திருமதி. மார்கரேட் பார்னட், மொழியாராய்ச்சியாளர் திரு. கெப் ளான் ஆகியோர்க்கும் எனது மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமது பல்வேறு அலுவல்களுக்கிடையே இந்நூலினைப் படித்துப் பார்த்து மதிப்புரை தந்து சிறப்பித்த தமிழக முதல்வர், கலைஞர் கருணாநிதி அவர்களுக்கும் அணிந்துரை நல்கிய கவியரசர் கண்ண தாசன் அவர்கட்கும், விடுதலை ஆசிரியர் திரு. வீரமணி அவர்கட்கும், பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூற்பாக்களுக்குத் தெளிவுரை கண்ட எனது நண்பர் புலவர். திரு. அருணா. அகோரம் அவர்கட்கும் அவருடைய துணைவியார் திருமதி கமலா அகோரம் அவர்கட்கும், நூலினை அச்சிட்ட அச்சக உரிமையாளர்க்கும், நூலினை வெளியிட பலவகையிலும் உதவி செய்து பெருந்துணையாக விளங்கிய கலைவாணி புத்தகாலய உரிமை யாளர் திரு. சீனி, திருநாவுக்கரசு அவர்களுக்கும் எனதுளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் உரைப்பகுதியுள் ஆங்காங்கு சிற்சில அச்சுப்பிழைகள் ஏற்பட்டுவிட்டமைக்கு வருந்துகிறேன். அறிஞர்கள் பொறுத்தருள் வார்களாக. இந்நூலுள் காணும் குறை நிறைகளை அறிஞர்கள் எனக்கு எழுதியனுப்பினால் அடுத்த பதிப்பினைச் செம்மையாக வெளியிட உதவியவர்களாவார்கள் என்றும் தெரிவித்துக் கொள் கிறேன்.

அன்பன்

**இரா. மணியன்**

# பதிப்புரை

தமிழ்நாடு செய்த தவப்பயனாய்த் தோன்றி வாழ்வாங்கு வாழ்ந்து மறைந்த மாமேதை பேரறிஞர் அண்ணா அவர்கள் சமயம், கட்சி, நாடு முதலான எல்லைகளை யெல்லாம் கடந்து இன்று பேரொளியாகத் திகழ்கின்றார்கள்.

அவர் ஆற்றிய அரும்பணிகள் உலக மக்களின் இதயங்களைக் கவர்ந்து தமிழ் நாட்டின் சிறப்பை மேலும் உயர்த்தியது.

அண்ணாவைப் பற்றிய நூல்கள் பல வெளிவந்திருப்பினும், பழமையும் புதுமையும் பொலிவு பெற, அண்ணா அவர்களின் வாழ்க்கை நெறி முறைகளை நம் மனத்திரையில் நிழற் படமாக உருவகப்படுத்தும் வகையில் இக்கவிதை நூல் அமைந்து சிறப்புறுகின்றது.

அண்ணாவைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு, பல்வேறு அரசியல் தலைவர்களின் குறிப்புக்களையும் வரலாற்று நிகழ்ச்சிகளையும், பாக்களின் உள்ளுறையாக அமைத்து, தமிழில் புதியதோர் கோவை இயற்றிய, இக்கவிஞரின் திண்ணிய அறிவும், ஆழ்ந்த ஆராய்ச்சியும், இக் கோவைக்குத் தனிச்சிறப்பை அளிக்கின்றன.

தெளிந்த நீரோடை போன்ற சிறந்த நடையும், இலக்கியச் சுவையும் கவிஞரின் புலமைக்கும் உள்ளத் தெளிவிற்கும் சான்றாகும்.

தமிழ் மக்கள் இந்நூலிற்குத் தரும் ஆதரவு இக்கவிஞர் மேலும் பல சிறந்த நூல்களை ஆக்கித்தர உதவும் என நம்புகிறேன்.

இடையறாத சிறந்த பணிகளுக்கிடையே இந்நூலிற்கு மதிப்புரை தந்தருளிய தமிழக முதலமைச்சர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கட்கும் கவியரசர் கவிஞர் கண்ணதாசன் அவர்கட்கும், நூலாசிரியர் செந்தமிழ்க் கவிஞர் இரா, மணியன் அவர்கட்கும் என் இதயம் கனிந்த நன்றி.

கலைவாணி புத்தகாலயம்
தியாகராய நகர்

சி. நி. திருநாவுக்கரசு



பேரறிஞர் அண்ணா அவர்களுக்குத்
தனது காணிக்கையாகப்
பாமாலை சூட்டும் ஆசிரியர்
பூமாலை சூட்டி மகிழ்கிறார்.

# அண்ணுக் கோவை

—★—

## முதலாவது

## களவியல்

### 1. கைக்கிளை

#### 1. காட்சி :

உலகிற் சிறந்த வொருதமிழ் நாட்டிற் கொருவராகிப்
பலகற் றறிந்த வறிஞரே றண்ணு பிறந்த பாரில்
விலையிற் ககப்படாப் பொற்கொடி யொன்றிலே வில்லுமிழ்வேல்
சிலையும் பிறையும் முகிலும் மலையும் செறிந்துளவே.

#### 2. ஐயம் :

அல்லின் பகையாம் அருக்கன் ஒளியால் அழகுசேர்த்த
கல்லின் சிலையோ கலையின் நிலையோ கவினுரைக்க
ஒல்லின் அவரை உணர்வின் உறைவாய் உரைப்பொழியும்
சொல்லின் முகிலாய்ச் சொலலுறு மண்ணுவாய்ச் சொல்லலாமே.

#### 3. துணிவு :

சிலையின் கலையென்ருல் சிந்தையைத் தாக்கும் சிறப்புமுண்டோ
கலையின் நிலையென்ருல் கண்ணின் இமையைக் கருதலாமோ
மலையின் வலிய மனமே இதனுல் மருளவேண்டாம்
நிலையின் குலையா நெடுந்தகை யண்ணுசொல் நேரிழையே.

#### 4. குறிப்பறிதல் :

பேரறி வாலுயர் பேரா சிரியரை நாவலரை
பேரறி வாளணு மண்ணுதன் பேச்சினுல் பெற்றதேபோல்
பேரறி யாதவோர் பேதையென் கண்களைப் பேர்த்துசென்ருள்
பேரறி யாமலே பேர்த்தவள் கண்களும் பேதுறுமே.

### 2. இயற்கைப் புணர்ச்சி

#### 5. இரந்து பின்னிற்றற்கெண்ணல் :

மருளும் மதியுடை மக்களின் மாசெலா மாற்றிபின்னர்
தெருளும் கலையினுல் சீர்திருத் திக்கொண்டு வந்தசெம்மல்
கருணு நிதியையுந் தன்தம்பி யாய்க் கண்டுகொண்டவண்ணு
துரையுரை போலுறை வோமுரைத் தேன்குறை யேதுரையே.

### 6. இரந்துபின்னிலை நிற்றல் :

நடராசன் பேர்க்கேற்ப நாடெங்குஞ் சுற்றி நடந்துகொள்கை
படரச்செய் துப்பினி லெப்பகை வர்க்குமே யஞ்சலில்லோன்
சுடரெனு மண்ணுசொற் கஞ்சலே போலுஞ் சுடர்த்தொடியே
தொடவுனை யஞ்சுவன் தொல்லையைப்போக்குவ துன்பொறுப்பே.

### 7. முன்னிலையாக்கல் :

திரவிட நாட்டினை மீட்டுநம் செல்வத்தைக் காத்திடற்கே
உரமுடை நெஞ்சமோ டண்ணுயிந் நாட்டி லுதித்ததேபோல்
உருகிடு மென்னுடல் விட்டுயிர் வேறெங்கு மேகலின்றி
இருந்திடச் செய்திட வன்றோநீ இவ்விடம் சேர்ந்ததுவே.

### 8. மெய்தொட்டுப் பயிறல் :

மென்குர லாலிசை மெல்லவே பாடிடும் வண்டினங்காள்
அன்புறு சொல்லினு லாரையு மாட்கொளு மண்ணுநாட்டில்
வன்புறு செய்கையே வஞ்சியின் கூந்தலில் வந்துகுந்தல்
என்குறை தீர்த்திடு மிவ்விடை நிற்குமோ ஏகுவீரே.

### 9. பொய்பாராட்டல் :

மண்ணிலே எண்மதி பெற்று மகிழ்ந்திடு மக்களுக்குள்
அண்ணுவின் சொற்கேட்டோ ராய்வெனு மாழியில் ஆழ்வதேபோல்
விண்ணிலே நின்றிடு வெங்கதிர் நின்னுடைச் சீர்முகத்துத்
தண்ணினைப் பெற்றிடற் கன்றோவித் தண்கடல் மூழ்குவதே.

### 10. இடம்பெற்றுத் தழாஅல் :

எதையுமே தாங்கும் இதயமே உண்டென் றியம்புகின்ற
புதையலாய் நாட்டினர் போற்றிடு மண்ணுவி னுள்ளகம்போல்
எதையுமே தாங்கிடு மிம்மலைச் சாரலே எம்முடைய
புதையலாம் பொற்கொடி மேவிடற் கோரிடம் போற்றுவமே.

### 11. வழிபாடு மறுத்தல் :

அறிஞரைச் சூழ்ந்திடு மன்பர்போ லிங்கே அசோகமதை
நெறியுறச் சூழ்ந்திடு மாதவிப் பேருடை நீள்கொடியே
அறநெறி அன்பு நெறியென் றறிவிக்கு மண்ணுநாட்டில்
நெறியறி யாமலே நின்றவர்க் கின்பம் நீ செய்குவையே.

### 12. இடையூறு கிளத்தல் :

விந்தமே போல்வளர் கொங்கையின் விம்மலைப் போர்த்திடாமல்
நந்தமிழ்ச் சீர்மையை நாட்டிடு மண்ணுசொற் கூர்மைநாணும்
கொந்தவிழ்ப் பூவிழிக் கையிலே கொள்ளவோ பொத்தினுய்நின்
செந்தமிழ்ப் போல்சுவை சேர்ந்திடுஞ் செம்மலர்க் கைகளாலே.

### 13. நீடு நினைந்து இரங்கல் :

அண்ணாவின் சொற்கேட் டவர்படை தன்னை அடைந்திருக்கும்
எண்ணிலா தம்பியர் இன்சொலே பெற்றிட எண்ணுதல்போல்
பண்ணெணும் சொல்லுடைப் பாவையுன் செவ்விதழ்ப்
பாலும் தேனும்
எண்ணினேன் பெற்றிட எண்ணியாங் கெய்துவ தெப்பொழுதே.

### 14. மறுத்தெதிர் கோடல்:

கத்தா தெனைமோதுங் காதற் கடற்கென் நிறையணையாய்
எத்தனை நாழிகை நிற்குமென் நெஞ்சம் இயம்புவையோ
எத்துணைக் கல்மனங் கொண்டவர் என்னினு மண்ணாவின்சொல்
புத்துணர் வூட்டுமா மன்பர் சொலுமது போன்றதுவே

### 15. வறிது நகை தோற்றல் :

ஆய்ந்துணர் தூப்பிலே யாரிவர்க் கீடெனு மண்ணாசொல்லில்
சாய்ந்திடா மக்களு முண்டுகொல் சார்பினை வேண்டிநின்றே
ஓய்ந்திடா தன்மையி லுண்மையுள் ளன்புரை யோர்ந்ததனுல்
மாய்ந்திடா நன்மையை மங்கை நகைமொக்குள் நாடினனே.

### 16. முறுவற் குறிப்புணர்தல் :

வீணர்கள் சேனையை வீழ்த்திநம் நாட்டு விலங்கொடிக்க
மாணவர் தானையை மாண்புறத் தந்த மதியழகன்
பேணிய தன்தலை வன்னண்ணா தன்னையே பெற்றதைப்போல்
நாணிய உன்னகை தன்னிலே என்னுயிர் நான்பெற்றேனே.

### 17. முயங்குதலுறுத்தல் :

சொல்வலர் நாவலர் தூயவர் காவலர் சோர்விலரை
நல்லவர் நம்மண்ணா தன்தம்பி யாய்பெற்றார் நாடுமீட்டார்
செல்வியே உன்னையும் நான்பெற்றேன் சென்றயென்
ஆவிமீட்டேன்
கல்வியில் புள்ளியை நீக்கலும் காண்பதை ஆற்றினேமே.

### 18. புணர்ச்சியின் மகிழ்தல் :

எடுத்த செயலைத் தொடுத்து முடித்திடு மாற்றலுள்ள
நெடுஞ்செழி யன்யெனும் நேர்மையுள் தம்பியைப் பெற்றுநிற்கும்
கடுஞ்சொலே கண்டிலா வண்ணாவாழ் நாட்டுடைக் காரிகையே
முடிந்திடா வேலையு முண்டுகொல் வேண்டும் முயற்சியாலே.

### 19. புகழ்தல் :

குற்றுரு வாயினும் கோளத் தறிவெலாங் கொண்டுநிற்கும்
சொற்றிரு வேயெனு மண்ணாசொற் கேட்டா ரெனமகிழும்
எற்றிரு வேயனை ஏந்திழைக் கூந்தல்தன் பூமணம்போல்
இற்றிரு தேயமீ தெங்கணும் காண்டியோ வண்டினமே.

## 3. வன்புறை

### 20. அணிந்து நாணியதுணர்ந்து தெளிவித்தல் :

கறையிலா நெஞ்சொடு காட்சியும் நாட்டுக் கருத்துமுற்ற
அறிவுடை நம்பிநம் மண்ணுவின் சொல்லைக்கை யாள்வதேபோல்
குறையெது மின்றியுன் தோழிபோல் இவ்வணி கூட்டியும்பின்
நிறைவுற வெத்தடை நேர்ந்ததோ கூறுவாய் நேரிழையே.

### 21. பெருநயப்புரைத்தல் :

உரிமைகொள் மக்களின் உள்ளவீ டெங்கணும் வீற்றிருக்கும்
பெருமைகொள் எண்ணுவாழ் நாட்டுடை வண்டேயிப்
பெண்ணவள்தன்
அருமைகொள் வாயிதழ்த் தேன்சுவை போல்நீ யறிந்ததுண்டோ
உரையெமக் கென்றேனு மோர்நா ளுணர்ந்துவந் தம் மலரே.

### 22. தெய்வத்திறம் பேசல் :

மதியழ கன்தன்ஞல் மாண்புற்ற மாணவப் போர்ப்படைக்கு
மதியழ கன்பேர்கொள் சோமண்ணு தீன்னையே தந்தவண்ணு
மதியிஞ லாய்ந்தேற்ற மாண்பினைப் போலன்றி மானே நீயென்
விதியிஞல் வந்துற்ற வெற்றியே யென்ருலும் வேண்டுவேனே.

### 23. பிரியேனென்றல் :

அன்பழ கன்எனும் பேரா சிரியரைத் தம்பியாய்கொண்
டின்புறு மண்ணுமே லாணையாய்ச் சொல்லுவே னேந்திழையே
நின்னிற் பிரியேன் பிரியினு மோரிர வுந்தரியேன்
மின்விழி தன்னிலே நீர்மிக ஊர்வதேன் மெல்லியலே.

### 24 பிரிந்து வருகென்றல் :

அன்புடைத் தம்பியின் உள்ளகத் தார்ந்திடு மண்ணுவைப்போல்
இன்பமே உன்னகத் தென்னுரு எப்போழ்து முள்ளதென்பேன்
பின்பென் பிரிவேது பேணுவாய் என்பிரி வோர்கணமே
என்பதா லிப்பொழு தாற்றுக யான்வாழ ஏதுவதே.

### 25. இடமணித் தென்றல் :

கம்பத்துக் கட்டியாடுங் கொடி யுன்னூரார்க் காண்பதற்குத்
துன்பத்துக் காளாவத் தேவைகொல் தூய்மைசொல் செல்வரான
அன்பழ கற்கண்ணு தன்னண்மை போல்நம்மூர் அண்மையதாம்
இன்பத்திற் கேன்பஞ்சம் என்னினும் வாடலேன் ஏந்திழையே.

### (4) 26. தெளிவு :

சொன்னசொல் என்றுமே மாறிடா சொல்வேந்த ராகவாழும்
என்னண்ணு தன்தம்பி என்ருகி விட்டவர் என்தலைவர்
என்ஞளும சொல்வாரோ வாய்மைக்கு வேருன எச்சொலையும்
என்னெஞ்சே நீயஞ்சல் எற்றுக்கோ இவ்வையம் எண்ணுவதே.

## 5. பிரிவுழி மகிழ்ச்சி

### 27. செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தோடு சொல்லல் :

வழகார் தமிழை அழகார் மொழியில் வடித்தெடுத்துப்
பழகார் தமையும் பழகும் படிச்செய்யும் அண்ணுநாட்டு
மழவோர் பகைவர் மானம்போ கல்போலப் போவதைப்பார்
எழிலோர் வடிவமாய் வந்தென தின்னுயிர் கொண்டுநெஞ்சே.

### 28. பாகனேடு சொல்லல் :

அண்ணுவின் சொற்கேட்கும் கூட்டம்போல் ஆங்குள்ள
ஆயமேதம்
எண்ணுமல் நிற்கின்ற தாவென்று முன்னும் எனதுநெஞ்சம்
பண்ணுள் தன் பின்வருமோ வென்று பின்னுமாய்ப் பார்த்துப்
பார்த்தென்
கண்ணுவாள் போவதைக் காண்பாகா கள்ளமில் காரிகையே.

## 6. பிரிவுழிக் கலங்கல்

### 29. ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோவென்னல் :

நடுக்கமில் காளையர் நம்மண்ணு தன்னையே நாடுதல்போல்
உடுக்கள் நடுவில் உளதோர் மதியினை யொத்திருக்கும்
வடுக்கள் படியா வடிவாள் தனையே வணங்குதல்காண்
மடுக்குள் மலைபோல் மதியுமிக் காவந்த மாயமென்னே.

### 30. வாயில் பெற்றுய்தல் :

பேணுதல் செய்வதற் கெத்துணை பேரா யினும்பெரியார்
காணுதல் தன்துணைக் காகநம் மண்ணு வொருவரன்றே
வாணுதல் தேடுவார் கோடியே என்னினும் வஞ்சிதானே
பேணுதல் ஓர்மதி தானதென் மால்தீர்க்கும் பேர்மருந்தே.

### 31. பண்பு பாராட்டல் :

கண்ணேவே லென்றிடின் கொன்றுயிர் ஊட்டுதல்கண்டதுண்டோ
விண்ணேவெல் திங்கட்கு மிம்முக வேட்கைகொள் பார்வையேது
பெண்ணணிவள் அங்கமே தங்கமாய்ச் சொல்லினும் பேதமைதான்
பண்ணேவெல் சொல்வலன் அண்ணுவைப் போலுண்டோ
பாரினிலே.

### 32. பயந்தோர்ப் பழிச்சல் :

துன்பமே வோர்ந்திடாத் தூய்மைசொற் செல்வரா
மண்ணுநாட்டில்
வன்புறு செய்கையும் வந்திடல் ஒல்லுமோ வாழ்க்கைதனனில்
இன்பமே யன்றியோர் துன்பமுந் தந்திடா இன்பவலலி
தன்னையான் பெற்றிடப் பெற்றவர் தம்மையே வாழ்த்துவேனே.

### 33. கண்படை பெறுதுகங்குறேதல்:

எடுத்துப் படிக்கும் எதையும் தொடுத்து முடித்திடாமல்
படுத்துப் பழக்கம் பயின்றிடாப் பண்புடை யண்ணுதானே
படுத்துப் படுத்துப் புரளினும் கண்படை பெற்றிடாமல்
தடுத்துப் படைக்கும் தன்மையைத் தையற்குத் தந்தவரே.

## 7. இடந்தலைப்பாடு

### 34. தந்த தெய்வந் தருமெனச் சேறல் :

சூளுரை எத்தனைச் சொல்லினும் எத்தர்கைச் சிக்கிடாமல்
ஆளுநல் வாய்ப்பினை அண்ணு விடமே அவனிமக்கள்
மீளவும் மீளவும் தந்துதந் தார்வமே கொள்ளுதல்போல்
நாளுமே நான்செலின் நங்கைதன் நல்லெழில் நல்குவளே.

### 35· முந்துறக் காண்டல் :

இன்றைய கூட்டத்திற் கெம்மண்ணு வாராரோ என்றுசொல்லி
மன்றுளார் யாவரும் மாழ்கிய போழ்தில் மகிழவரும்
வென்றியை அன்றிவே றொன்றையுங் கண்டிடா
வண்ணுவைப்போல்
என்றனை இன்றுமே இன்பவெள் ளத்திலே ஏற்றுவாளே.

### 36. முயங்கல் :

செந்தமிழ் அண்ணுபால் சேர்ந்ததைப் போலின்றுசிக்கிக்கொண்ட
அந்தமில அன்பினுள் பைந்தமிழ்ப் பண்பினு ளார்வமோடு
சொந்தமாய் வந்தவள் சொன்னதைக் கண்டதைச்
சொல்லுவேனே
கொந்தவிழ்ப் பூவினுள் வண்டுசெந் தேனினைக்கொண்ட
தென்னே.

### 37. புகழ்தல் :

அண்ணுவைப் போலே அவைதன்னில் பேச அனைவருமே
எண்ணும லுள்ளாரோ யாருமிப் பாரினி லேந்திழையே
பண்ணினை வெல்லுமுன் பாகு மொழியினைப் பாலுந்தேனும்
எண்ணினும் பெற்றிடற் கேலுமோ சொல்லுவா யென்றனுக்கே.

### 38. ஆயத்துய்த்தல் :

எப்போ வருவாரோ என்றெண்ணி ஏங்கும்பல் தம்பிமார்க்குத்
தப்பா துவகையைத் தந்திடுந் தன்மையுள் ளண்ணுவைப்போல்
இப்போ வருவாயோ என்றதோ ஏங்கிடுந் தோழிமார்பால்
செப்பாது செல்வாய்நீ என்றாலும் யானெங்கே செல்லுவதே.

## 8. பாங்கற் கூட்டம்

### 39. தலைவன் பாங்கனைச் சார்தல்:

தம்பியர் தங்களுக் கெத்தகைத் தொல்லைவந் தாலுமென்றும்
தெம்புடன் யாவையுந் தீர்ந்திடச் சேர்வதோ ரண்ணுவன்ரே
நம்முடைக் காதலை நண்பன்பா லின்றே நவின்றுவிட்டால்
செம்மனக் காரிகை சேர்ந்திட வோர்வழி செப்புவானே.

### 40. பாங்கன் தலைவனை உற்றது வினுதல் :

அறிஞரே றண்ணுவின் ஆசிபெற் ரோரை அரசியலில்
முறித்திட வெண்ணியோர் மூஞ்சிபோல் நின்முகம் வாடிநிற்கக்
குறித்தவர் யாரெனக் கூறுவாய் நண்பனே கோளந்தன்னில்
நெறித்தவர் சென்னியை நின்னடி சேர்ப்பன்யான்
நேர்ந்ததென்னே.

### 41. தலைவன் உற்றதுரைத்தல்

உலகத்து வாழ்மக்கள் உள்ளமொவ் வொன்றிலு மூன்றிவாழும்
பலகற்ற பைந்தமிழ்ப் பண்புடை யண்ணுவாழ் பார்தனிலே
நலமுற்ரு ரெல்லாரும் நான்மட்டும் நண்பா நலிந்திடற்கு
நிலமுற்ற திங்கள்தன் நீள்கலை கொண்டெதிர் நின்றதுவே.

### 42. கற்றறி பாங்கன் கழறல் :

குலையாத நெஞ்சினைக் கொண்டநம் மண்ணுவின் கொள்கையிலே
நிலையாக சார்ந்துள்ள நேரிழை சத்திய வாணிமுத்தாய்த்
தலையான சீர்பெற்ற தங்கைமார் வாழும் தமிழகத்தில்
கலையாவுந் தேர்ந்துள்ள காளை நீ சோர்வுறக் கண்டதென்னே.

### 43. கிழவோன் கழற்றெதிர் மறுத்தல் :

நினைத்ததைச் செந்தமிழ் நெஞ்சொடு சிந்தையில் நேரச்செய்து
புனைந்திடு மண்ணுசொல் போற்றிடா மாந்தரிப் பூமியுண்டோ?
அனைத்தையுங் கற்றபே ரன்பனே கண்ணிலான் தன்னையன்றி
எனைத்தையும் வென்றவள் கண்ணெதிர்பட்டபின் மீள்வதெங்கே.

### 44. கிழவோற் பழித்தல் :

பண்புடை யண்ணுவின் பாசறை தன்னில் பயின்றவர்கள்
பண்படா எண்ணத்தால் பாதை விலங்கிடப் பார்த்ததுண்டோ
நண்பனே நீயின்று நாடிய நீள்விழி நாட்டையாளத்
திண்படை யாவளோ தீதெதுங் கொள்வளோ சிந்திப்பாயே.

### 45. கிழவோன் வேட்கை தாங்கற் கருமை சாற்றல்:

சிந்தனைச் சிற்பியாம் சிற்றர சென்னுமோர் சீர்திருத்தத்
தந்தையைத் தன்னுடைத் தம்பியாய்த் தாங்கி நின்றண்ணுதானும்
செந்தமிழ் நாட்டினைச் சீர்திருத் தம்செய்தும் சீறு நண்பா
சொந்தமாய் வந்தவள் சூழலை நீக்கிடின் சோர்வுதானே.

### 46. பாங்கன் தன்மனத் தழுங்கல்:

கேட்டாரை யீர்த்துப்பின் கேளாரை வீழ்த்துந்தன்
கேள்விப்பேச்சால்
நாட்டரை வென்றுபின் நாடாளு மண்ணுவாழ் நாட்டினிலே
கூட்டாளி யென்னையே கூப்பிட்டுத் தன்குறை கூறிநின்ருன்
வேட்டாரை வேல்கொண்டு வீழ்த்திடும் வேதனை வீழ்த்துதற்கே.

### 47. பாங்கன் தலைவனோடழுங்கல்:

தென்னகக் காந்திபோல் தீமையைப் போக்கிடும் தெய்வம் போன்ற
மென்மைகொள் ளண்ணுவே மேலலர் கொள்சினம் கொண்டு
விட்டால்
என்னுறு மிந்நில மென்றுநீ யன்பனே எண்ணிப்பார்ப்பாய்
துன்புறு முன்மனம் தூய்மையில் நீங்கிடின் தொல்லையன்றே.

### 48. எவ்விடத் தெவ்வியற்றென்றல்:

உன்னதப் பேற்றினை உற்றபல் தீயரே ஊறளித்தும்
பின்னிடா தன்னவர் பேதுறச் செய்துவா ழண்ணுநாட்டில்
மன்மதப் பாணமும் மாய்த்திடா நண்பனே மங்கைநல்லாள்
தன்மனை யாண்டதோ தன்மையென் சொல்வையோ என்ற
னுக்கே.

### 49. அவனஃதிவ்விடத் திவ்வியற் றென்றல்:

இன்னல் தரினும் இனியவே செய்யும்நம் மண்ணுவெற்பில்
கன்னல் மொழியால் கனிவின் விழியால் கருத்தையள்ளி
மின்னல் இடையால் மிடுக்கு நடையால் மிகவருத்தி
நென்னல் தனியே நெறியெதிர் கொண்டெனை நேர்ந்தனளே.

### 50. பாங்கன் இறைவனைத் தேற்றல்:

அண்ணுதன் தம்பிக்கே ஆருத் துயரம் அணுகிவிட்டால்
உண்ணுதும் அத்துயர் ஓட்டா தொழிவரோ உண்மைநண்பா
கண்ணுலுன் நெஞ்சைக் கவர்ந்தவள் தன்னையக் காவினிலே
கண்டுநான் மீளுவன் காத்திரு நீயுமக் காரிகைக்கே.

### 51. குறிவயிற் சேறல்:

அன்பே உருவான அண்ணு வரசா ளமுத நாட்டில்
துன்பே உருவாகத் தோன்றலை மாற்றிய தேகைநல்லாள்
இன்பே உருவாக என்னெதிர் நிற்பளோ எப்படியோ
முன்பே வருவளோ முன்வந்து மீள்வளோ முந்துநெஞ்சே.

### 52. இறைவியைக் காண்டல் :

தேம்பிழி யாழ்மொழி சேர்த்திடுந் தீங்கனிக் கொவ்வையோடு
மாம்பழங் கள்மேலே மாவடுக் கள்ளிரண் டார்ந்தமைகாண்
சோம்பலே இல்லாத சூரர் பலர்வாழு மண்ணுநாட்டில்
சோம்பிய தோழனும் சுட்டிய தோருருச் சூழலீதே.

### 53. இகழ்ந்தற் கிரங்கல்:

அடுக்குத் தொடரால் அழகு மொழியால் அறிஞரண்ணு
தொடுக்கு மறிவுத் தொடர்சொற் பொழிவை மடுத்தபின்னே
இடுக்க ணெதுவேற் படினு மெவரும் ஏற்பரன்றே
உடுக்கை யிடையாள் உன்னு மெவரும் உறைவதெங்கே.

### 54. தலைவனை வியத்தல்:

எண்ணு இயல்புகள் யாவுமே ஒன்று யிணைந்துநிற்கும்
அண்ணு இயக்கத்தி லார்வ முறச்சேரு மாருமென்றும்
ஒண்ணு இயைபினை ஓர்வதிஞ் ஞால முணர்வதுண்டோ
பெண்ணு ளிவளைப் பிரிந்தவன் வந்ததெப் பேதைமையே.

### 55. தலைவியை வியத்தல்:

செந்தமிழ் வார்த்தைகள் சீர்பெற அண்ணுவாய்ச் சேர்ந்ததே
போல்
செந்தளிர் வஞ்சியில் சேல்வந்து துள்ளுமிவ் விந்தையென்னே
செந்நிறத் திங்களும் திங்கள்மேல் செல்லும் கருமுகிலும்
இந்நிலங் கண்டியோ எங்கணும் நெஞ்சமே இங்ஙனமே.

### 56. தலைவன் றனக்குத் தலைவி நிலை கூறல்:

அயல்நாடு சென்றநம் மண்ணு வருகைக்கா யன்புத்தம்பி
செயல்யாவு மெண்ணுது சிந்தித்தோர் சாலைபால் சேர்வதேபோல்
மயல்மேவு நெஞ்சோடு மங்கைநல் லாளுந்தன் மன்னனுக்காய்ப்
புயல்தாவி நிற்கின்ற பூஞ்சோலை போந்தங்கே நிற்கின்றுளே.

### 57. தலைவன் கூறல்:

கூர்மதி கொண்டுநற் கொள்கையே கூறிடும் தம்பிமார்கள்
சீர்மிகு நம்மண்ணு செப்புமோர் நல்வழி செல்வதேபோல்
பார்மதி பார்த்தநம் பாங்கன்சொல் நேர்வழிப் பாதைதன்னில்
சேர்மதி பெற்றதால் சேல்விழி யாளிடம் சேர்வுற்றேனே.

### 58. தலைவியைக் காண்டல்:

கூட்டத்திற் கண்ணுவைக் கூப்பிட்டுப் பேசச்செய் கொள்கை
வீரர்
வாட்டத்தோ டண்ணன் வருகைக்காய்க் காத்து வருந்தலேபோல்
கூட்டத்திற் கென்றன் குறுகலை நோக்கும் குறியிடத்தில்
வாட்டத்தைப் போக்கும் வதன மதியின்று வாடியதே.

### 59. கலவியின் மகிழ்தல்:

ஆட்சியைக் கைப்பற்றி அண்ணுவின் றுள்வதைக் காணுகின்ற
மாட்சியை யெண்ணியே மாநில மக்கள் மகிழ்வதேபோல்
காட்சியா லென்னைக் கவர்ந்தாளும் யானும் களித்தமைக்குச்
சாட்சியா ரெங்களைச் சார்ந்தவர்க் காரினி சாற்றுவோரே.

### 60. புகழ்தல்:

ஆற்றலா லன்பா லறிவா லெழுத்தா லகிலமெங்கும்
போற்றலா லண்ணுவைப் போலென்றுங் கண்டிடப்
போவதுண்டோ
கூற்றலா லுன்னுடைக் கூர்விழிக் கீடெனக் கோள மீதில்
சாற்றலா கும்பொருள் சார்ந்திடின் ஒன்றேனும் சாற்றுவாயே.

### 61. பாங்கியொடு வருகெனப் பகர்தல்:

நண்ணு ரெனினும் நலிவெது மெண்ணிடா நற்குணங்கொள்
அண்ணுவிந் நாட்டினை ஆள்கின்ரு ராயினும் ஆயிழைநீ
பண்ணுர் மொழியுடைப் பாவையா முன்னுயிர்ப் பாங்கியோடு
நண்ணலே நல்லது நன்னெறி நங்கையே நாடுவாயே.

### 62. பாங்கிற் கூட்டல் :

உலகினர் யாவரும் உள்ளன்போ டண்ணுவை யுன்னுதல்போல்
அலகிலாத் தோழியர் அன்பொடு சேர்ந்தநல் லார்வத்தோடு
நிலமெலா மொன்றிட நண்பொடு நின்னையே நாடிநிற்கும்
நலையணு லங்குநீ சென்றிடல் நேர்மைதான் நீள்விழியே.

## 9. பாங்கி மதியுடன்பாடு.

### 63. தோற்றத் தாலாராய்தல்:

அன்புடன் யாரையும் ஆட்கொளும் பண்புடை அண்ணுநாட்டில்
சென்றிடின் யாதொரு தீமையும் சிந்தையுஞ் சேர்வதுண்டோ
இன்றிவள் பொன்னுடல் இத்தனைப் பொன்றிட ஏதுவேதோ
கன்றிய நெஞ்சமே கன்னியின் நீள்விழி காணுவாயே.

### 64. ஒழுக்கத்தாலையம் தீர்தல்:

தம்பியர் யாவருந் தன்னிக ரற்றநம் மண்ணுதன்னை
எம்பிரான் போலவே எண்ணித் தொழுகின்ரு ரென்னவென்றும்
அம்பிறைத் திங்களை ஆரா தனைச்செயவார்வம்கொள்வாய்
இம்முறைச் சென்றிட எத்தடை வந்ததோ ஏந்திழையே.

### 65. சுனைநயப் புரைத்தல்:

அறிவொடும் அன்பொடும் அண்ணுவின்ருற்றும் அரும்பணிக்காய்
நெறியறி மாந்தர்கள் நேர்பொருள் யாவுமே நேர்வதேபோல்
குறியவாய்ச் செம்மையைக் கூர்வேற் கருமையைக் கொண்ட
தற்காய்
நறியதோர் முல்லையை நல்கிய தோர்சுனை நங்கையெங்கே.

### 66. சுனை வியந்துரைத்தல்:

இல்லையென் பார்க்கெல்லாம் இல்லையென் றெப்போழ்துஞ்
சொல்விடாமல்
ஒல்லும் வகையில் உதவியைச் செய்துவாழ் அண்ணுஊரில்
முல்லையும் நெற்றிமுன் வேர்வும் முருகும் தருவதாலுல்
சொல்லுவாய் நல்லாய் சுனையதில் நானும் சுழலுவேனே.

### 67. தகையணங் குறுத்தல்

நீதியும் நேர்மையும் நேரச்செய் யண்ணுவின் ஆட்சிதன்னில்
ஏதெது மில்லாம லெச்சிறு மாற்றமு மேற்படுமோ ?
கோதைநீ செவ்விழி வெள்ளிதழ்க் கொண்டதென் கூறுவாயோ
மாதுநீ என்னுயிர் மங்கைபோல் வந்தவோர் மாலணங்கே.

### 68. நடுங்க நாட்டம் :

தன்தம்பி யாரேனும் தன்னெறி மாறிடின் தாறுமாருய்
என்தம்பி யல்லன் இவனென் றியம்பிடு மண்ணுகண்போல்
தன்கண் சிவந்த தலைதடு மாற்றங்கொள் தந்தயானை
ஒன்றிந்த ஊரெல்லாம் ஓடி யலைந்து வருவதுண்டே.

### 69. பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுத்தல் :

திராவிட முன்னேற்றக் கட்சியை இங்குளோர் தேர்தல்தன்னில்
ஒருதட மாய்க்கொண்டின் றூராள அண்ணுவை ஓர்ந்ததேபோல்
கருவிடக் கண்ணுடைக் கன்னியின் பாங்கியை நாடிக்கண்டு
மருவிட வாராத மங்கையை வந்திடச் செய்குவமே.

### 70. ஊர் விஞதல் :

செந்தமிழ் நாட்டினைச் சீர்பெற வாளுநற் சிந்தைகொண்டு
வந்தநம் மண்ணுபோல் வஞ்சியீர் இவ்வூர்ப் புதியவன்யான்
சிந்தனை யேதுமே செய்யாதும் மூர்ப்பெயர் செப்பிடுவீர்
வந்தனை செய்குவன் வாட்டம் உமக்கெதும் வந்திடாதே.

### 71. பெயர் விஞதல் :

எண்ணிய எண்ணம் எதையும் ஒளிக்கா தியம்புகின்ற
அண்ணனைப் பெற்ற அருந்தமிழ் நாடுவா ழாயிழையீர்
தண்ணிய லோடும தூர்ப்பெயர் தந்திடீர் என்னினும்நும்
கண்ணியப் பேரா யினுமின் றெனக்காய்க் கழறுவீரே.

### 72. கெடுதி விஞதல் :

போர்க்குப் புறங்கொடா தாயினும் என்னம்பால் புண்ணினைப்பெற்
ரூர்க்குங் களிறென் று பாய்ந்தஞ்சி ஓடிடப் பார்த்ததுண்டோ
யார்க்குங் கெடுதி எதுவுமே எண்ணுத வண்ணுநாட்டின்
ஊர்க்குள் உறையும் உயர்குடி யீரே உரைமின்களே.

### 73. ஒழிந்தது விஞதல்:

எதிர்க்கட்சி யாரிடம் அண்ணு விடுக்கும் விஞலெதற்கும்
எதிர்செப்ப வொண்ணு தெதுவுமே சொல்லா திருப்பதைப்போல்
திகரோனும் நாணும் கயல்விழி கொண்டொளிர் காரிகையீர்
திபலேதுஞ் செப்பாத பான்மைக்கெவ் வேதோ பகருவீரே.

### 74. யாரே இவர் மனத் தெண்ணம் யாதெனல் :

அணங்கினர் யார்க்கு மயர்வெது மேற்படா வண்ணுநாட்டில்
துணிந்துநும் மூரெது பேரெதென் தோணியால் துன்பமுற்றுப்
பணிந்துசெல் யானையைப் பார்த்திரோ சொல்லீர் பதிலையென்று
வணங்குவார் பேரில்குறை கூறுவார் யாரிவர் வாட்டமென்னே.

### 75. எண்ணந் தெளிதல் :

உலகத்து மக்களின் உள்ளத் துணர்வையெல் லாமுணர்ந்து
நலமுற்ற வண்ணுவிந் நாடாளும் தன்மைபோல் நாம்பழகும்
தலமுள்ள யிவ்வண்ணல் தண்ணளி கொண்டே நம்மையலாண்டு
வலமுற்றே நிற்கின்ருர் வாய்மை யிதுவன்றி வாட்டமேதே.

### 76. தலைவன் கையுறை யேந்திவருதல் :

பாவலர் போற்றிடும் பைந்தமிழ் வேந்தராய்ப் பாரையாளக்
காவலர் அண்ணுநம் நாவலர் தம்மொடு போவதேபோல்
பூவலர் காவினில் பூங்கொடி தன்னுடைப் பாங்கியோடு
மேவினுள் காதலை மேவிட நாடுநற் காலமிதே.

### 77. தலைவன் அவ்வகை வினுதல் :

ஆற்றலி னேருரு வான நம் மண்ணு வினையெதிர்த்துத்
தோற்றதா லோடிடுந் தூற்றுவோர் போலவென் தோணிபட்டே
ஆற்றிடா தோடிடு மோர்கலை மானதைக் கண்களாக
ஏற்றுளீர் கண்டிரோ இவ்வழி சாற்றுவீ ரென்றனுக்கே.

### 78. எதிர் மொழி கொடுத்தல் :

சொல்செயல் யாவுமே சோர்வுரு தன்மைகொள் அண்ணுநாட்டு
நல்லியல் மேவிய நம்பிநீர் இங்கு நவின்றதைப்போல்
கொல்லியல் யானையோ கொம்புடை மானோ குருதியோடு
செல்லலை யாம்கண்ட தில்லையே செய்வது யாதினியே.

### 79. இறைவனை நகுதல்

பொற்புடைக் கன்னியே புள்ளிமான் போன்றவென்
பொற்கொடியே
கற்பனை யாற்றலால் காதைகள் சாற்றிடு மண்ணுவைப்போல்
சொற்றிறம் மின்னிடச் சொல்லுமிப் பொய்க்கலை மான்கதைகள்
விற்பனை யாற்றுமிவ் வீரர்தம் மாற்றலை வெல்லுவோமே.

### 80. பாங்கி மதியின் அவரவர் மனக்கருத் துணர்தல் :

அன்புடை நெஞ்சினர் இன்புற வாழவே எண்ணுமண்ணு
நன்குற வாண்டிடும் நாடிதில் நம்மிடை வந்தநம்பி
தன்குறை மானன்று தையலாள் பார்ப்பதிக் காவுமன்று
என்குறை என்பதை இங்கிவர் கண்கள் இயம்பினவே.

## 10. பாங்கியிற்கூட்டம்.

### 81. தலைவன் உட்கோள் சாற்றல் :

மக்களி னுவல் எதுவாயினுமதை மாண்புடனே
அக்கறை கொண்டுடன் ஆற்றி யகமகி மண்ணுவைப்போல்
இக்கண மேயும தெண்ணம் எதனையு மேற்றுசெய்வேன்
எக்குறை சொல்லுவீ ரேந்திழை யீரெனை யாண்டுகொண்டே.

### 82. பாங்கி குலமுறை கிளத்தல் :

அருங்குணம் யாவையும் ஆளுந்தி றமையும் ஆய்வறிவும்
ஒருங்குடை ஏந்தலாம் ஓர்பேர் அறிஞரா மண்ணுவைப்போல்
பெருங்குடித் தோன்றிய பேறுடை யண்ணலே பேதையென்றன்
கருங்குழல் தாழ்குடிக் கண்டபின் தையலைக் காணுவீரே.

### 83. தலைவன்தலைவிதன்னை உயர்த்தல் :

நிலத்துறை மாந்தரில் நீண்டவர் தாழ்ந்தவர் மாறுபாட்டை
நலத்துறை வேண்டுவோர் நானில மீதிலே நாடுவாரோ
கலப்புத் திருமணத் தம்பதி கட்குநம் மண்ணுநாட்டில்
உலப்பில் பரிசுகள் தந்ததை உன்னுவீர் உண்கணீரே;

### 84. பாங்கி யாறியாள் போன்று வினுதல்:

பொங்கும் தமிழால் புனைந்தநம் மண்ணு பெருங்கதைபோல்
எங்கும் எழிலாடு மிவ்வூர் இளமரக் காக்களிலே
தங்கும் விளையாடும் தையல்மார் தங்களுள் தாங்கள்கொண்ட
தங்கம் எவளோ தகுதிதா னென்னவோ சாற்றுவீரே.

### 85. இறையோன் இறைவியின் தன்மை இயம்பல்:

மிடுக்கு நடையாள் மிடைந்த தொடையாள் மிலைமுலையாள்
துடுக்கு மொழியாள் துடித்த உதடாள் துடியிடையாள்
சொடுக்கு விழியாள் சுடர்த்த நுதலாள் சுருங்கச்சொல்லின்
அடுக்கு மொழியால் அழகுற்ற அண்ணுவின் செந்தமிழே.

### 86. பாங்கி தலைவிய தருமை சாற்றல் :

உதயனைத் தன்சின்ன மாயுற்ற வண்ணுவுன் கற்பனைக்கும்
உதயமா காதவோர் பேரெழில் உற்றவள் கண்முகத்தே
உதயனுந் திங்களும் ஒன்றியே உள்ளனர் உம்மையுற்ற
மதனையும் வென்றிடீர் மங்கையை வெல்லுவ தெங்ஙனமே.

### 87. தலைவன் இன்றியமையாமை கூறல் :

பாங்கியே வும்முரை பான்மைதா னுயினும் பாரையண்ணு
தாங்கியே நிற்கின்ற தன்மைபோல தையலு மென்னுயிரைத்
தாங்கியே நிற்கின்ருள் தண்ணளி செய்யத் தவறுவீரேல்
வாங்குவீ ரென்னுயிர் வாகையைச் சூடிப்பின் வைதிடீரே.

### 88. பாங்கி நின்குறை நீயே சென்றுரை யென்றல் :

தம்பியர் யாரும் தமக்கோர் குறைவரின் தாமேசென்று
நம்பியர் வேந்தன மண்ணு விடமே நவில்வதைப்போல்
நம்பியே நீருமே நங்கைமுன் ஞல்போய் நவின்றுமது
குப்பிடைப் போடுவீர் கோதையைத் தேடுவீர் கூடுவீரே.

### 89. பாங்கியைத் தலைவன் பழித்தல் :

சிலவேளை நம்மண்ணு தன்சிந்தை நேராகச் செப்பிடாமல்
உலாவந்து சுற்றி உரைத்திடுஞ் சூழலை நீயுணர்வாய்
உலோபி உனையின் றிரந்துபின் நின்றயா ஞரமையல்லேன்
கலாப மயிலே கனமுகில் கண்டாற் களித்திடுமே.

### 90. பாங்கி பேதமை யூட்டல் :

செந்தமிழ் நாடுவாழ் மாணவர் சிந்தையை நன்குணர்ந்தே
இந்தியை ஓட்டிய ஏந்தலா மண்ணுவின் ஆற்றலெல்லாம்
வந்திட வாள்விழி யாட்கு வயதினும் வாய்க்கவில்லை
நுந்தம துள்ளநோய் நீக்கிடு நுட்பமுமிலலவட்கே.

### 91. காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல் :

திரைசூ ழுலகத் தறிவெலா மொன்ருய்த் திரண்டுருண்ட
உருவா யமைந்தநம் மண்ணு உறையுமிந் நாட்டிலுற்ற
கருவும் உறுமே கரையில் லறிவைக் கனிமொழியே
மருவுமென் மங்கையின் மாண்பினைத் தாழ்த்திய மாயமென்னே.

### 92. பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்

பல்லா ரறிவையும் பற்றிய வண்ணுவாழ் பாரிதனில்
எல்லா வறிவுமே என்றன் தலைவிக் கிருப்பதாகப்
பொல்லாத தலைவரே புல்லினீர் போலப் புகழ்ந்துரைத்தீர்
நல்லா ளவளை நீர் நானின்றி முன்போல நாடுவீரே.

### 93. தன்னிலை தலைவன் சாற்றல் :

தன்னைப் பகைத்தோர் தமக்குமே தண்ணளி செய்யுமண்ணு
தன்னை வளர்த்த தமிழகந் தன்னில் தவழுநங்காய்
என்னைப் பகைக்க இதுவோ சமயம் எழிலரசி
என்னைத் தழுவா தொழியின் எனதுயிர் எவ்விடமே.

### 94. பாங்கி உலகியலுரைத்தல் :

திருமணச் சட்டத்தைச் சீர்திருத் தம்செய்த வண்ணுநாட்டில்
கருமணற் கூந்தலாள் என்னுடையக் கன்னியும் காளை நீரும்
ஒருமனப் பட்டனிர் ஒன்றினிர் என்ருல்நம் சுற்றமுன்னர்
திருமணம் செய்துபின் செம்மையாய் வாழ்வீர் திருவினுடே.

## 95. தலைமகன் மறுத்தல் :

உன்னுடை எண்ணம்போல் ஓரிரு திங்கட்குள் உண்கணளை
என்னுடை வீட்டவ ளாக்குவேன் ஏந்திழை இஃதுறுதி
சொன்னதைச் செய்கையில் காட்டிடச் சோர்ந்திடா வண்ணவைப் போல்
என்னையு மெண்ணியென் ஏருயிர் காத்திட எண்ணுவாயே.

## 96. பாங்கி யஞ்சி யச்சுறுத்தல் :

யாரு மறியுமா றண்ணாபிந் நாட்டினை யாளுநாளில்
ஆரு மறியாம லாயிழை யாளை நீ ராளவந்தீர்
மேரு மறியாத மீளியா ரெம்மவர் மேவுமுன்னே
ஊரு மறியாமல் பேரு முணராம லோடுவீரே.

## 97. தலைவன் கையுறை புகழ்தல் :

குறுகிய நோக்கமில் கொள்கையர் யாவரும் சேர்ந்துகொண்ட
அறுபதா மாண்டு பிறந்த விழாவிலு மண்ணகாணப்
பெறுதலு மில்லாப் பெருமைகொள் என்தழைப் பேற்றை யெண்ணி
நறுநுதல் நங்கையீர் நான்கொண்டு வந்ததை நாடுவீரே.

## 98. பாங்கி கையுறை மறுத்தல் :

இன்மையே இல்லாமல் என்றுமே செய்திடு மண்ணதிட்டம்
மென்மையே தந்தாலும் மேன்மைதா னென்றாலும் மேவிடாத
நன்மையே வந்தாலும் நாடார் சிலரிங்கே நாட்டிலுள்ளார்
புன்மையே கண்டவர் போற்றிடார் நும்தழை பொற்கொடிக்கே.

## 99. ஆற்ற நெஞ்சினோடவன் புலத்தல் :

அன்பும் தயையும் அருளும் மிகக்கொண்டவண்ண நாட்டும்
வன்பும் குறையும் வசையும் மிகக்கொண்ட வஞ்சியீர் நீர்
இன்பம் தருமெம் இணையில் தழையினை ஏற்றிடீரேல்
முன்பெம் முயிரை முடித்திட லாவது முந்துவீரே.

## 100. பாங்கி ஆற்றுவித்தகற்றல் :

முத்தமிழ்ப் பேற்றினை நித்தமும் போற்றிடு மண்ணநாட்டில்
எத்துணைச் சீருடைத் தென்னினு மேற்றிடா வேந்திழைக்கும்
பித்தினைச் சேர்த்திராப் பேச்சில் இறைஞ்சுவேன் பேதுறுதீர்
சித்தியே நாளைநும் கையுறை சேயிழைக் கையிலேயே.

## 101. மடலே பொருளென மதித்தல் :

இடரேது மில்லாமல் எல்லார்க்கு மின்பமே ஈட்டுவிக்கும்
அடலேறு போன்றநம் அண்ண இனிதாக வாளும்போது
மடமாது நம்முடை மங்கையைக் கூட்ட மறுப்பளாகில்
மடலேறு மோர்பேர் மருந்தன்றி வேறுண்டோ மாற்றுநெஞ்சே.

### 102. பாங்கிக்குலகின் மேல்வைத்துரைத்தல் :

பழந்தமிழ்ப் பண்பாட்டைப் பாரெங்கும் சாற்றியிப்
பாரையாண்டே
உழந்திடும் மக்களுக் குற்சாக மூட்டிவாழ் அண்ணாநாட்டில்
சுழன்றிடுங் காளையர் சோர்வுற யாருமே சூழ்ச்சிசெய்யின்
அழன்றிடா தூர்வர் கிழியொடு மாமட லாரணங்கே.

### 103. அம்மட லேற்றினைத் தலைவன் தன்மேல் வைத்துச்சாற்றல் :

ஆர்குறை கூறினும் ஓர்ந்ததை மாற்றிடு மண்ணாநாட்டில்
நேர்முறை வேண்டியும் கூர்மதி கொண்டிடீர் நீள்விழியீர்
நீருறை ஊரிலே நாளையே ஊருவேன் நீள்மடல்மேல்
யார்குறை என்பதை யாவரு மெண்ணுவார் யாதினியே.

### 104. பாங்கி தலைமகள் அவயவத்தருமை சாற்றல் :

ஒல்லாத மாவூரு முன்னே கிழியொன்றி லொண்டொடியின்
இல்லாத வோரிடை சொல்லாத பேருரை ஏற்றுவீரோ
பொல்லாத வல்லோரும் போற்றுமா றண்ணாவின் ருளும்போது
வெல்லாத சொல்சொன்னீர் வேண்டுவீ ராயினும் வேல்விழியே,

### 105. தலைவன் தன்னைத்தானே புகழ்தல்:

எல்லாக் கலையிலும் வல்லவ ளுயுள்ள வண்ணாநாட்டில்
கல்லாக் கலையெது கன்னியே சொல்லுவாய் காரிகையின்
இல்லா இடையையும் சொல்லா உரையையும் ஓர்ந்தவன்யான்
ஒல்லா ததுவென ஒன்றுமே யில்லெனக் கெண்ணுவாயே.

### 106. பாங்கி அருளியல் கிளத்தல் :

மாநிலம் வாழ்ந்திடும் மக்கள் தமக்காக மட்டுமன்றி
யாநிலம் வாழ்பவை யாவைக்கு மின்பமே யெண்ணுமண்ணா
நானில மாள்கையில் மாமட லேறிட நாடுவீரேல்
வானில மாய்க்கொண்டு வாழ்ந்திடும் புட்களை வாட்டுவீரே.

### 107. கொண்டு நிலைகூறல் :

தெருளா மனிதரும் திட்பம் பெறவே திருத்தியாளும்
அருளே உருவான அண்ணா வனையவென் னுயிழையாள்
அருளா ளுமக்கெனின் அன்பரே பெண்ணை நீர் ஆய்ந்துசெய்யும்
உருளா மடலினை ஊருவீர் பின்பிந்த ஊர் நடுவே.

### 108 தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற் குணர்த்தல் :

அரும்பிய மீசைகொள் ஆணழ காவுன்றன் ஆர்வத்தாலே
பெரும்பய னுற்றிடும் பேரறி வாளண மண்ணாநாட்டில்
அரும்பினைப் பூவாய்க் குரும்பையைத் தேங்காயாய்
ஆய்ந்துகொண்டு
விரும்பினை யாயினும் வேல்விழி யாளிடம் வேட்கையேதே.

### 109. தலைவன் தலைவி வருந்திய வண்ணமுரைத்தல்:

கூற்றுரும் கூர்விழி கொண்டவள் என்னையும் கொல்வதற்கு
மாற்றுரைச் சொல்லாம்பால் மாண்டிடச் செய்யும் நம் மண்ணே
கண்ணே
ஏற்றுரைக் கண்ணம்பால் ஈர்த்துவீழ்த் தாற்றலை
ஏற்றுக்கொண்டாள்
ஆற்றுரை வெல்லுதல் ஆயிழாய் நந்தமிழ்ப் பண்பாடன்றே.

### 110. பாங்கி தலைமகள் செவ்வியருமை செப்பல்:

நயனுறு செவ்வியை நம்பிரா னண்ணபால் நாடிச்சென்று
வயமுறு தம்பியர் வாடுவர் அவ்வணம் வார்குழற்கும்
பயனுறச் செப்பலா மென்றாலோ பாவையாள் பந்துமாடாள்
புயலுறு சோலையும் போந்திடாள் பூவெதுஞ் சூடிடாளே,

### 111. தலைவன் செவ்வி யெளிமை செப்பல்:

நாநலங் கொண்டு நயம்பட அண்ணயிந் நாட்டையாள
நானில மக்களுள் வாடுவா ருண்டுகொல் நங்கைநீயிக்
காநிலத் தோர்காளை கண்டதாய்க் கூறிடின் கன்னியாள்தன்
கானிலந் தோய்ந்திடா துன்னையுங் கட்டிக்கொண்டாடுவாளே.

### 112. என்னை மறைத்தபின் எளியதென நகுதல்:

தமிழும் தமிழ்நாடும் தாம்செய் தவத்தால் ஒருங்குறினும்
அமிழ்தே எனத்தகும் அண்ண அரசின்றேல் ஆய்ந்துபாரீர்
கமழுங் குழலாளும் காளையீர் நீரும் கருதினுலும்
நமதின் னுதவியை நாடிடீர் ஆயின் நடப்பதென்னே.

### 113. அந்நகை பொருதவன் புலம்பல்:

தஞ்சம் அடைவாரைத் தன்கண்போற் காப்பாற்று
மண்ணநாட்டில்
வஞ்சியின் வேற்பட்டு வாடிப்பின் னுடியே வந்தவென்னை
அஞ்சிடா யென்றே வபய மளிக்காதுன் புன்னகையால்
செஞ்சரப் புண்ணிலே வெஞ்சரம் சேர்த்ததேன் வேல்விழியே.

### 114. பாங்கி தலைவனைத் தேற்றல்:

தேடியே வந்தவர் தெவ்வரே யாயினும் தேர்தல்கூறும்
நாடிதை யாள்பவர் நம்மண்ண என்பதால் நானுமுங்கள்
வாடிய தன்மையை வஞ்சியாள் தன்னிடம் வாய்ப்பக்கூறி
கூடிய சீக்கிரம் நும்குறை போக்குவேன் கோபமேனே,

### 115. பாங்கி கையுறை யேற்றல்:

தங்குறை நீங்கிட நந்தமிழ் மக்கள்தம் மாட்சிதன்னை
நங்குணக் குன்றின ரண்ணுபால் சேர்ப்பதை நாடிவென்ருர்
நுங்குறை தீர்ந்திட நுங்கை யுறைதன்னை நுண்ணிடையாள்
தங்கையிற் சேர்த்திடத் தையல் எனைவென்றீர் தக்கதொன்றே.

### 116. கிழவோனுற்றல் :

தமிழ்நா டெனும்பெயர் இந்நாட் டரசியல் சட்டந்தன்னில்
கமழவே பெற்றதைக் கண்டுநம் மண்ணு களித்ததேபோல்
அமிழ்தனை யாயுன்றன் அன்புடை சொற்கேட் டகமகிழ்ந்தேன்
இமிழ்கடல் வேலியில் யாரினி யென்னை யெதிர்ப்பவரே.

### 117. இறைவன்றனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன் குறையுணர்த்தல்:

நாளும் வளரும் நமதண்ணு நாடுகாண் நன்மையேபோல்
நாளும் வளரும் நகிலேந்து நங்கையே நம்புனத்தெந்
நாளும் வருவார் நலிவெதும் நம்பால் நவின்றிடாமல்
நாளும் வருமிந்த நாடகம் நல்லதோ நம்பியார்க்கே.

### 118. இறைவியறியாள் போன்று குறியாள் கூறல் :

நாடகம் கட்டுரை நாவல் சிறுகதை நாநலங்கள்
ஏடகம் ஏற்றியே எல்லா ரிசையுங்கொள் ஏந்தலண்ணு
நாடிதை யாள்வதால் நன்மைகொள் பாவையே நாமினிதாய்ப்
பாடுகம் வாவினிப் பைந்தமிழ்த் தாயினைப் பாட்டிசைத்தே.

### 119. பாங்கி இறையோற் கண்டமை பகர்தல்:

நாடகம் ஆடுவார் நாட்டையும் ஆளுவார் நன்ருயென்று
நாடிதில் கூறி நடிகர்கள் கொண்டுமாள் அண்ணு நாட்டில்
ஆடவும் பாடவும் ஆரை அழைக்கின்ரு யாரணங்கே
ஆடவன் வந்தவன் அன்றுனை மானெனத் தேடினேனே.

### 120. பாங்கியைத் தலைவி மறைத்தல்:

அயல்நாட்டா ரண்ணுவின் ஆட்சியைக் கண்டு வியப்பதேபோல்
வயற்காட்டுப் பக்கம்நாம் வந்ததைப் பார்த்தங்கு வந்துசேர்ந்து
மயல்கூட்டும் நம்மார் எழில்கண்டு மாழ்கியே நின்றவரின்
இயல்காட்டி என்றனை வாட்டுதல்எற்றுக்கோ வேந்திழையே.

### 121. பாங்கி என்னை மறைப்பதென்னெனத்தழால் :

நம்பிய மக்களுக் கென்றுமே நற்பணி யாற்றுகின்ற
தம்பியர்க் கண்ணுபோல் நீயென தாருயி ராயிருந்தும்
தெம்பொடு நேர்ந்ததைச் செப்பிடா தென்னை மறைத்துரைக்கும்
நம்பிடாத் தன்மையை நாணமோ தந்ததென் நாயகியே.

### 122. பாங்கி கையுறை புகழ்தல்:

அகில உலகத்து மண்ணுவைப் போலோர் அறிஞர்காணப்
புகினு மியலுமோ பூங்கொடி சொல்லுவாய் இப்புவிக்கண்
தகுதி உடைய தலைவன் உனக்குத் தருந்தழையின்
மிகுதி எதுவு மிருந்திட மேவுமோ எண்ணுவாயே.

### 123. தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்:

வானும் வணங்கும் வளம்பல வாய்த்தநம் மண்ணுநாட்டில்
நானும் மடவன்னம் நீயும் நடைபயில் நம்புனத்தே
மானும் பிணையும் மலர்த்தே னளியும் மயக்கமூட்ட
ஊனும் உருகுமா றென்னைக் கடைக்கணு லோர்ந்தனரே.

### 124. மறுத்தற்கருமை மாட்டல்:

தம்மைப் புகழ்ந்தித் தரணிவாழ் யாவரும் போற்றும்போது
நம்மை அறிஞறே றண்ணுபோல் நாணுமென் நாயகியே
வெம்மை மனங்கொள வேட்கையால் வாடிடும் வெய்யவற்கு
நம்மை மறைத்தினி எங்குநாம் செல்லுவோம் நாடுவாயே.

### 125. தலைவன் குறிப்பு வேருக நெறிப்பட கூறல்:

எண்ணு இயல்புகள் எத்துணை ஏற்பினும் இந்த நாட்டில்
அண்ணு எதிர்த்தால் எதிரிகள் வாழ்வாரோ ஆய்ந்துபாராய்
பண்ணு ளுனையே பகலிர வெலலாம் பயின்று பார்த்தும்
ஒண்ணு தெனுமோர் நிலைவரின் உத்தமர்க் கோர்மடலே.

### 126. தோழி தலைவியை முனிதல்:

ஆளும் திறமை எனக்கிலை யென்ருலென் ஞட்சியையெந்
நாளும் துறந்திட நாணிடே னென்றுரை யண்ணு நாட்டில்
கோளும் அலருமே கூறிடாக் கோதையர்க் கொண்டுனது
நீளும் கதையினை நீயேகாண் நானின்றி நேரிழையே,

### 127. தலைவி பாங்கியை முனிதல்:

செம்முறை யாட்சியில் செந்தமிழ் சேர்த்திடு மண்ணுநாட்டில்
மும்முறை என்னை முயங்கிய நம்பியே யிம்முறைக்கு
நம்முறை தோழியை நாடிய தாலன்றே நல்லவளும்
எம்முறை நாணினை எண்ணியும் பாரா தெதிர்த்தனளே.

### 128. தலைவி கையுறை ஏற்றல்:

நல்லவர் நம்மண்ணு நல்லதே செய்யினும் நாட்டிலுள்ள
பொல்லவர் புன்மையர் பொல்லாங்கு சொல்லல்போல் பூவையேயென்
வல்லவர் கையுறை வாங்கிடின் காதலில் வாய்மைகாணு
இல்லவர் தூற்றுவர் என்னினு மித்தழை யென்னுயிரே.

**129. இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்:**

தம்பியர் அண்ணுவின் நூல்களைத் தாமாக வாங்குதல்போல்
நம்முடை நாயகி நம்பி நீர் தந்த நறுந்தழையை
விம்மிய கொம்மையும் வீங்கிய கொவ்வையும் வேர்க்குமாறு
எம்மிடை வாங்கியே ஏந்திஞள் எங்கெங்கோ சார்த்திஞளே.

**130. பாங்கி தலைமகற்குக் குறியிடம் கூறல்:**

இடுப்பொடி பட்டின் றெதிர்க்கட்சி யாயுள்ளோ ரேந்திநின்ற
தடிக்கடி பட்டாலுந் தம்பியர் முன்பாகத் தாமேசென்று
அடிக்கடி அண்ணுதன் கூட்டம் நடத்துமப் பக்கமேதான்
படிப்படி யாகவே பாவையும் யானும் பயில்பொழிலே.

**131. பாங்கி குறியிடத் திறைவியைக்கொண்டு சேறல்:**

இயலிசை நாடகம் யாவையும் நாடுமென் ஏந்திழையே
குயிலிசை நாடொறும் கூவிடும் நாம்பயில் பூம்பொழிற்குத்
தயவுசெய் தென்னேடு தப்பாது வந்திடு தட்டிடாமல்
அயலிலே இன்றுநம் மண்ணுவும் சொற்பொழி வாற்றுவாரே.

**132. பாங்கி தலைமகளைக் குறியிடத் துய்த்து நீங்கல்:**

ஞாயிறு போன்றநம் அண்ணுவின் பேச்சிலே நாட்டங்கொண்ட
ஆயிர மாயிரம் ஆடவர் பெண்டிரோ டார்வத்தோடு
போயிடுங் காட்சியை யோர்நொடிப் போழ்திலே பார்த்துவாரேன்
ஆயிழை நீயிங் கதுவரைக் காத்திரு அஞ்சிடாதே.

**133. இறைவி இறையோனிடத் தெதிர்ப்படுதல்:**

தெக்கணம் வாழ்ந்திடும் செந்தமிழ்ப் பேசிடும் சீர்மையுற்ற
மக்களின் துன்பங்கள் யாவையும் மங்கிடச் செய்வதற்குத்
தக்கவன் அண்ணு ஒருவன்தான் தையல்நீ யீங்கவன் போல்
இக்கணம் தோன்றிஞய் என்துயர் யாவையும் போக்கிஞயே.

**134. புணர்ச்சியின் மகிழ்தல்:**

வான்புகழ் செந்தமிழ் வாழ்ந்திட வாழுநம் மண்ணுநாட்டில்
நான்புகழ் நங்கையே நானில மீதினில் நானும்வாழ
தேன் கமழ் பூம்பொழில் தீஞ்சுவைத் தேங்குழல் நீயும் வந்தாய்
ஊன்கமழ் கள்ளினை உண்டனம் நான்முறை யொன்றிஞேமே.

**135. புகழ்தல்:**

கண்ணு ளுனது கனியிதழ் ஊறிடுங் கள்ளைக்கொண்டே
நண்ணு ரெனினும் நயந்திடுந் தன்மையில் நாநலங்கொள்
அண்ணு வெழுதிய பண்ணுர் மொழிகளி லாழ்ந்தபோதும்
எண்ணு மகிழ்வினை எவ்வணந் தந்தனை யென்றனுக்கே.

**136. தலைமகளைத் தலைமகன் விடுத்தல்:**

கோட்டைக்குள் சென்றிந்த நாட்டைத் தானுளினுங்
கொண்ட கொள்கைப்
பாட்டைக்குள் என்றுந்தன் பாதையே சென்றிடு
மீண்ணுவைப்போல்
தேட்டைக்கொள் என்னிடம் தேன்மழை பெய்வதில்
தேர்ந்த பின்னும்
வீட்டைக்கொள் தன்மையில் வேட்கைகொள் ளாயம்சேர்
வேல்விழியே.

**137. பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல்:**

விழிப்புற்ற மாந்தர்கள் வீணரா ளாட்சியை மாற்றுமாறு
பொழில்பக்க மாயண்ணு சொற்பொழி வாற்றினர்
போதைகொண்டேன்
எழில்மிக்க தோற்றங்கொள் ஏந்திழாய் என்னையும்
நான்மறந்தேன்
மொழிப்பற்று மூட்டுமோர் நூலிதும் வாங்கினேன் மோனமேனே.

**138. பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல்:**

அறிவும் பரிவும் அழகும் ஒருங்குடை யண்ணு பேச்சில்
செறியும் கருத்தினைச் சிந்தையில் சேர்க்கும்நம் செல்விமார்கள்
மறையும் முனமே மதிமுக மங்கையே நம்மனையோர்
உறையும் இடந்தனை நாமும் உறுவோம் விரைவிலேயே.

**139. பாங்கி தலைவியை நீங்கி தலைவற்கோம்படை சாற்றல்:**

நேரிழை யாளை நீர் நேர்ந்திடவேயெனை நேற்றுமின்றும்
பாரிதில் யார்க்கும் பணியீ ரெனினும் பணிந்து நின்றீர்
ஆரினும் பேரருள் காட்டிடு மண்ணுவாழ் நாட்டிலுள்ள
ஊரிதை என்றும் மறந்திடா தென்னிலை யுன்னுவீரே.

**140. உலகியல் மேம்படவிருந்து விலக்கல்:**

செல்விருந் தோம்பி வருவிருந் தோர்ந்திடும் அண்ணுநாட்டில்
மல்கிய வல்சியுள் ஊன்பெய்த நெய்ச்சோறும் மீனும்தேனும்
செல்விய ரெம்குடில் சேல்விழி யாளிடத் தங்கியுண்டு
செல்லுதல் எங்ஙனம் தங்களுக் கின்னலைச் சேர்த்திடுமே.

**141. விருந்திறை விரும்பல்:**

சொல்லிட வெண்ணிய சொல்லைச் சுவையாக்கிச் சொக்கவைக்கும்
வல்லமை கொண்டநம் மண்ணுவாழ் நாளிலே வாழுகின்ற
மெல்லிய வஞ்சியீர் மீன்பாகைத் தேன்பாகா யாக்கிட நீர்
வல்லமை கொண்டதை வாழ்த்துதல் தேவையோ சொல்லுவீரே.

## 11. ஒரு சார் பகற்குறி.

### 142. கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி பொழுது கண்டிரங்கல்:

பாதகம் செய்தவர் பாலும் பகைகொள்ளா வண்ணுநாட்டில்
ஆதவன் பாலிந்தத் தாமரை யாள் செய்த பாவமென்னே
மாதுயான் துன்புற மாலையைத் தந்ததோ மாய்கின்ருனே
வேதனை வென்றிட வோர்வழி விள்ளுவாய் வேல்விழியே.

### 143. பாங்கி புலம்பல்:

தம்பியர் தம்மண்ணு தம்மைப் பிரிந்திடின் வாடுதல்போல்
செம்பிறை நெற்றியாள் சிந்தை நெகிழ்ந்தனள் செம்மலின்றிக்
கொம்பிவள் தன்முகங் கொண்டுதன் காதலி வென்றளென்ருே
வெம்பிய வேளையில் வெய்யவன் மாலையை வேண்டினனே.

### 144. தலைவன் நீடத் தலைவி வருந்தல்:

வன்புள்ளங் கொள்ளாது வாய்மை வழிசெல்லு மண்ணுநாட்டில்
அன்புள்ளங் கொண்டநம் மாயத்தா னெல்லாரு மங்குமிங்குஞ்
சென்றுள்ள நல்வேளை சேர்ந்ததே யாயினுஞ் செம்மலிங்கே
இன்றின்னுங் காணுமே என்னவோ காரணம் ஏங்குவேனே.

### 145. தலைவியைப் பாங்கி கழறல்:

எழிலின் உருவாய் பொழிலின் மருவிய பூங்கொடியே
அழலின் மெழுகா யவர்பிரி வாலின் றழிவதேனே
பழகின் பிரியா பழக்கங்கொள் ளண்ணுயிப் பாரையாள
அழிவும் வருமோ பழியும் தருமோ வயர்வதென்னே.

### 146. தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்:

இன் துணை யாயினுர் ஏந்திழை நீங்கிடின் என்ன நேரும்
என்பதை எண்ணிடாத் தன்மையில் என்னையும் ஏசுவோர்கள்
அன்புடை யண்ணுவின் ஆணையைக் கேளாது மாறிசென்று
பின்புடை யின்னலைப் பேணுத தன்மைகொள் பேதையோரே.

### 147. தலைவி பாங்கியொடு பகர்தல்:

என்மனந் துன்புறுந் தன்மையைச் சற்றுமே யெண்ணிடாமல்
இன்பமே தந்தவர் துன்பமும் தந்ததேன் எந்தநாளும்
மன்பதை யாவர்க்கும நன்மையே நாடும்நம்மண்ணுநாட்டில்
கன்மனங் கொண்டவர் காண்டலுங் கூடுமோ காரிகையே.

### 148. தலைவியைப் பாங்கி யச்சுறுத்தல்:

தென்னக மாண்டிடுஞ் செந்தமிழ் வேந்தனு மண்ணுநாட்டில்
உன்னக மாண்டிடு முத்தமர்க் காகநீ வுள்ளழிந்தால
என்னக மாண்டிடு மேந்திழாய் நமகத் தன்னைமார்கள்
நின்னக மாண்டிட நேருமே என்றுதா னஞ்சுவேனே.

149. நீங்கற்கருமை நினைந்திரங்கல்:

இந்நிலத் தெங்கணுந் தன்புகழ் மேவுமா றேற்றங்கொண்ட
செந்தமிழ்த் தாயைநம் மண்ணுதன் சிந்தைக்குள்
சேர்த்ததேபோல்
பைந்தொடி யென்னையும் பண்ணவன் தன்னுடைப்
பக்கமொன்றில்
சொந்தமாய்ச் சேர்க்குமோர் விந்தையைக் கண்டிடின்
சோர்ந்திடேனே.

150. தலைவிக்கவன் வரல் பாங்கி சாற்றல்:

வண்மையும் திண்மையும் வாய்மையும் வாய்த்தநம் மண்ணுட்டில்
உண்மையில் செய்தவ முற்றவர் உன்னையே உற்றவர்தான
பெண்மையும் நாணமும் பீடுற நண்ணிய பேதைநீயும்
அண்மையில் பாரதோ அண்ணலின் ஈயல்தான் ஐயமேதே.

151. தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்:

பொழிலினைச் சூழ்ந்த புனக்கதிர் சூல்முற்றிப் போனதாலே
எழிலினை ஏந்திஞெரெல்லாரு மில்லிற்கே யேகுவாரால்
உழவினை எங்குமே ஊக்கி வளர்த்திடும் மண்ணுவூரில்
பழகிய பண்பினர் பைந்தொடி பார்த்திடப் பாதையேதே.

152. தோழி தலைமகற்கு முன்னிலைப்புறமொழி
மொழிந்தறிவுறுத்தல்:

நறும்பொழில் சூழ்ந்திடும் நாகிளம் பூவைகாள் கோகிலங்காள்
நறுந்தமிழ் யாங்கணும் நாட்டியபேருடை யண்ணுநாட்டில்
சிறந்தநற் பண்புகொள் செம்மலே தாம்கொண்ட சேயிழையை
மறந்திடல் செய்தாலும் நீவீர் சிறிதும் மறந்திடீரே.

153. பாங்கி தலைமகன் முன்னின்றுணர்த்தல்:

மோதிரம் மாற்றியும் முல்லையை மாட்டியும் மூண்டுநின்ற
ஆதரம் சாற்றியெம் மாயிழை யாண்டபே ராண்டகையீர்
மாதரைப் போற்றிடும் மாண்புடை யண்ணுவாழ் நாட்டிலின்றெம்
சோதரர் சூழுவர் சோலையின் சூழலில் சூற்கதிர்க்கே.

154. பாங்கி முன்னின்றுணர்த்தி யோம்படை சாற்றல்:

சீரா ரமிழ்தமாஞ் செந்தமிழ் போற்றிய சீர்மைகண்டு
பாரா ரனைவரும் பாராட்டு மண்ணுவாழ் நாடுறைவீர்
ஏரா ரணங்கனை யேந்திழை யாளை நீ ரேற்றுவாழத்
தேரா தமைந்திடின் தேமொழி யிந்நிலந் தேர்வதேதே.

155. கிழவோன் தஞ்சம் பெருது நெஞ்சோடு கிளத்தல்:

முத்தமிழ் வேந்தனும் அண்ணு மொழிந்திடும் மோனைப்பேச்சை
எத்துணை இன்னல்கள் நேரினும் இந்நாட்டுத் தம்பிமார்கள்
நத்திடா தார்வரோ நெஞ்சமே நங்கையை நாடிடாமல்
ஏத்தனை நாழிகை என்னுயிர் இந்நிலம் எண்ணுவாயே.

## 12. பகற்குறி யிடையீடு.

### 156. இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல் :

நந்தமிழ் நாட்டுறை நற்பொருள் நானிலத் தெவ்விடத்தும்
நந்திடாத் தன்மையில் நாடாளு மண்ணுபோல் நங்கைதன்னை
எந்தம தன்னைமார் இல்லத்துட் காப்பதா லெந்தபோழ்தும்
வந்துமை பார்த்திட வார்குழற் கில்லையால் வாடுவாளே.

### 157. இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல் :

எண்ணிய யெண்ணியாங் கெய்துதற் கேற்ற கடமையேந்திக்
கண்ணிய கட்டுடன் காசினி யாண்டிடு மண்ணு நாட்டில்
எண்ணிய வண்ணமே ஏந்தலைக் கொண்டிட ஏலுமேனும்
கண்ணிய வன்னைமார் காவலைக் காணுவாய் காரிகையே.

### 158. இறைமகள் ஆடிடம் நோக்கி அழிதல் :

கூடிய கூட்டமே கொள்கையைக் கூறிடக் கொள்ளுமண்ணு
நாடிய நாட்டினில் நங்கையர் தம்மொடும் நம்பியோடும்
ஆடிய ஆட்டமும் கூடிய கூட்டமும் நாடிநாடி
வாடிய வாட்டமே வஞ்சியேன் கொண்டிட வாய்த்ததென்னே.

### 159. பாங்கி ஆடிடம் விடுத்துக் கொண்டகறல் :

எவர்க்கும் எளிதிலே யெட்டாத ஏல்தந்த ஏற்றந்தன்னை
உவக்கும் பொழுதிலு மண்ணுவி னுள்ளத்துட் தம்பிமார்போல்
இவட்கும் இதண்காண் இதயத்து ளெப்போழ்து மேந்தலேதான்
அவர்க்கும் அறைவீரின் றையன்மா ராணையா லேகிறேமே.

### 160. பின்னல் நெடுந்தகை குறிவயின் நீடுசென் றிரங்கல் :

அமெரிக்கா சென்றாலு மண்ணுதன் னுள்ளத் தருந்தமிழ்போல்
தமரிக்கா வந்தாலுந் தையலாள் தானேயென் நெஞ்சத்துள்ளாள்
தமரிக்காத் தத்தைகாள் தாவிடா நவ்விகாள் தாழ்குழல்கொள்
குமரிக்காக் கண்டிரோ கூறுவீர் கூற்றெனைக் கொள்ளுமுன்னே.

### 161. தலைவன் வறுங்கள நாடி மறுகல் :

அஞ்சாத நெஞ்சன் அழகிரி சாமியை யெண்ணியெண்ணி
நெஞ்சாரத் துன்புறு மண்ணுபோ லென்னஞ்சும் நெக்குருக
மஞ்சாடு பைஞ்சோலை மஞ்ஞைகாள் நும்மனை மாதரார்கள்
நஞ்சார லெண்ணுது நாடிய தெங்கண் நவிலுவீரே.

### 162. குறுந்தொடி வாழூர் நோக்கி மதிமயங்கல் :

மங்குல் திகழ்ந்தெங்கும் மாதமும் மாரி பொழிவதாலே
எங்கும் புகழ்தங்கு மேற்றம் மிகுந்தநம் மண்ணுநாட்டில்
பொங்கும் எழில்தங்கிப் பூரித்த வங்கங்கொள் பூங்கொடியாள்
தங்கும் இடமெங்கோ தையலூர் நோக்கித் தவிக்கின்றேனே.

# 13. இரவுக்குறி

## 163. இறையோ னிருட் குறி வேண்டல் :

தொகைவுற மேகங்கள் தோன்றிய தன்மையால் தொல்லையுற்ருேம்
பகைவரே யாயினும் பாசங்கொள் ளண்ணுவைப் போலவென்றும்
நகைதரு நங்கையீர் நாங்களிக் கங்குலும் நல்விருந்தாய்த்
தகைவுறத் தங்கிடின் லேந்திடுந் தாழ்வெதோ சாற்றுவீரே.

## 164. பாங்கி நெறியின தருமை கூறல் :

மருட்சி எதனுலும் மாறிடா தண்ணுவை யென்றும்போற்றும்
புரட்சி நடிகரைப் போன்றநற் சிங்கங்க ளெங்கும்போகுந்
திரட்சியைக் கண்டிடின் தீரரு மஞ்சுவார் தேர்ந்துகொள்வீர்
வெருட்சியே கொண்டிடா வேல்வழி யாரெம்மூர் வேண்டுமுன்னே

## 165. இறையோன் நெறியின தெளிமை கூறல் :

ஓரறி வேகொள் ளுயிர்கூட உத்தமர்க் கூறிழைக்காப்
பேரறி வாளனு மண்ணுவின் நாடுவாழ் பேதையீர்நீர்
பாரறி யாதவர் போலவே பேசுதல் பான்மைதானே
யாரறி யாதவர் எம்முடை யாண்மையை யாண்டுமின்றே.

## 166. பாங்கி யவனுட் டணியியல் வினுதல் :

நடிகர்கள் கூட இலட்சியம் ஒன்றையே நாடுமாறு
கடமையைக் கூட்டிய கண்ணிய வானண்ணு நாடுகண்டீர்
துடியிடை யாரும்மூர் தோற்றிய பூந்தழை தொங்கலோடு
நடைபயில் காவெதோ நத்திய பூவெதோ நாடினீரே.

## 167. தலைவன் அவனுட் டணியியல் வினுதல் :

அணிமொழி கொண்டேயிந் நாடாளு மண்ணுநாட் டாரணங்கே
பணிமொழி யாரிடம் பைத்தியங் கொண்டிடாப் பான்மைதன்னுல்
அணியிழை கேட்கும் அளவிற்கு யானென்னு ரானதில்லை
துணிவொடுன் தோழியர் தூசணி பாங்கெலாந் தோற்றுவாயே.

## 168. தன்னுட் டணியியல் பாங்கி சாற்றல் :

மாந்தரார் போற்றும் மாத்தமிழ் வேந்தனு மண்ணுநாட்டில்
மாந்தளிர் மேனியர் மாலையில் மாந்தழை யாடையோடு
காந்தளம் போதும் களிறளி முத்தும் கமழுகின்ற
சாந்தமும் தேர்ந்தணிந் தாடுவர் சண்பகச் சோலைசார்ந்தே.

169. இறைவிக்கு இறையோன் குறை யறிவுறுத்தல் :

பகைத்தவர் தம்மையும் பாராட்டிச் சீராட்டும் பான்மையுற்ற
நகைச்சுவை மன்னனும் நாடியே வாழ்த்திய வண்ணுநாட்டில்
திகைத்திடாத் தன்மைகொள் தீரருன் காதல ருன்னைத்தேடி
நகைத்திட நண்ணுவர் நங்கைநீ யெண்ணுவாய் நள்ளிரவே.

170 . நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல் :

பெண்புத்தி பின்புத்தி என்னும் பிழையார் பழமொழியும்
எண்பற்றி வந்ததிவ் வேந்திழை போன்ருரின் ஏழைமைதான்
பண்பற்ற வேங்கைகள் பாதையுள் ஊண்பார்க்கும் வேளை தன்னில்
விண்பெற்ற பேறுற்ற வண்ணுவெற் பென்கண்ணுர் வேண்டினளே.

171. நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல் :

தமிழவேள் போன்ற தகைசான்ற மேலோர் தமையழைப்பின்
அமிழ்தனை யண்ணு வதனையும் ஏற்கா தமைவதுண்டோ
இமிழ்கடல் சூழ்ந்திடு மிப்புவி தன்னிலே என்னையாண்டு
கமழ்ந்திடச் சூழ்ந்தவர் காத்திட வெண்ணிய காரிகையே.

172. நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல் :

ஆச்சாரி யார்முதல் காமரா சர்வரை அண்ணுநல்ல
பேச்சாளி நாட்டாளி பாட்டாளி யென்றெல்லாம் பேசுமாறுன்
நாச்சாரைப்போற்றியுன் நாட்டத்தைக்கூறி நான் தாழ்ந்திரந்தேன்
வீச்சாளும் வேல்விழி யின்றிரா வெற்பிதை வேண்டுதற்கே.

173. குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல் ;

காரிரு ளாயினும் கன்னியெம் மன்னுய் கருத்தையள்ளும்
ஓரிர வென்னுமோர் அண்ணுவின் ஒப்பிலா நாடகத்தைப்
பாரறி வாளர்கள் பார்த்துப்பின் பாராட்டிப் போவதைநீ
பாரெனக் கூறியும் பாய்விட் டகலாத பான்மையென்னே.

174. இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல் :

நள்ளிர வாயினும் அண்ணுவின் பேச்சுக்காய் நாட்டுமக்கள்
கள்ளினை எண்ணியோ ரென்னவே காத்திடும் காட்சிபோல
ஒள்ளிய பண்பினர் உன்னுடைப் பொன்னெழி லுண்டுபோக
உள்ளியே வந்துளார் நம்மனைப் பின்புறத் தொண்டொடியே.

175. தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுசேறல் :

இராசாசர் முத்தைய செட்டியார் போன்ருேரு மேற்றெழுந்து
பராவுதல் செய்துநம் மண்ணுவைப் பார்த்தழைத் தார்தல்போல
விராவுதல் எண்ணிய வேட்கையால் வந்தவுன் வேந்தர்தம்மை
இராவிதில் நாமும் எதிர்கொளச் செல்லுவோ மேந்திழையே.

### 176. குறியுய்த் தகறல் :

மூலைக்கோர் பூஞ்சோலை மூளச்செய் தண்ணுவின் ருளும்போது
சோலைக்குஞ் செல்லாது சோர்வுற்ருயென்ருலுஞ் சொர்ணக்
கொம்பே
கோலக்கா இங்குள்ள கொய்யாப்பூ ஏதேனுங் கொண்டுவாரேன்
மாலைக்கோர் கோலங்கொள் மானேநீ சற்றேநில் மன்னிப்பாயே.

### 177. வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல் :

திருட்டுப் பயமின்றித் தேர்ந்தாளு மண்ணுவின் நாட்டிலெங்கும்
இருட்டுப் பொழுதிலும் ஏந்திழை யெண்ணியும் யாருமென்றும்
மருட்டும் நிலையிலா மாண்பினு லன்ருேயென் மானேயானுன்
தெருட்டும் விழியொடு தேனுர் மொழியையுந் தேர்ந்ததுவே.

### 178. பெருமகள் ஆற்றினதருமை நினைந்திரங்கல் :

தமிழர் புரட்சி குழந்தைத் தனமென்ற நேருவிற்குத்
தமிழர் தலைவரே றண்ணுதன் ஞணை தலைமேற்கொண்டு
தமிழர் பலரும் கருப்புக் கொடிகண்ட தன்மைபோன்று
தமிழர் வனமெலாந் தாவிருட் போழ்திலோ தாங்களிங்கே.

### 179. புரவலன் தேற்றல் :

என்னுடை வேலெனும் நின்னுடைக் கண்களும் நெற்றியிந்தும்
மின்னிடை யாவுமே என்மனக் கண்களில் மேவிநின்று
அன்புடை யண்ணுவின் சொற்கள் அறியாமை நீக்கல்போல
வன்புடை யிவ்விருள் நீக்க வரப்பெற்றேன் வஞ்சியானே.

### 180. புணர்தல்:

அறிவுறு கொள்கையும் அண்ணுவின் சொல்லும் அளவுறல்போல்
செறிவுறு கொங்கையும் செங்கையுங் கோடலைச் செய்ததாலும்
நறவுறு செவ்விதழ் நான்குமே சேர்ந்து நடந்ததாலும்
பெறவரு மின்பமே பெற்ருேம் பிரிந்திடல் பேதைமையே.

### 181. புகழ்தல் :

எப்பா லவருமே எண்ணித் துதிபாடு மேற்றங்கொண்ட
அப்பா துரையுமே அண்ணு துரையையே அண்ணுகை
ஒப்பா வயதென ஓர்கிலா தேதுடன் ஓர்ந்துகொணடார்
தப்பா உனையென் தலைவியாய் நான்கொண்ட தில்லையன்றே.

### 182. இறைமக ளிறைவனைக் குறிவரல் விலக்கல் :

அரசில் மிளிர வனைவர் மனமு மலைவதேபோல்
அரவும் களிறும் அரியும் புலியு மலையுமிந்த
இரவில் வனத்தே வரநீ இசையின் எனதகத்தே
விரவும் பயத்தை விரட்டலில் அண்ணுவும் வென்றிட ாரே.

### 183. இறைவியை இல்வயின் விடுத்தல் :

சொல்வல ரண்ணுவின் சொற்பொழி வானபின் சோதரர்தம்
இல்லதை யேகுவா ரென்னவே யென்னுயி ரேந்திழை நீ
கல்லளை பாதையுன் கால்சிவக் காமலிக் காவகன்று
செல்லுவா யுன்மனை யன்னையர் தேடுமுன் செல்வியோடே.

### 184. இறைவியை யெய்திப் பாங்கி கையுறை காட்டல்:

கல்யாண சுந்தரர் போன்ற கவின்தமிழ் வல்லுநரும்
பல்லாண்டு சொல்லியே பாராட்டும் பேறுற்ற வண்ணுசொன்ன
பல்வேறு பூக்களும் பார்த்தாய்ந்து வந்துளேன் பாவையன்னுய்
செல்வோமா யில்லினி சேவல்சூழ்ந் தல்லினைச் சீறுமுன்னே.

### 185. இற்கொண் டேகல்:

இனித்தமிழ் காத்திட வண்ணு இருக்கின்ரு ரிங்கேயென்று
தனித்தமிழ் காத்த மறைமலை சாற்றிய தன்மைசொல்வேன்
கனித்தமிழ் நின்னையுன் காதலர் காப்பார் கலக்கமின்றி
இனித்தநற் சிந்தையோ டே குவாய் நீம்மனை யேந்திழையே.

### 186. பின்சென் றிறைவனை வரவு விலக்கல் :

இரவும் பகலா யிருக்கும் படியாயிச் சாரலெங்கும்
விரவும் பலமின் விளக்கா லொளிசெய்த வண்ணுநாட்டில்
பரவும் அலரால் பகலும் உறங்காநும் பாவைகாண
வரவும் இயலா வகைநீ ரிருப்பதால் வாடுவேனே.

### 187. பெருமகன் மயங்கல் :

கதம்பமாய் யானுமுன் கன்னியும் ஆனதைக் கண்டபின்பும்
சுதந்தரம் வந்ததைச் சொல்லிக் களித்திடு மண்ணுநாட்டில்
இதந்தரா இந்தியை எல்லாரு மேற்க இயம்பலேபோல்
பதந்தனில் நஞ்சினைப் பாய்ச்சுதல் நேர்மையோ பாவையின்றே.

### 188. தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல்:

எப்பகை வர்க்குமே வஞ்சா யியல்புடை யண்ணுநாட்டில்
ஒப்புயர் வற்றநம் மொண்டொடி நும்நல மோர்ந்து வாழக்
கப்புயர் காட்டிடைக் கவ்விய கங்குலில் காளையன்னீர்
செப்புவீர் ஓர்குறி செவ்வழி யாய்நும்மூர் சேர்ந்ததற்கே.

### 189. திருமகட் புணர்ந்தவன் சேறல்:

வஞ்சம் கலவாத வாய்மை யுளங்கொண்ட வண்ணுநாட்டில்
நெஞ்சம் குடிவந்த நேரிழை யாளென் நினைவிலொன்றித்
தஞ்சம் தருவாள் தழையிருள் நீக்குவாள் தையல்நீயும்
கொஞ்சம் கவலையும் கொள்ளாது செல்லுன் குடிவிடத்தே.

## 14. இரவுக்குறியிடையீடு.

### 190. இறைவிக்கு இகுளை இறை வரவுணர்த்தல்:

திராவிட நாட்டினர் அண்ணவை நாடாளத் தேர்ந்ததெண்ணி
அராவினைக் கண்டவர் போல்சிலர் அரற்றும் பொருவொலிபோல்
குரா நிறை சாரலில் கோதையுன் தூக்கம் குலையுமாறு
இராவிதில் யாரோ ஒலியொன் றெழுப்பிய தன்மையென்னே.

### 191. தான் குறிமருண்டமை தலைவி யவட்குரைத்தல்:

நேர்ப்பாட்டைப் போகாமல் நீதிக்கு மாருக நேர்மையின்றி
ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டா லண்ணவை வீழ்த்துதற்
கெண்ணினர்போல்
கார்க் கீரட்டுப் புள்ளார்ப்பைக் காதலர் காண்குறி யென்றுகாண
ஓர்ப்பட்டுப் போய்வாட்டத் தோடின்றி மீண்டேன்யா
னொண்டெடியே.

### 192. பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம்பல் :

இரவிதில் தான்தரும் இன்னலை ஓர்கணம் எண்ணிடாமல்
அரசியுன் காதலை அண்ணலுந் தேரா தமைவதென்ருல்
அரசியற் காழ்ப்பினுல் அண்ணு கருத்தினைக் காணுர்போல
உரமிலர் அல்லரே உற்றது வேறெதோ ஓர்ந்திடேனே.

### 193. தலைமகன் புலந்து போதல் :

தோற்ரு ரெனினும் துதிபாடிப் போற்ருமல் தூற்றுகின்ற
மாற்ரு ரெனினும் மதிப்புதந் தாட்கொளு மண்ணுநாட்டில்
ஆற்ரு உளத்தோடிவ் வல்லுழன் றேவந்து மாரணங்காள்
ஏற்ரு ளிலையேல் இனியெங்கு யான்சென்று வாழுவதே.

### 194. புலர்ந்தபின் வறுங்களந் தலைவிகண் டிரங்கல் :

செங்கனி வாயொடு சீர்முகைக் கொங்கையும் செம்மை சேர்ந்த
அங்கமே தங்கமாய் ஆர்ந்துள்ள தாழையா மாரணங்கே
செங்கழு நீர்மாலை சீர்பெற்று நீயிங்கே சேர்ந்திருத்தல்
இங்குநம் மண்ணுவின் ஏர்முனை யேற்றமோ சாற்றுவாயே.

### 195. தலைவி தன்துணைக் குரைத்தல்:

கனவிலுங் கண்ணியங் காக்குமென் காதலர் காணவந்த
மனைநிலை யெண்ணுமல் மாதுநீ யண்ணற்கே மாசுகண்டாய்
மனைகரன் என்னும் மதிமிக்க தம்பிசூ ழண்ணுநாட்டில்
எனைவுன தெண்ணமித் தாழையுள் சூட்டிய மாலையீண்டே.

### 196. தலைமகன் அவலம் பாங்கி தணித்தல் :

தூய்மையே கொள்ளும் துடியிடை யுன்னைத் தொடர்புகொண்டு
தாய்மையே கொல்லும் தகைமையோ கொள்வார் தலைவரின்று
வாய்மையே வெல்லும் வகைசொல்லி நாடாளு மண்ணுநாட்டில்
நோய்மையுஞ் செய்வரோ நுண்ணறி வுள்ளவர் நொந்திடாயே.

### 197. இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல் :

தீந்தமிழ்ப் பாவினும் தேன்மிகுஞ் சொற்களைத் தேர்ந்துரைக்கும்
வேந்தனு மண்ணுவை வெல்லுதற் கெண்ணியே வெந்துநொந்த
மாந்தரைப் போலநம் மாதவன் நேற்றிர வெல்லாமிங்கே
போந்துநைந் தார்ந்தனள் புண்ணிய வானும தூருமென்னே.

### 198. இறைவிமே லிறைவன் குறிப்பிழை பேற்றல்:

தம்பிய ரண்ணுவைந் தம்மனத் தெண்ணத் தவறினுலும்
கொம்பிவ ளெண்ணிடக் கோதையே கொஞ்சமும் யான்தவறேன்
கம்பனும் விண்டிடாக் காரிகை யாரெழில் காண்போமென்று
நம்பியே நென்னலின் நள்ளிர வேஅந்து நாடினேனே.

### 199. அவள்குறி மருண்டமை யவளவற் கியம்பல் :

எங்கணும் செந்தமிழ்க் கேற்றமே சேர்க்கின்ற வண்ணுநாவில்
பொங்கிடும் சொற்களின் வாய்மை புரியாமல் வாட்டங்கொண்டு
மங்கிடும் கட்சிக்கு மாறினோர் போலநம் மங்கையிங்கே
தங்கினள் நும்குறி தப்பினள் துன்பமும் தாங்கினளே.

### 200. அவன்மொழிக் கொடுமை சென்றவட் கியம்பல் :

வண்மை வளங்கண்டு வாய்மை வழிசென்று வாழவைக்கும்
உண்மை உளங்கொண்ட அண்ணுவை உள்ளத்துள்
ளெண்ணுதார்போல்
திண்மை உருக்கொண்ட தீரர் உனைத்தேடித் தேர்ந்திடாமல்
கண்மை இருள்தங்கிக் காத்துத் திரும்பினர் காவினின்றே.

### 201 என்பிழை பன்றென்று இறைவி நோதல்:

கழகத்துக் கூட்டத்தே கைதட்டல் ஏதேனும் கேட்கநேர்ந்தால்
அழகார்ந்த சொல்வேந்த ரண்ணுதான் வந்தாரென் ரூர்ப்பரிக்கும்
கழகத்தார் போல்நேற்றெக் காற்றேசை கேட்டாலும் கங்குலக்கா
பழகத்தான் வந்திட் டாரென்றெண்ணி பார்த்துப்பார்த்
தேமாந்தேனே.

### 202. தாய் துஞ்சாமை :

நாடாளும் திட்டங்கள் நாளும் பலதீட்டி நன்மைசெய்ய
பாடாளும் அண்ணுதான் பாதி யிராவென்றும் பார்த்திடாமல்
மூடாத கண்ணுனர் என்றால் முதுமை வயதடைந்தும்
கூடாத கண்ணேனே கோதைநம் மன்னைக்கும் கூறுவாயே.

### 203. நாய் துஞ்சாமை:

உடல்நைந் திடுமாறு லோர்நேர மண்ணு வுறங்கலேபோல்
மடந்தை யெனேமறந் தன்னே மயக்கத் துறங்கிஞலும்
உடந்தை யிலர்போல் உரக்கக் குரைக்கும் ஊர் நாய்கட்கு
மடந்தா னெனவோ மனதாலு மூறவைக் கெண்ணிலோமே.

### 204. ஊர் துஞ்சாமை:

உடல்நலம் சீர்குன்ற வண்ணுவுக் கூறென்று நேருமாஞல்
கடல்வெள்ளம் போல்கூடி கங்குலே கண்டாலும்
தூங்கிடார்போல்
தடங்கண்ணி யேநம் தனிமைநோய்க் கண்டோயிவ் வூர்மடவோர்
அடங்கிலர் இன்னும் அறியேனே உண்மையை யானுமின்றே.

### 205. காவலர் கடுகுதல்:

அமிர்தாட்டி யெண்ணும்தன் னண்ணல் தடுமாற்றங் கொள்ளு
வண்ணம்
இமிர்கொட்டிக் காவல் புரிவோர் இனியெங்குந் தேவைதானே
தமிழ்நாட்டுக் கண்ணு தலைமையேற் ருள்கின்ற தன்மைதன்னுல்
திமிர்காட்டும் பண்புள்ள தீமை புரிவோர்கள் தீர்ந்ததாலே.

### 206. நிலவு வெளிப்படுதல்:

தங்கும் அறியாமை தன்னே யகற்றி தரணிதன்னில்
எங்கும் அறிவொளி யேற்றி மகிழ்வூட்டு மண்ணுநாட்டும்
நங்கண் ணனையார் நடமாட நன்மைசெய் நள்ளிரவில்
பொங்கும் நிலவேனே பூங்கொடி நீயே புகலுவாயே.

### 207. கூகை குழறுதல்:

அடக்கமே கொள்ளுநம் மாண்டகை யண்ணு விடம்பயின்றும்
ஒடுக்கமே கொள்ளாத உன்மத்தர் போலிந்தக் கூகையாவும்
திடுக்கமே கொள்ளுமா றிவ்விரா தேம்பித்தேம் பிக்குழறின்
நடுக்கமே கொள்ளுமென் நெஞ்சம் நமதன்பர் நாடாரென்றே.

### 208. கோழி குரற்காட்டுதல்:

ஊரவர் யாவரும் பேருவ கைக்கொள்ளும் சீரையுற்றும்
ஆரவா ரம் ஏது மில்லாம லாளும்நம் மண்ணுநாட்டில்
நேரலர் நொந்தபின் நீட்டி முழக்கல்போல் நீளிரவில்
கூரல கைக்கொண்ட கோழிகள் கூவு மிக் கூத்துமென்னே.

## 15. வரைதல் வேட்கை

### 209. தலைமகளைப் பாங்கி பருவரல் வினவல் :

தம்பி யுடையான் படைக்கஞ்சான் என்றித் தரணியாளும்
நம்பி நமதண்ணு தாடிதைக் காக்க நங்கைநீயே
வெம்பி யுடல்வாடும் வேதனை யேனோ விளங்கச்சொல்வாய்
வம்பி எவளேனும் வாட்டம் இழைத்தாளோ வாடுவேனே.

### 210. அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

கண்ணனுர் என்னையே காக்கூடிப் பின்னைசின் னுட்கழித்தே
உண்ண நீர் வேட்டவர் போலநம் வீட்டிலே உற்றகாலை
அண்ணுவை நீங்கினோர் அப்புறம் சந்தித்தால் நாணலேபோல்
கண்ணுலே கண்டனள் அன்னையான் நாணிய காட்சியங்கே.

### 211. தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றல்:

குறைகூறு மன்னையும் கொன்னே குரைக்கின்ற நாயுமிவ்வூர்
உறைவோரும் கண்மூட லுற்றுலும் கூவலர் ஊரிலுள்ள
துறைதோரும் செல்வதும் தூயவெண் டிங்களே தோன்றுவதும்
இறையோருக் கண்ணுநாட் டின்னலே செய்யுமென்
னேந்திழையே.

### 212. தலைமக னூர்க்குச் செல [வொருப்படுதல்:

தன்னலம் பாராதிச் செந்தமிழ் நாடாளு மண்ணுநாட்டில்
என்னலம் யாவையும் ஈர்த்தவர் ஊரினை யெண்ணியேகி
இன்னலைக் கூறிநம் ஏந்தலைச் சார்தலே யென்றனுக்கு
நன்னலம் சேர்த்திடும் நற்றமி ழாக்கிடும் நங்கையின்றே.

### 213. பாங்கி இறைவனைப் பழித்துரைத்தல்:

நேசமே கொள்ளாத நேரலர் தம்மிடம் கூடநீண்ட
பாசமே கொண்டிந்தப் பாராளு மண்ணுவாழ் ஊரிலென்றும்
நேசமே கொண்டுவாழ் நேரிழா யுன்னவர் நேர்மையின்றி
பாசமே கொள்ளாத பாதக ரானதோர் பான்மையென்னே.

### 214. இறைவி இறையோன் தன்னை நொந்து இயற்பட மொழிதல்

திருக்குறள் என்னும் திருமறை தந்தநம் வள்ளுவனுர்
திரும்பவும் வந்துதித் தண்ணுவாய் வாழுந் திருவிடத்தில்
விரும்பிய காதலர் கைவிடுங் காட்சியை வேண்டுவாரோ
சுரும்பமர் கூந்தலாய் சோர்ந்ததென் ஊழெனச் சொல்லுவாயே.

### 215. கனவு நலிவுரைத்தல்:

கூடாத கொள்கையர் தம்மொடுங் கூடிவா ழண்ணுநாட்டில்
மூடாத கண்ணிமை மூடிய காலையென் முன்னேவந்து
தேடாத கொண்கனுந்தேடியே கொண்டெனைத் தீண்டிப்பின்னும்
கூடாத முன்கனுக் கோழியும் கூவுமோ கோதையென்னே.

### 216. கவினழி வுரைத்தல்:

மாற்ருரின் தோட்டத்து மல்லிகைப் பூவும் மணக்குமென்ற
கூற்றுரு மண்ணுவின் கொள்கையைக் கொள்ளாதெதிர்த்து நின்று
தோற்ருரைப் போலவென் தோணலம் யாவும் தொலேந்தனவால்
ஏற்ருரை யான்பிரிந் தெங்கினி வாழ்வதென் னேந்திழையே.

### 217. தன்றுயர் தலேவர்க் குணர்த்தல் வேண்டல்:

அண்ணு உடல்நல மற்ருர் எனக்கேட் டனேத்துலகும்
எண்ணு இடருற்ற தென்னவே யானுற்றே னென்னுடைய
கண்ணு ரவர்மனம் காதலி யென்துயர் எண்ணுமாறு
பண்ணு திருந்திடின் பாவையே வாழ்வனே பாரிதிலே.

### 218. துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லல்:

செந்தமிழ்த் தாயைத்தன் சிந்தையுள் எப்போழ்தும் சேர்த்து
வாழும்
நந்தமிழ் நாட்டுக்கு நாயக னுயுள்ள வண்ணுவைப்போல்
சிந்தையில் எப்போழ்தும் சேயிழா யுன்னேயே சேர்த்துவாழச்
சொந்தமாய் வந்தவர்க் குன்துயர் சொல்லவோ வேண்டுமின்றே.

### 219. அலர் பார்த் துற்ற அச்சக்கிளவி:

இலமே யெனவரும் ஏழையர்க் கேன்றவை யீந்துவந்து
நலமே யெவர்க்கும் நயந்திடும் அண்ணுவாழ் நாட்டிலின்றும்
குலமே பெரிதென்று கூறிநம் காதல் குலேக்கவெண்ணி
அலரே உரைக்கும் அணங்கனேர்க் கஞ்சுவே னுரணங்கே;

### 220. ஆறுபார்த் துற்ற அச்சக்கிளவி:

உலகம் புகழும் உரனுடை யண்ணு உறையுமூரில்
கலகம் கருதும் கயவர் உளம்போல கருவிழியே
உலவும் இரவில் உரகம் உளியம் உழுவைபோன்ற
பலவும் பரவும் பறம்பில் பரிவர் படர்வதென்னே.

### 221. காமமிக்க கழிபடர் கிளவி:

தம்பியர்க் கண்ணுத் தமிழ்மேல் தணியாத தாகம்போல
எம்பிரான் மீதெனக் கேற்படும் வேட்கையை ஏற்குமாறென்
நம்பியர்க் கெவ்வணம் நானுரை செய்வதோ நாணமென்னும்
அம்பரம் நீந்திட வோர்புணே கூறுவா யஞ்சுகமே.

### 222. தன்னுட் கையா றெய்திடு கிளவி:

அன்பால் உலகையே ஆளும் அறிஞர மண்ணுநாட்டில்
நின்பால் துயின்ருர் நினேயாத தாலிந் நிலேயுற்ருயோ
பொன்போல் மலரால் பொலியுமிப் புன்னேநோக் கிப்புலம்பும்
என்போல் துயிலா தினேந்திடுந் தோயமே நீயுமிங்கே.

### 223. நெறி விலக்குவித்தல்:

பலகலை கற்றதும் பண்பெலாம் பெற்றதும் பார்த்துப்போற்றும்
உலகின ரண்ணுமீ துற்றபே ரன்பினு மூங்குடையாய்
விலங்கின மூருமிவ் வெவ்வழி வேளையில் வாரலென்று
நலம்பல நல்குமென் நாயகன் தன்பால் நவிலுவாயே.

### 224. குறி விலக்குவித்தல்:

தசையுடல் போற்று ரெனினும் தரணியோ ருள்ளமெல்லாம்
இசையுடல் ஏற்றிய வண்ணுவிற் கென்றும் வளர்புகழ்போல்
பசைகெடாச் சாரலுள் பைங்கூழ் வளர்ந்தன பைங்கொடியே
நசைகெடா தாங்கணே நம்பியை நாள்வர நாடுவாயே.

### 225. வெறி விலக்குவித்தல்:

இருளார் நெறியினில் ஏந்தல் வருவதை எண்ணி நங்காய்
மருளார்ந் திருந்தேன் மனநோய் அறியாநம் மன்னையின்று
அருளார் அறிஞரா மண்ணுவின் உள்ளம் அறியார்போல
முருகார் வெறியனை முன்னினள் என்பாய் முன்பனுக்கே.

### 226. பிற விலக்குவித்தல்:

இந்தி மொழிக்கோர் இடம்கொடுக் காமலே இன்தமிழை
உந்தி வளர்த்திட்ட உத்தம ரண்ணுவி னூரில்யாரோ
வந்து மகள்வேண்டி நின்றதும் யான்கொண்ட வாட்டந்தன்னை
இந்து நுதலாளே இன்றவர் பால்சென் றியம்புவாயே.

### 227. குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்:

அடுத்தாரை ஆட்கொளும் அண்ணுவின் பண்புடை
ஆண்டகைக்குக்
கொடுக்காமல் போவாரோ கொள்கை வழிசென்று கோரிநின்ருல்
தடுத்தாரை வீழ்த்திடும் தாமரைக் கண்ணியே தாய்முதலோர்
தடுக்காமல் பார்த்துக்கொள் தார்மார்பர் வீட்டாரைச்சாரச்செய்தே.

## 16. வரைவு கடாதல்.

### 228. விஞய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்:

நந்தாய் அனைய நனியறி வாளனும் அண்ணுநாட்டில்
வந்தாய் எமது வனிதையை ஏன்ருய் வருத்தம்காணுய்
எந்தாய் நிதமும் இனைந்தவள் தூங்காமை கண்டெனையே
நொந்தாள் அவட்கு நுவன்றபொய் மாற்றத்தால்
நோய்கொண்டேனே.

### 229. அலர் அறிவுறுத்தல்:

எண்ணு நலம்பல இந்நாட்டு மக்கட் கியற்றி யாளும்
அண்ணு பெருமை அகில உலகத்து மார்த்தலே போல்
வண்ணு உனைக்கொண்ட வஞ்சியாள் ஊரவர் வாயலர்ந்தாள்
கண்ணு ளவளைக் கருதிலை யாயின் கருகுவளே.

### 230. தாயறிவுணர்த்தல் :

எதிரிகள் தங்கள் இதயத்தை எவ்வா ருளித்திடுனும்
புதிரேது மின்றிப் புரிந்துகொள் தன்மையர் அண்ணுவைப்போல்
மதிநிறை யன்னையார் மங்கைக்கு நீதந்த முல்லைமாலை
கதிர்விடக் கண்டுமோ கண்டிடார் கன்னியின் காதலையே.

### 231. வெறியச்சுறுத்தல் :

பகுத்தறி வோடிந்தப் பாரினை யண்ணுவே யாண்டிடினும்
பகுத்தறி வற்ற பழக்கங்கள் இன்னும் பயில்வோருள்ளார்
அகத்துறு நோயை அறியாத தாயர் வெறியாட்டொன்றை
நிகழ்த்தவே யெண்ணினர் நேரிழை காப்பதுன்
நேர்மையொன்றே.

### 232. பிறர் வரைவுணர்த்தல் :

இல்லற வாழ்க்கைதான் நல்லற வாழ்வென வென்றுமெங்கும்
சொல்லியே போற்றிடு மண்ணுயிந் நாடாளும் சூழ்நிலையில்
நல்லவள் எத்தனை நாட்கள்தான் நம்பியர் கண்படாமல்
செல்லுவள் சொல்லுவாய் சேயிழை வெல்லுவாய் சிந்தித்தின்றே.

### 233. வரைவெதிர் வுணர்த்தல் :

இதனை இதனால் இவன்வெல்லு மென்ருயு மண்ணுநாட்டில்
மதனை எதிர்வெல்லும் மாணெழில் கொண்டநீர் மங்கைக்காக
நிதமும் கவலாது நேர்வந் தெமரை யணுகினீரேல்
பதமே உறுவீர் பசியுங் குறைவீர் பதட்டமேனே.

### 234. வரைவு நாளுணர்த்தல் :

துன்ப இருள் நீக்கி இன்ப ஒளியேற்றித் தோன்றுகின்ற
அன்பு மனத்தோடின் ருளும்நம் மண்ணுவின் நற்புகழ்போல்
இன்ப நிலவூட்டும் இந்து வளர்கின்ற இந்நாளில்
அன்ப னுமைநாடு மாயிழை கொள்ளுவீர் ஆர்வத்தோடே.

### 235. அறிவு அறிவுறுத்தல் :

மாற்ருர் பிழையையும் மன்னிக்கும் மாண்புடை யண்ணுநாட்டில்
ஏற்ருய் நினையெண்ணி ஏங்கித் தவிக்கின்ற ஏந்திழையாள்
ஆற்ருள் எனினும் அறிவார்ந்த பண்பாட்டு ளாழ்ந்ததனல்
சாற்ருள் எவர்க்குமே சார்ந்திடா நின்பிழை சால்புதானே.

### 236. குறிபெயர்த்திடுதல் :

எவருக்கு மெப்போது மஞ்சா வியல்புடை யண்ணுநாட்டில்
அவளுக்கு மாண்டகை தங்கட்கு மார்ந்துள்ள நட்பதனை
கவலைக்குள் ளாக்குவோர் காவிந்தப் பக்கத்தே காணக்கூடும்
அவலத்திற் குள்ளாவோ மென்றச்சம்கொண்டாளுன் னஞ்சுகமே.

### 237. பகல் வருவோனை இரவு வருகென்றல் :

குறுகிய காலத்துள் கோவேந்தன் கொள்ளும் புகழைக்கொண்ட
அறிஞரே றண்ணுவின் ஆட்சியைக் காண்பதற் காகவெங்கும்
செறிந்திடும் சுற்றுலா செல்லுவோர் சூழும் செயலையெண்ணி
நறுநுதல் அஞ்சுவாள் நாளை நீ வந்திடு நள்ளிரவே.

### 238. இரவு வருவானைப் பகல் வருகென்றல் :

மண்ணுளும் மன்னர் எவர்க்குமே கிட்டாத மாட்சிகொண்ட
அண்ணுவின் பேச்சை அருந்தி மகிழ்ந்திட வாரிருளும்
எண்ணுமல் கூடும் இயல்புடை மக்கள் இயங்குவதால்
பண்ணுளைக் காண பகலே வருவாய் பகுத்துணர்ந்தே.

### 239. பகலினும் இரவினும் பயின்று வருகெனல் :

பகலிர வென்றெல்லாம் பாராதிந் நாட்டிற்காய்ப் பாடுபடும்
அகலறி வாளனு மண்ணுவாள் நாடுறை யாணழகா
இகசுகம் நாள்சில என்பதை யாகிலும் எண்ணிப்பார்த்துப்
பகலிரா வெப்போதும் பாவையை நீங்காது பற்றுவாயே.

### 240. பகலினும் இரவினும் அகலிவண் என்றல் :

எதையுமே எண்ணித் துணியும் இயல்புடை யண்ணுநாட்டில்
நிதமுமே வந்திடின் நேரிழைக் காகவே நேர்ந்தாயென்று
குதற்கமே கொள்ளுவோர் கோதையைத் தூற்றலும் கூடுமன்றோ
எதற்குமே அஞ்சிடாய் என்னினும் வாரல் இராப்பகலே.

### 241. உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறல் :

தேன்தமிழ் நாட்டிலே தீமைகள் ஏதுமே தேராவண்ணம்
சான்றவர் பாதையில் சற்றும் பிறழாத வண்ணுநாட்டில்
ஆன்றவர் முன்னிலை ஆரணங் காளை நீர் ஆண்டுகோடல்
வான்புகழ் நும்குல வாய்மைகொள் நற்குடி வாழ்க்கையாமே.

### 242. ஆறுபார்த்துற்ற அச்சங் கூறல் :

இன்னு செயினும் இனியவே செயச்சொல்லு மண்ணுவின்று
தன்னு லியன்ற தகைமையில் நாடிதை யாள்வதாலே
மன்னு உலகினில் மாரு வியல்புடைக் காட்டுமாக்கள்
இன்னு முலவுதல் இலலையென் றெவ்வகை யெண்ணுவீரே.

### 243. ஆற்ருத் தன்மை ஆற்றக் கூறல் :

பகைவர்க்கு மன்புசெய் பண்புடை யண்ணுயிப் பாரையாண்டும்
முகையது பூத்திடும் முன்னமே சாய்தல் முறைமைதானே
வகையறி யாமலே வஞ்சியாள் தாவிட வாட்டங்கொள்ளும்
தகையறிந் தண்ணலே தையலை யாட்கொளத் தப்பிடீரே.

### 244. காவல் மிகவுரைத்தல் :

திருடரும் சிந்தை திருந்திட வண்ணுவின் செங்கோலாட்சி
மருவினும் பண்டை மனமுடைக் காவலர் மாற்றமின்றி
திரிபவர் தூங்கினும் தேன்மொழி தாயர்கண் தீராக்காலே
வருவதும் போவதும் வாய்க்குமோ வீரநீ யெண்ணுவாயே.

### 245. காம மிகவுரைத்தல் :

தம்பியர் யார்க்கும் தளர்வேது மேற்படின் தன்மைதீர்க்க
நம்பிரான் அண்ணுவின் நல்லுரை யன்றியோர் நாதியுண்டோ
நம்பியே உன்னுடை நங்கையின் நோய்நாடித் தீர்ப்பதற்காய்
எம்பிரான் நீயன்றி யாரிந்த ஞாலத் திருக்கின்ருரே.

### 246. கனவு நலிபுரைத்தல் :

தொண்டுசெய் உள்ளமே யன்றி துறக்கமும் வேண்டேனென்னும்
அண்ணுவின் பண்புடை அன்பரே நீரென்றன் ஆயிழையாள்
கண்ணுறங் கும்போது காட்சியைத் தந்து களிப்பையீந்தும்
ஒண்ணுதல் கண்விழித் தோர்ந்ததும் துன்பமே வுற்றனனே.

### 247. கவினழி புரைத்தல் :

ஏழையர் தம்நிலை ஏற்றம் பெறுவதைப் பற்றியென்றும்
ஆழவே சிந்தையில் ஆய்ந்திடும் நம்பிரான் அண்ணுவைப்போல்
ஏழையாள் நின்னெடு தங்கியே வாழ்வதற் கெண்ணியெண்ணி
கோழையர் நெஞ்சம்போல் கோதைதன் வண்ணம் குலைந்தனளே.

## 17. ஒருவழித் தணத்தல்.

### 248. தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றல்:

ஏல்பல் சலைக்கழகம்சென்ற வண்ணுதன் தம்பிமார்பால்
கோல்முறை தந்தன்று கூறிய தன்மைபோல் கோதையுன்பால்
வேல்விழி யாள்தந்து வேண்டுவேன் காவென்று
வேலையொன்ருல்
சால்புடை யென்னூரைச் சார்ந்துயான் மீண்டபின் சந்திப்பேனே.

**249. பாங்கி விலக்கல் :**

நன்மைசேர் இன்பங்கள் நாளும் பலவாகு மண்ணு நாட்டில்
இன்மைதீர் எண்ணத்தோ டீண்டியோர் மீண்டிட லென்று
முண்டோ
மென்மைகூர் ஒண்டொடி கண்டுமோ நின்னூர்மேல்
ஆசைகொண்டீர்
புன்மைநேர் பண்பினோர் போலநீர் எண்ணிடீர் போகிடீரே.

**250. தலைவனீங்கல் வேண்டல் :**

அண்ணவை நீங்கி அயல்நாடு சென்ருலு மன்புத்தம்பி
அண்ணவை எண்ண தரைக்கணம் வாழ்தலும் ஆவதுண்டோ
பண்ணுளை நீங்கியான் பக்கத்தூர் போனலும் பாவைதன்னை
எண்ணமல் வாழ்வதற் கென்னலு மொல்லுமோ வேந்திளையே.

**251. தலைவனைப் பாங்கி விடுத்தல் :**

தன்னினை வில்லாதித் தாரணி யாரெண்ணு மண்ணவைப் போல்
நின்னையெந் நேரமும் நெஞ்சிலே கொண்டாளும் நேரிழையாள்
இன்னுந்தன் னில்வாழ யெண்ணுவா ளென்றுநீ
எண்ணுகின்ருய்
மன்னவா நீயிடை வந்துவந் தேகிடின் வாடிடாளே.

**252, பாங்கி தலைவிக் கவன்செல வுணர்த்தல்.**

செயலொன்றை மேற்கொள்ள சேயிழா யுன்சிந்தை
சேர்ந்தாரின்றே
அயல்நின்ற தன்னூர்க் ககன்றுடன் மீள வகத்திலெண்ணி
அயல்நா டகன்றபோ தண்ணுதன் தம்பிக் கறைந்ததேபோல்
மயல்நெஞ்சங் கொள்ளாமல் மங்கை உனைக்காக்க வேண்டினரே.

**253. தலைவி நெஞ்சொடு புலத்தல் :**

ஆன்றவர் யாவரும் போற்றிடு மண்ணுமே லாணையிட்டு
மான்விழி உன்றனை யான்ஒரு போழ்தும் மறவேனென்று
நான்கிதழ் ஒன்றிய நாளன்று சொன்னதை நம்தலைவர்
ஏன்மறந் தாரோ இதுதா னுலகோ வறிகிலேனே.

**254. சென்ருேனீடலிற் காமமிக்க கழிபடர் கிளவி :**

தாம்பெற்ற கல்வியைத் தாரணி யார்க்கெல்லாம் தந்ததுவும்
நாம்பெற்ற பேரறி வாளனு மண்ணுநா டாளும்போது
யாம்பெற்ற துன்பத்தை யென்னுள்ள மாண்டார்க்கு
மேனேயின்று
கூம்புற்று பேரின்பங் கொண்டுறங் கன்னங்காள் கூறிடீரே.

### 255. தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல் :

சொன்னசொல் மாருத சொற்செல்வ ரண்ணுவின் தம்பிமாருள்
உன்னகத் தைக்கொண்ட உத்தமர் கூட ஒருவரென்று
நென்னல்தான் என்னிடம் நீட்டி முழக்கினுய் நேரிழாய்நீ
பின்னெதற் கஞ்சினை பேதைபோல் உன்னைப் பிரிவரென்றே.

### 256. தலைவன் வந்தமை பாங்கி யுணர்த்தல் :

அறுவை சிகிச்சையில் அண்ணு குணமடைந் தாரெனவே
அறுவை நிலைமையின் நீங்கி யகமகிழ் தம்பிமார்போல்
உறுவை மகிழ்வை உன துயிர் காதலர் தன்னூர்சென்று
பொறுமை யிலாமலே போற்றிய நம்மூர்க்குப் போந்ததாலே,

### 257. வந்தோன் தன்னெடு நொந்து வினுதல் :

அன்பெனும் பாசத்தால் ஆர்த்துப் பிணித்தநம் மண்ணுநீங்கின்
துன்பேனும் மாக்கடல் தோய்கின்ற தம்பிமார் போலவுன்றன்
அன்பிலே யாழ்ந்தாளும் ஆழ்ந்தனள் நீரன் றகன்றகாலை
இன்றும்நீர் வாரா திருந்திடின் ஏந்திழை காண்பதெங்கே.

### 258. தலைவன் பாங்கியொடு நொந்து வினுதல் :

புத்தரை ஏசுவைப் போன்றவர் மட்டுமே போற்றிநின்ற
சுத்தசன் மார்க்கத்தைச் சொல்லியே வாழ்ந்தநம் வள்ளலார்போல்
இத்தரை மீதிலே வாழ்ந்திடு மண்ணு விடந்தனிலோ
பத்தரை மாற்றுள் பயின்றனள் என்போல் பொறுப்பதற்கே.

### 259. தலைவியை ஆற்றுவித்திருந்த அருமை கூறல் :

பண்ணுர் மொழியாளைப் பாதுகாப் பாயென்று பாவையேற்கு
நண்ணு செயல்சொல்லி நாடினீர் நும்மூர்க்கு நங்கையானும்
அண்ணு மொழியை அவர்தம்பி செய்கையா யாக்கலேபோல்
எண்ணு துயரங்கள் யாவையும் நீக்கினேன் ஏந்திழைக்கே.

## 18. வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல்.

### 260. என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல் :

தன்னின் அறிவால் தரணியை யாள்கின்ற வண்ணுநாட்டில்
என்னின் முயற்சியா லீட்டும் பொருள்கொண்டே யேந்திழைக்குப்
பொன்னின் பரிசப் பொருளெல்லாம் தந்து மணம்புணர
உன்னின் தவரே உரையவட் குண்கணுய் என்பிரிவே.

## 261. பாங்கி நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல் :

எதையும் இதமாய் இயம்பும் இயல்புடை யண்ணுவைப்போல்
இதைநம் தலைவிக் கெடுத்தியம் பாற்றலைக் கற்றேனில்லை.
எதையுமே தாங்கும் இதயமே கொண்டவர் தம்பி நீர்நும்
கதையையே சொல்லுவீர் காரிகை கண்டபின் செல்லுவீரே.

## 262. நீடேனென்றவ னீங்கல் :

விண்டதைச் செய்கையில் வேண்டிடும் பண்பதை வேட்கையுற்றுக்
கொண்டதன் கொள்கையில் மாறின்றிகோலோச்சுமண்ணுநாட்டில்
பண்டுபோல் காலைபோய் மாலையே மீளுவேன் பாவையேயான்
கொண்டவள் நெஞ்சிலேகொள்ளவே சொல்லுவாய் கோபமேனே.

## 263. பாங்கி தலைவிக் கவன்செல வுரைத்தல் :

பண்டையோர் கூறிய பாதையில் மாருத பண்பையுற்ற
ஒண்டொடி யேவுன்னை ஊரார்முன் கொள்ளுதற் குள்ளியேதான்
அண்டினேர் யார்க்கும் அபயமே தந்திடும் அண்ணுநாட்டில்
ஒண்டியா யுன்னைவிட் டூர்தாண்டி சென்றுளா ருத்தமரே.

## 264. பூங்குழை இரங்கல்:

அன்னைப் பரிவினும் ஆர்வம் மிகக்கூட்டி அன்பைக்காட்டி
கன்னித் தமிழ்போற்றிக் கற்பின் திறங்காக்கு மண்ணுநாட்டில்
நின்னைப்பிரியேனென் றென்னை யவர்நேர்ந்த போதெனக்குச்
சொன்னசொல் சோருமென் றஞ்சியோ சொல்லாமல்சென்றனரே.

## 265. பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்:

தன்னை மிகத்தூற்றி தாழ்வா யுரைத்தாலும் தன்தலைவர்
என்றும் பெரியார்தா னென்றெண்ணு மண்ணுயின் ருளும்போதும்
உன்னை யொருபோழ்து முன்ன மறவாத வுத்தமரை
என்னேநீ எண்ணும லிவ்வா றியம்பினை யேந்திழையே :

## 266. தலைவி கொடுஞ்சொற் சொல்லல்:

புதர்க்குள் பதுங்கும் புலிகள் அலையும் புனத்திலுள்ள
அதர்க்குள் தலைவர் அகன்ரு ரெனநன் கறிந்திருந்தும்
குதற்கம் மொழிந்திடக் கூசிடா யிவ்வூர்க் குறைமதியென்
எதற்கும் கலங்கா திருந்திட யானென்று மண்ணுவன்றே :

## 267. வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்:

அன்பும் தயையும் அரியநற் பண்புங்கொள் ளண்ணுநாட்டில்
துன்பம் எதையுமே தூக்கத்து மெண்ணுத தோகையுன்றன்
அன்பர் செலும்வழி யெங்குமே யார்வம் மிகவளிக்கும்
இன்பம் தரும்பல் லியற்கைச் செயல்நோக்கா தேகலேதே.

## 268. பருவம் கண்டு பெருமகள் புலம்பல்:

எண்ணிலா இன்னலால் ஏழையர் வாடலை யெண்ணுமண்ணு
கண்ணிலே நீர்த்துளி காண்பதைப் போலவே யின்றுமாலை
விண்ணிலே கண்டுயான் வேதனை கொண்டதை வேற்றுநாட்டு
மண்ணிலே சென்றநம் மாண்பினர் எண்ணிடா மாயமென்னே.

## 269. இகுளை வம்பென்றல்:

செய்தொழில் யாவையும் செம்மைசேர் பண்பொடு செய்துகாட்டி
மெய்மையே பேசியிம் மேதினி யாளுநம் மண்ணுநாட்டில்
பொய்மைநீர் கூடியிப் பூமிமேல் காரினைப் போல்வதொன்று
மைவிழி மாதுநீ பேதுற மாயமாய் வந்ததென்னே.

## 270. இறைமகள் மறுத்தல்:

ஒவ்வோர் செயலுக்கு முற்றதோர் காலத்தை யோர்ந்துசெய்யும்
செவ்வியர் அண்ணுவிச் செந்தமிழ் நாடாளும் செம்மைகண்டு
தெவ்வரும் பாராட்டும் சேதியைக் கேட்டுமா சேயிழாய்நீ
இவ்விதம் சொன்ணுய் இயற்கையும் பொய்க்குமோ இந்தநாட்டே.

## 271. அவர் தூதாகி வந்ததைடந்திப்பொழுதெனத் துணைவி சாற்றல்:

பைந்தமிழ் கொண்டேயிப் பாரினை யாண்டிடு மண்ணுநாட்டில்
செந்தமிழ் கற்றவுன் செம்மலும் சொன்னசொல் மாறுவாரோ
இந்தகார் உன்னுடை ஏந்தலின் தூதென வெண்ணிடாமல்
சிந்தனை செய்வதேன் செந்தமிழ்ச் செல்விநீ செப்புவாயே.

## 272. தலைமக ளாற்றல்:

உரிமைக்காய்ப் போராடு முள்ளங்கொள் ளண்ணுவை ஊக்குவித்த
பெரியார்க்கும் வீர மணியார்க்கு முள்ள பிணைப்பைப்போன்றே
பிரியோம் நம் வாழ்வினில் பேதுருய் நீயென்று பேசியோரும்
தரிவாரோ வாராமல் தையல்சொல் வாய்மையே தாபமேனே.

## 273. அவனவட் புலம்பல்:

நல்லா ருளமெங்கும் நாளும் வளரண்ணு நாட்டையாண்டும்
பொல்லா ஞெருவன் புவியிதில் வாழ்வதும் புன்மையன்ரே
எல்லா எழிலையும் என்பிரி வால்பிரிந் தேங்குவாளின்
இல்லா இடையினை எண்ணியென் உள்ளம் இனைவதென்னே.

## 274. மீண்டு வருங்காலைப் பாகனேடு சொல்லல்:

பார்தனில் யார்குறை பார்க்கினு சோர்வுறு மண்ணுநாட்டில்
ஆர்திரை யாதவன் ஆழ்ந்திடின் ஆயிழை யாற்றுவளோ
கார்தனை மாதவள் காணுமுன் யானவள் காணுமாறு
ஊர்தியை வேகமாய் ஓட்டுவாய் பாகநீ ஓர்ந்து பார்த்தே.

# அண்ணக் கோவை

ஆசிரியர் :

செந்தமிழ்க் கவிஞர்

புலவர் இரா. மணியன், பி.ஓ.எல்; பி.டி.

(பேராசிரியர், மணலி தமிழ்க் கல்லூரி, சென்னை-1.)

உரைப்பகுதி

தெளிவுரை எழுதியோர் :

புலவர். அ. அகோரம்

திருமதி. கமலா அகோரம், பி.எஸ்ஸி; பி.டி.

விற்பனை உரிமை :

கல்யாணி புத்தகாலயம்

தியாகராய நகர் சென்னை-17

## உரைப் பாயிரம்

என் உடன் பயின்ற நண்பரும், கவிஞருமான புலவர். இரா. மணியன் அவர்கள், அண்ணுக் கோவை என்னும் இந்நூலை யாத்து என்னிடம் காட்டிய பொழுது, இதன் பாக்களின் கருத்துக்களைச் சாதாரண மக்களும் உணர்ந்து கொள்ளும் வண்ணம் தெளிவுரை எழுதி வெளியிட்டால் சிறப்புறும் என்று கூறினேன். அப்பொறுப்பை என் நண்பர் என்னிடமே விட்டுவிட்டதால், என் துணைவி திருமதி கமலாவின் துணையுடன் இந்நூலுக்குத் தெளிவுரை எழுதினேன். இப்பகுதியை அச்சிடுங்கால், கவனக் குறைவினால் அச்சுப் பிழைகள் சில ஆங்காங்கே ஏற்பட்டு விட்டமைக்கு வருந்தி, அறிஞர்கள் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன். தெளிவுரை எழுத குறிப்புக்கள் தந்துதவிய ஆசிரியர் அவர்கட்கு என் மனங்கனிந்த நன்றி.

புலவர். அருணு. அகோரம்
தமிழாசிரியர், அரசாங்க உயர் பள்ளி
முசிறி, திருச்சி மாவட்டம்.

# அண்ணுக் கோவை.

—★—

## முதலாவது
## களவியல்
### க. கைக்கிளை.

காட்சி :

உலகிற் சிறந்த வொருதமிழ் நாட்டிற் கொருவராகிப்
பலகற் றறிந்த வறிஞரே றண்ணு பிறந்த பாரில்
விலையிற் ககப்படா பொற்கொடி யொன்றிலே வில்லுமிழ்வேல்
சிலையும் பிறையும் முகிலும் மலையும் செறிந்துளதே.

(தெளிவுரை) பேரறிஞர் அண்ணு பிறந்த இந்த நாட்டில், காளை ஒருவன் கன்னி ஒருத்தியைக் காண்கிருன். தொலைவில் நின்று காண்பதால் அவள் ஒரு பொற்கொடிபோல் தோன்றுகிருள். அவனுக்கு அவளுடைய புருவம் வில்லாகவும், கண் வேலாகவும் நெற்றி பிறையாகவும், கூந்தல் மேகமாகவும், மார்பங்கள் மலை களாகவும் தோன்றுகின்றன.

ஐயம் :

அல்லின் பகையாம் அருக்கன் ஒளியால் அழகு சேர்த்த
கல்லின் சிலையோ கலையின் நிலையோ கவினுரைக்க
ஒல்லின் அவரை உணர்வின் உறைவாய் உரைப்பொழியும்
சொல்லின் முகிலாய்ச் சொலலுறு மண்ணுவாய்ச் சொல்லலாமே.

(தெ-ரை) காளை கன்னியின் அருகில் செல்ல எண்ணுருன் அப்பொழுதும் அவனுக்கு அவள் ஓர் உயிருள்ள பெண்ணென்று தோன்றவில்லை. அழகுள்ள சிலையோ ஓவியமோ என்று ஐயப் படுகிருன். அவவழகை உரைக்கக் கூடியவர்களை அண்ணுவாக எண்ணலாம் என்று அவன் நினைக்கிருன்.

துணிவு :

சிலையின் கலையென்ருல் சிந்தையைத் தாக்கும் சிறப்புமுண்டோ
கலையின் நிலையென்ருல் கண்ணின் இமையைக் கருதலாமோ
மலையின் வலிய மனமே இதனல் மருளவேண்டாம்
நிலையின் குலையா நெடுந்தகை யண்ணுசொல் நேரிழையே.

(தெ-ரை) இன்னும் சற்று அருகில் அவன் செல்கிறுன். அக் கன்னியை நோக்குகின்றுன். அவள் தன்சிந்தையைத்தாக்குவதை யும், அவளின் கண்கள் இமைப்பதையும் எண்ணி சிலையன்று, பெண்ணே எனத் துணிகிறுன். அண்ணு தம் சொற்களினுல் அழகுற வடித்தெடுத்த சொல்லோவியம் போலக் காட்சிஅளிப்ப தாக எண்ணுகிறுன்

குறிப்பறிதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| போறி | வாலுயர் | பேரா | சிரியரை | நாவலரை |
| போறி | வாளனு | மண்ணுதன் | பேச்சினுல் | பெற்றதேபோல் |
| போறி | யாதவோர் | பேதையென் | கண்களைப் | போர்த்துசென்றாள் |
| போறி | யாமலே | போர்த்தவள் | கண்களும் | பேதுறுமே. |

(தெ-ரை) அக்கன்னியும் அக்காளையை நோக்குகிறுள். அவள் பார்வை தன்னிடமுள்ள வேட்கையைக் குறிப்பதாக அவன் உணர்கிறுன். அவனுடைய கண்களை அவள் பறித்துவிட்டதாக எண்ணி, அவளை அறிஞர் அண்ணுவுக்கும், தன் கண்களை அண்ணுவால் ஈர்க்கப்பட்ட பேராசிரியர் அன்பழகனுக்கும், நாவலர் நெடுஞ்செழியனுக்கும் அண்ணுவின் பேச்சை அவள் பார்வைக்கும் ஒப்பிடுகிறுன்.

# 2. இயற்கைப் புணர்ச்சி.

## இரந்து பின்னிற்றற்கெண்ணல்:

| | | | | |
|---|---|---|---|---|
| மருளும் | மதியுடை | மக்களின் | மாசெலா | மாற்றிபின்னர் |
| தெருளும் | கலையினுல் | சீர்சிருத் | திக்கொண்டு | வந்தசெம்மல் |
| கருணு | நிதியையுந் | தன்தம்பி | யக்கண்டு | கொண்டவண்ணு |
| துரையுரை | போலுறை | வோமுரைத் | தேன்குறை | யேதுரையே |

(தெ-ரை) அவன் அவளை அணுகுகிறுன் .இதமான வார்த்தை களைக் கூறி தன் காதற்குறிப்பினை உணர்த்த எண்ணுகிறுன். அறிஞர் அண்ணு கலைஞர் கருணுநிதியைத் தனக்குத் துணையாகக் கொண்டு அரசியல் வாழ்வை நடாத்துவதுபோல, தானும் அவளைத் தன் வாழ்க்கைத் துணையாகக்கொண்டு வாழ எண்ணு வதைக் குறிப்பால் உணர்த்த விழைகிறது அவன் நெஞ்சம்.

## இரந்து பின்னிலை நிற்றல் :

நடராசன் பேர்க்கேற்ப நாடெங்குஞ் சுற்றி நடந்து கொள்கை
படரச்செய் துப்பினி லெப்பகை வர்க்குமே யஞ்சலில்லோன்
சுடரெனு மண்ணாசொற் கஞ்சலே போலுஞ் சுடர்த்தொடியே
தொடவுனை யஞ்சுவன் தொல்லையைப் போர்க்குவ துன்பொறுப்பே

(தெ-ரை) அவன் தன் எண்ணத்தை அவட்குக் கூறுகிறான். திரு. N. V. நடராசன் அண்ணாவுக்கு நெருங்கி நண்பர். யாருக்கும் அஞ்சாதவர். ஆனாலும் அண்ணாவின் சொல் மாறாதவர். இக் கருத்தைக் கூறி தானும் அவளைத் தொடுதற்கு அஞ்சுவதாக சொல்லி தன் காதல் நோயைத்தீர்ப்பது அவள் பொறுப்பென முடிக்கிறான்.

## முன்னிலையாக்கல் :

திராவிட நாட்டினை மீட்டுநம் செல்வத்தைக் காத்திடற்கே
உரமுடை நெஞ்சமோ டண்ணாயிந் நாட்டி லுதித்ததேபோல்
உருகிடு மென்னுடல் விட்டுயிர் வேறெங்கு மேகலின்றி
இருந்திடச் செய்திட வன்றோ நீ இவ்விடம் சேர்ந்ததுவே.

(தெ-ரை) அவள் அவவிடத்திற்கு வந்தது தன்னை வாழவைப்பதற்குத்தான் என்ற கருத்தை அவன் கூறுகிறான். திராவிட நாட்டைக் காக்க அண்ணா தோன்றியதேபோல் அவனைக் காக்க அவள் தோன்றினாள் என அவன் உரைக்கிறான்.

## மெய்தொட்டுப் பயிறல் :

மென்குர லாலிசை மெல்லவே பாடிடும் வண்டினங்காள்
அன்புறு சொல்லினா லாரையு மாட்கொளு மண்ணா நாட்டில்
வன்புறு செய்கையே வஞ்சியின் கூந்தலில் வந்துகுந்தல்
என்குறை தீர்த்திடு மிவ்விடை நிற்குமோ ஏகுவீரே.

(தெ-ரை) அவன் அவளை இன்னும் நெருங்கிறான். அவ மெய்யைத்தீண்ட ஒரு வழியை எண்ணுகிறான். அவள் கூந்தலி மலர்கள். அதில் ஒரு வண்டு. அதை ஒட்டுவதுபோல, அவளையும் தொட்டுவிடுகிறான். அந்த வண்டைப் பார்த்து ''இவளிடை மென்மையானது. வண்டே, நீ இவள் கூந்தலில் அயர்ந்தால் பாரம் அதிகமாகி கீழே விழுந்து விடுவாள். அறிஞர் அண்ணா அன்பாட்சி நடத்தும் இந்த நாளிலுமா உனக்கு அன்பில்லை'' என்று கேட்கிறான்.

## பொய் பாராட்டல் :

| | | | | |
|---|---|---|---|---|
| மண்ணிலே | எண்மதி | பெற்று | மகிழ்ந்திடு | மக்களுக்குள் |
| அண்ணுவின் | சொற்கேட்டோ | ராய்வெனு | மாழியில் | ஆழ்வதேபோல் |
| விண்ணிலே | நின்றிடு | வெங்கதிர் | நின்னுடைச் | சீர்முகத்துத் |
| தண்ணினைப் | பெற்றிடற் | கன்றேவித் | தண்கடல் | மூழ்குவதே. |

(தெ-ரை) அவன் அவளைப் பாராட்டுகிறான். பாராட்டும்போது ஓரளவு பொய்யும் சேர்ந்து விடுகிறது கற்பனை வளமுள்ளவன் அவன். அவளை நோக்கி ''அறிவுடையோர், அண்ணுவின் சொற்பொழிவைக்கேட்டு ஆராய்ச்சி என்னும் கடலில் ஆழ்கிறார் கள் அதுபோல கதிரவனும் உன்னுடைய முகத்துக் குளிர்ச் சியைப் பெறுவதற்கோ கடலில் போய் மூழ்குகிறான்'' என்று அவன் கூறுகிறான்.

## இடம்பெற்றுத் தழாஅல் :

| | | | | |
|---|---|---|---|---|
| எதையுமே | தாங்கும் | இதயம் | உண்டென் | றியம்புகின்ற |
| புதையலாய் | நாட்டினர் | போற்றிகு | மண்ணுவி | னுள்ளகம்போல் |
| எதையுமே | தாங்கிடு | மிம்மலைச் | சாரலே | எம்முடைய |
| புதையலாம் | பொற்கொடி | மேவிடற் | கோரிடம் | போற்றுவமே. |

(தெ-ரை) தன் எதிரே உள்ள அம்மலைச் சாரலை அவளுக்கு அவன் காட்டி, ''எதையும் தாங்கும் இதயம் வேண்டும் என்ற அண்ணுலின் பொன்மொழி நாட்டினர்க்கு ஒரு புதையல் போன் றது. இம்மலைச் சாரலும் நமக்குப் புதையலாகும். ஏன் எனில் நாம் தழுவுதற்கேற்ற இடம்'' என்கிறான்.

## வழிபாடு மறுத்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அறிஞரைச் | சூழ்ந்திடு | மன்பர்போ | லிங்கே | அசோகமதை |
| நெறியுறச் | சூழ்ந்திடு | மாதவிப் | பேருடை | நீள்கொடியே |
| அறநெறியே | அன்பு | நெறியென் | றறிவிக்கு | மண்ணு நாட்டில் |
| நெறியறி | யாமலே | நின்றவர்க் | கின்பம் நீ | செய்குவையே. |

(தெ-ரை) அவன் சொன்னவற்றையெல்லாம் அவள் கேட்டுக் கொண்டிருந்தாளே ஆயினும் அவள் தன் சம்மதத்தைக் கூற வில்லை. அவன் கருத்துக்களை மறுத்துக் கூற முற்பட்டாள். நேரிடையாகக் கூருமல், ஒரு குருக்கத்தி மரத்தை நோக்கி ''அசோக மரத்தைச் சூழ்ந்திருக்கும் மாதவி என்னும் கொடியே, அறமும் அன்பும் ஒங்க அண்ணு இந்த நாட்டையாளும் காலத் தில்கூட, ஒருவர் அறநெறி தவறி இன்பம் காண எண்ணுகிருர். நீயே தருவாயாக'' என்கிருள்.

## இடையூறு கிளத்தல் :

விந்தமே போல்வளர் கொங்கையின் விம்மலைப் போர்த்திடாமல்
நந்தமிழ்ச் சீர்மையை நாட்டிடு மண்ணுசொற் கூர்மைநாணும்
கொந்தவிழ்ப் பூவிழ்க் கையிலே கொள்ளவோ பொத்திருய்நின்
செந்தமிழ்ப் போலசுவை சேர்ந்திடுஞ் செம்மலர்க் கைகளாலே.

(தெ-ரை) அவள் நாணம் காரணமாக தன் கண்களை மூடிக் கொள்கிருள், தன் கைகளால். அதைக் கண்ட தலைவன் தன் துன்பத்தை வெளியிடும்போது ''உன்னுடைய மார்பகங்கள் விந்தியமலையைப்போன்று வளர்ந்துள்ளன. உன்னுடைய கண் பார்வையோ அண்ணுவின் சொல்லைவிடக் கூர்மையானது. உன் கைக்குள் கண்கள்தான் அடங்கும் என்று எண்ணி அவற் றையே பொத்திருயோ'' என்று தன் காமத்துன்பத்தை வெளி யிடுகிருன்.

## நீடு நினைந்து இரங்கல்

அண்ணுவின் சொற்கேட் டவர்படை தன்னை அடைந்திருக்கும்
எண்ணலா தம்பியர் இன்சொலே பெற்றிட எண்ணுதல்போல்
பண்ணெனும் சொல்லுடைப் பாவையுன் செவ்விதழ்ப் பாலும்தேனும்
எண்ணினேன் பெற்றிட எண்ணியாங் கெய்துவ தெப்பொழுதே.

(தெ-ரை) அவள் தனக்கு விரைவில் இன்பத்தைக் கொடுக்க வேண்டும் என்று உணர்த்தும்போது ''அண்ணுவின் இன்ப மூட்டும் சொற்களை அவருடைய தம்பிமார்கள் விரும்புவதுபோல உன்னை அடைய விரும்புகிறேன்'' என்கிருன்.

## மறுத்தெதிர் கோடல்

கத்தா தெனைமோதுங் காதற் கடற்கென் நிறையணையாய்
எத்தனை நாழிகை நிற்குமென் நெஞ்சமே இயம்புவையோ
எத்துணைக் கல்மனங் கொண்டவர் என்னினு மண்ணுவின் சொல்
புத்துணர் வூட்டுமா மன்பர் சொலுமது போன்றதுவே.

(தெ-ரை) அவள் அவனைத் தன் தலைவனுக ஏற்றுக்கொள்ள விரும்புகிருள். நாணம் குறுக்கிடுகிறது. அப்பொழுது தன் நெஞ்சை நோக்கிக் கூறுவாள்போல "நெஞ்சமே, என் காதல் கடல் போல் பெருகுகிறது என் நிறை என்னும் அணை எத்துணை நாழிகைதான் நிலைத்திருக்கும். அண்ணுவின் சொல், கல்மனத் தோரையும் கரைப்பதுபோல, இவரது அன்பும் என்னைக் கரைத்துவிட்டது" என்று கூறுகிருள்.

## வறிது நகை தோற்றல்

| | | | | |
|---|---|---|---|---|
| ஆய்ந்துணர் | துப்பிலே | யாரிவர்க் | கீடெனு | மண்ணுசொல்லில் |
| சாய்ந்திடா | மக்களு | முண்டுகொல் | சார்பினை | வேண்டிநின்று |
| ஓய்ந்திடா | தன்மையி | லுண்மையுள் | ளன்புரை | யோர்ந்ததனுல் |
| மாய்ந்திடா | நன்மையை | மங்கை | நகைமொக்குள் | நாடினளே, |

(தெ-ரை) அவள் அவனுக்கு உடன்படுகிருள். அதைத் தன் முகமலர்ச்சியால் தோற்றுவிக்கிருள். அண்ணுவின் சொல்லுக்கு இசையாதவருமோ உண்டு? அவனது சொற்களும் அவளைச் சாய்விக்கின்றன.

## முறுவற் குறிப்புணர்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| வீணர்கள் | சேனையை | வீழ்த்திநம் | நாட்டு | விலங்கொடிக்க |
| மாணவர் | தானையை | மாண்புறத் | தந்த | மதியழகன் |
| பேணிய | தன்தலை | வன்னண்ணு | தன்னையே | பெற்றதைப்போல் |
| நாணிய | உன்னகை | தன்னிலே | என்னுயிர் | நான் பெற்றேனே. |

(தெ-ரை) அவள் புன்னகைக்கிருள். அவன் உணர்கிருன். அண்ணுவின் சொற்கள் மதியழகனை ஈர்த்தது மாணவர் மத்தியில் மதியழகனின் தொண்டு அண்ணுவை ஈர்த்தது. இருவரும் ஒருங்கு சேர்ந்தனர். அதுபோல அவன் அவளை நாட, அவள் அவனை நாட இருவரும் ஒருங்ிணைகிய வைக்கிறது அவளின் புன்னகை.

## முயங்குதலுறுத்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| சொல்வலர் | நாவலர் | தூயவர் | காவலர் | சோர்விலரை |
| நல்லவர் | நம்மண்ணு | தன்தம்பி | யாய்பெற்றுர் | நாடுமீட்டார் |
| செல்வியே | உன்னையும் | நான்பெற்றேன் | சென்றயென் | ஆவிமீட்டேன் |
| கல்வியில் | புள்ளியை | நீக்கலும் | காண்பதை | ஆற்றுேமே. |

(தெ-ரை) அவன் அவட்குத் தலைவனுனுன். அவள் அவனுக்குத் தலைவியானுள். நாடு மீட்க நாவலரை அண்ணு பெற்றுர். தன் உயிர் காக்கத் தலைவன் தலைவியைப் பெற்றுன்.

(கல்வி என்ற சொல்லில் புள்ளியை நீக்கினுல் கலவி தானே)

### புணர்ச்சியின் மகிழ்தல்

எடுத்த செயலைத் தொடுத்து முடித்திடு மாற்றலுள்ள
நெடுஞ்செழி யன்யெனும் நேர்மையுள் தம்பியைப் பெற்றுநிற்கும்
கடுஞ்சொலே கண்டிலா வண்ணுவாழ் நாட்டுடைக் காரிகையே
முடிந்திடா வேலையு முண்டுகொல் வேண்டும் முயற்சியாலே.

(தெ--ரை) அவன் முயற்சி கைகூடியது. நாவலர் நெடுஞ்செழியனைத் துணையாகக் கொண்ட அண்ணாவின் முயற்சி வீண் போகுமா? முயன்றது கிட்டினுல் மகிழாதவர் யார்?

### புகழ்தல்

குற்றுரு வாயினும் கோளத் தறிவெலாங் கொண்டுநிற்கும்
சொற்றிரு வேயெனு மண்ணுசொற் கேட்டா ரெனமகிழும்
எற்றிரு வேயனை ஏந்திழைக் கூந்தல்தன் பூமணம்போல்
இற்றிரு தேயமீ தெங்கணுங் காண்டியோ வண்டினமே

(தெ--ரை) அவளும் மகிழ்கிருள். அவன் புகழ்கிருன். அண்ணாவின் சொல்லைக் கேட்டு மகிழாதவரோ, புகழாதவரோ இருக்க முடியுமா? அவள் கூந்தலில் பூக்கள் கூந்தலின் மணமும் பூவில் சேர்கிறது. அது ஒரு தனி மணம். அம்மணத்தைப் போல ஒரு மணத்தை எங்காவது நுகர்ந்ததுண்டோ என்று அப்பூவில் தேனுண்ட வண்டைத் தலைவன் கேட்கிருன்.

## ௩. வன்புறை.

### அணிந்து நாணியதுணர்ந்து தெளிவித்தல்

கறையிலா நெஞ்சொடு காட்சியும் நாட்டுக் கருத்துமுற்ற
அறிவுடை நம்பிநம் மண்ணுவின் சொல்லைக்கை யாள்வதேபோல்
குறையெது மின்றியுன் தோழிபோல் இவ்வணி கூட்டியும்பின்
நிறைவுற வெத்தடை நேர்ந்ததோ கூறுவாய் நேரிழையே,

(தெ-ரை) தலைவன் தலைவியைத் தழுவியபோது, அவளின் ஆடை, அணிகள் நிலைகுலைந்தன. அவற்றை முன்போலவே ஒழுங்கு படுத்துகிருன். அவள் நாணம் கொள்ளுகிருள். தன் தோழிபோல் இவரால் அணிவிக்க முடியுமோ என்று ஐயுறுகிருள் அவளைத் தலைவன் தெளிவு படுத்தும்போது ''அண்ணுவின் தம்பிமார் பலருள் அறிவுடைநம்பி என்று ஒருவர் உண்டு. அவர் அண்ணு பேசிய கருத்தை அப்படியே மாற்றுமல் பேசும் ஆற்றலுடையவர் நான் உன் தோழிபோல அணிவிக்கும் ஆற்றலுடையவன்'' என்று கூறுகிருன்.

## பெருநயப்புரைத்தல்

உரிமைகொள் மக்களின் உள்ளவீ டெங்கணும் வீற்றிருக்கும்
பெருமைகொள் எண்ணுவாழ் நாட்டுடை வண்டேயிப் பெண்ணவள்தன்
அருமைகொள் வாயிதழ்த் தேன்மணம் போல்நீ யறிந்ததுண்போ
உரையெமக் கெனறேனு மோர்நா ளுணர்ந்துவந் தம் மலரே.

*(தெ--ரை) தலைவிக்கு ஓர் ஐயம் தலைவன் மீண்டும் வருவானோ என்று அதைக் குறிப்பறிந்த தலைவன். தன் மிகுந்த காதலை உணர்த்த எண்ணி, வண்டுகளை நோக்கி ''சுதந்தர உள்ளங்களில் வாழும் அண்ணா நாட்டு வண்டுகாள்! நீங்கள் இவள் வாயிதழ்த் தேன் மணம்போல எங்காவது கண்டதுண்டோ'' என்று கூறி அத்தேன் உண்ணதான் மீண்டு வரவிருப்பதைக் குறிப்பால் உணர்த்துகிறான்.*

## தெய்வத்திறம் பேசல்

மதியழ கன்தன்குறல் மாணபுற்ற மாணவப் போர்ப்படைக்கு
மதியழ கன்பேர்கொள் சோமண்ணா தன்னையே தந்தவண்ணா
மதியினா லாய்ந்தேற்ற மாணபினைப் போலன்றி மானேநீயென்
விதியினால் வந்துற்ற வெற்றியே யென்றாலும் வேண்டுவேனே.

*(தெ-ரை) தலைவி இன்னமும் தெளியாது, எண்ணி தலைவன், தனக்கு விதி முதலிய வற்றில் நம்பிக்கையில்லாவிட்டாலும் விதிதான் தனக்குத் தலைவியைத் தந்தது என்று கூறும்போது ''சோமசுந்தரம் என்ற ஒரு மாணவர் தலைவர் உண்டு. அவர் பெயரைத் தமிழ்ப்படுத்தினால் மதியழகன் என்று வரும். மதியழக னும் ஒரு மாணவர் தலைவர் இருவரையும் அண்ணா தன்மதியால் கண்டு ஏற்றார், நான் உன்னை விதியால் கண்டு ஏற்றேன்'' என்கிறான்.*

## பிரியேனென்றல்

அன்பழ கன்எனும் பேரா சிரியரைத் தம்பியாய்கொண்
டின்புறு மண்ணாமே லாணை யாய்ச் சொல்லுவே னேந்திழையே
நின்னிற் பிரியேன் பிரியினு மோரிர வுந்தரியேன்
மின்விழி தன்னிலே நீர்மிக ஊர்வதேன் மெல்லியலே.

*(தெ--ரை) தலைவன் பிரிவை யெண்ணியதும் அவள் உடல் வெளுத்தது அதையறிந்த தலைவன் சத்தியம் செய்து பிரியமாட்டேன் பிரியின் தரியேன் என்று ஆணையிட்டுச் சொல்கிறான். தலைவன் கடவுள் மீது ஆணையிட விரும்பவில்லை ஆகவே அண்ணா மீது ஆணையிடுகிறான். அதுவும் சொன்ன சொல் மாறாத அன்பழகன் என்னும் பேராசிரியரைத் துணைக்கொண்ட அண்ணா மீது ஆணையிடடுக் கூறல் பெரிதும் சிறப்பன்றோ.*

## பிரிந்து வருகென்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அன்புடைத் | தம்பியின் | உள்ளகத் | தார்ந்திடு | மண்ணுவைப்போல் |
| இன்பமே | உன்னகத் | தென்னுரு | எப்பொழுது | முள்ளதென்பேன் |
| பின்பென் | பிரிவேது | பேணுவாய் | என்பிரி | வோர்கணமே |
| என்பதா | லிப்பொழு | தாற்றுக | யான்வாழ் | ஏதுவதே. |

(தெ-ரை) எவ்வளவு சொல்லியும் ஆற்ருத தலைவியை நோக்கி "தம்பியரின் உள்ளத்துள் எப்போதும் இருந்து பிரியாமை போல, நானும் உன்னகத்துள் எப்போதும் இருப்பேன். பிரிவு என்பது பின்பு ஏது? '' என்கிருன் (தலைவியும் தலைவனது வாழ்வுக்காக ஆற்றுவள் என்பதாம்)

## இடமணித் தென்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| கம்பத்தாக் | கட்டியாடுங் | கொடி | யுன்னூர்க் | காண்பதற்குத் |
| துன்பத்துக் | கரளாவத் | தேவைகொல் | தூய்மைசொல் | செல்வரான |
| அன்பழ | கற்கண்ணு | தன்னண்மை | போல்நம்மூர் | அண்மையதாம் |
| இன்பத்திற் | கேன்பஞ்சம் | என்னினும் | வாடலேன் | ஏந்திழையே. |

(தெ-ரை) தலைவனின் வாழ்விடம் அருகாமையில் உள்ளதோ என்று தலைவி ஐயுற்றதைக் குறிப்பாலுணர்ந்ததலைவன் 'அண்ணுவுக்கும் பேராசிரியர் அன்பழகற்கும் எத்துணை நெருக்கமோ அத்துணை நெருக்கம் நமது இரு ஊர்கட்கும். என்னூரில் கட்டியுள்ள கொடியை உன் ஊரில் இருந்தே காணுமளவுக்கு அருகில் உள்ளது' என்று கூறுகிருன்.

# ச. தெளிவு

| | | | | |
|---|---|---|---|---|
| சொன்னசொல் | என்றுமே | மாறிடா | சொல்வேந்த | ராகவாழும் |
| என்னண்ணு | தன்தம்பி | என்ருகி | விட்டவர் | என்தலைவர் |
| என்னுளும் | சொல்வரோ | வாய்மைக்கு | வேருன | எச்சொலையும் |
| என்னெஞ்சே | நீயஞ்சல் | எற்றுக்கோ | இவ்வையம் | எண்ணுவதே. |

(தெ-ரை) அண்ணுவைச் சார்ந்தவர்கள் அறநெறி பிறழார் தலைவனே அண்ணுவின் தம்பி ஆகவே, தலைவி, அஞ்சிய தன் நெஞ்சத்துக்கு தெளிவு கூறி அமைகிருள்.

# ரு. பிரிவுழி மகிழ்ச்சி

செல்லும் கிழத்தி செலவுகண்டு உளத்தோடு சொல்லல் :

வழகார் தழிழை அழகார் மொழியில் வடித்தெடுத்துப்
பழகார் தமையும் பழகும் படிச்செய்யும் மண்ணுநாட்டு
மழவோர் பகைவர் மானம்போ கல்போலப் போவதைப்பார்
எழிலோர் வடிவமாய் வந்தென தின்னுயிர் கொண்டுநெஞ்சே.

(தெ-ரை) பழகாரையும் பழகுமாறு கேளாரும் வேட்ப மொழியும் பண்பு அண்ணுவுக்குண்டு அவர் தம்பியாகிய தனக்கும் அப்பண்புண்டு என்பதை தலைவன் நினைந்து தன் நெஞ்சை நோக்கி 'போரில் வென்றதும் பகைவரின் மானம் பறிபோவது போல, என்னுயிரைப் பறித்துக்கொண்டு தலைவி போகிருள்' என்று இருவரும் ஒருயிர் என்பது எண்ணி மகிழ்கிருன்.

பாகனேடு சொல்லல் :

அண்ணுவின் சொற்கேட்கும் கூட்டம் போல் ஆங்குள்ள ஆயமேதம்
எண்ணுமல் நிற்கின்ற தாவென்று முன்னும் எனதுநெஞ்சம்
பண்ணுள்தன் பின்வருமோ வென்று பின்னுமாய்ப் பார்த்துப்பார்த்தென்
கண்ணுவாள் போவதைக் காண்பாகா கள்ளமில் காரிகையே.

(தெ-ரை) தலைவனது நண்பன் அப்பொழுது அவனைத் தேடிக் கொண்டு வருகிருன். தலைவன் அவனை நோக்கி 'பாகா, முன்னும் பின்னும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு ஒருத்தி செல்வதைப் பார்; அவளுடைய தோழிமார்கள் கூட்டமாக நிற்பதையும் பார். அண்ணுவின் சொற்பொழிவைக் கேட்க வந்திருப்பது போல் பெருங்கூட்டமாக நிற்கிருர்கள். அவர்கள் தன்னைப் பார்த்து ஐயப்படுகிருர்களோ என்று முன்னும், என் உயிர் அவள் பின்னே வருகிறதோ என்று பின்னும் பார்த்துப் பார்த்துப் போகிருள்' என்று கூறுகிருன்.

# சா. பிரிவுழிக் கலங்கல்

ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோவென்னல் :

கடுக்கமில் கானையர் நம்மண்ணு தன்னையே நாடுதல்போல்
உடுக்கள் நடுவில் உளதோர் மதியினை ஒத்திருக்கும்
வடுக்கள் படியா வடிவாள் தனையே வணங்குதல்காண்
மடுக்குள் மலைபோல் மதியுமிக் காவந்த மாயமென்னே,

(தெ-ரை) தலைவி தன் தோழியர்களுடன் சேர்ந்தாள். வெள்ளம் போன்ற அத்தோழியர் கூட்டம் தலைவியை வணங்கி வரவேற்றது. இத்துணைச் சீரும் சிறப்பும் உள்ள தலைவி, தனியே வந்து தன்னெதிர்பட்டது என்ன விந்தை என்று தலைவன் எண்ணி 'நெஞ்சமே, தம்பியர் நடுவில் அண்ணா விளங்குதல் போல், தோழியர்களாகிய விண் மீன்களின் நடுவே மதியாகிய தலைவி விளங்குகிறாள். ஒரு மடுவுக்குள் மலை வந்து சேருதல் உண்டோ? இத்தலைவி எவ்வண்ணம் என்னை வந்து சேர்ந்தாள்? இது என்ன மாயம்' என்று கூறுகிறான்.

## வாயில் பெற்றுய்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பேணுதல் | செய்வதற் | கெத்துணை | பேரா | யினும்பெரியார் |
| காணுதல் | தன் துணைக் | காகநம் | மண்ணா | வொருவரன்றோ |
| வ ணுதல் | தேடுவோர் | கோடியே | என்னினும் | வஞ்சிதானே |
| பேணுதல் | ஓர் மதி | தானதென் | மால்தீர்க்கும் | பேர்மருந்தே. |

(தெ-ரை) தோழியர் ஆயிரக்கணக்கில் இருப்பினும், அவருள் ஒருத்திதான் உயிர்த்தோழியாக இருப்பாள். அவளுடைய உதவியும் தலைவனுக்குத் தேவை. அவளே அவளுக்குத் தூது செல்லும் தகுதியுடையவள். அவளைத் தலைவன் அறிகிறான். பெரியார் ஈ. வெ. ரா. அவர்களைப் பின்பற்றுவோர் ஆயிரக் கணக்கில் இருந்தாலும், தனது சிறந்த தொண்டராக அண்ணா வையே எண்ணுவதுபோல் தலைவியும் உயிர்ப்பாங்கியை எண்ணி யிருப்பவள் அவள்தான் தனது நோய் தீர்க்கும் மருந்து என தலைவன் நினைந்து மகிழ்கிறான்.

## பண்பு பாராட்டல் :

| | | | | |
|---|---|---|---|---|
| கண்ணைவே | லென்றிடின் | கொன்றுயிர் | ஊட்டுதல் | கண்டதுண்டோ |
| விண்ணைவெல் | திங்கட்கு | மிம்முக | வேட்கைகொள் | பார்வையேது |
| பெண்ணிவள் | அங்கமே | தங்கமாய்ச் | சொல்லினும் | பேதமைதான் |
| பண்ணைவெல் | சொல்வலன் | அண்ணாவைப் | போலுண்டோ | பாரினிலே. |

(தெ-ரை) தலைவியின் எழிலைத் தலைவன் பாராட்டும் போது 'கண்ணை வேல் எனலாம்; ஆனால் வேலுக்குக் கொல்லத்தான் தெரியுமே ஒழிய உயிர் கொடுக்கத்தெரியாது இவள் கண்ணோ எனக்குஉயிரைத்தந்தது முகத்தைத்திங்களுக்குஒப்புமைகூறலாம் ஆனால் அச் சந்திரனுக்கு வேட்கை யூட்டும் பார்வையில்லை. இவள் அங்கத்தைத் தங்கமென்றால் தங்கத்துக்கு மென்மையில்லை ஆகவே இவளுக்கு உவமை கூறமுடியாது. அண்ணாவுக்கு யாரை உவமிக்க முடியும்? என நினைந்து தலைவியின் எழிலைப்புகழ்கிறான்.

### பயந்தோர்ப் பழிச்சல்:

துன்பமே வோர்ந்திடாத் தூய்மைசொற் செல்வரா மண்ணுநாட்டில்
வன்புறு செய்கையும் வந்திடல் ஒல்லுமோ வாழ்க்கைதன்னில்
இன்பமே யன்றியோர் துன்பமுந் தந்திடா இன்பவல்லி
தன்னையான் பெற்றிடப் பெற்றவர் தம்மையே வாழ்த்துவேன்.

(தெ-ரை) இத்தகையதோ ரெழிலரசியைத் தனக்கென்றே பெற்றுத்தந்த அவளின் பெற்றோரைத் தலைவன் வாழ்த்துகிறான். ''அண்ணா நாடாளும்போது யாருக்கும் துன்பம் வருதல் கூடாது; எனக்கு ஏற்பட்ட துன்பத்தை நீக்கவேண்டும்; அதற்காகத்தான் அவளைப் பெற்றுத் தந்தார்கள்'' என்று அவர்களை வாழ்த்துதல் தலைவனின் கடமையல்லவா?

### கண்படை பெருதுகங்குறைதல்:

எடுத்துப் படிக்கும் எதையும் தொடுத்து முடித்திடாமல்
படுத்துப் பழக்கம் பயினறிடாப் பண்புடை யண்ணுதாரே
படுத்துப் படுத்துப் புரளினும் கண்படை பெற்றிடாமல்
தடுத்துப் படைக்கும் தன்மையைத் தையற்குத் தந்தவரே.

(தெ-ரை) தலைவியை நீங்கிய தலைவனுக்கு அன்றிரவு தூக்கமே வரவில்லை. ''தலைவி தன் உறக்கத்தைத் தடுக்கும் ஆற்றலை எப்படி எவரிடம் பெற்றாள்? அண்ணா ஏதாவது ஒரு புத்தகத்தைப் படிக்கத் தொடங்கி விட்டால் எத்துணை நாழிகையானாலும் தூங்காது படிக்கும் பயிற்சியுடையவர். அவர்தான் தலைவிக்கும் அவ்வாற்றலைத் தந்தாரோ'' என்று தலைவன் எண்ணுகிறான்.

## எ. இடந்தலைப்பாடு

### தந்த தெய்வந் தருமெனச் சேறல்:

சூளுரை எத்தனைச் சொல்லினும் எத்தர்கைச் சிக்கிடாமல்
ஆளுநல் வாய்ப்பினை அண்ணா விடமே அவனிமக்கள்
மீளவும் மீளவும் தந்துதந் தார்வமே கொள்ளுதல்போல்
நாளுமே நான்செலின் நங்கைதன் நல்லெழில் நல்குவளே.

(தெ-ரை) அவளை மறுபடியும்கூட எண்ணுகிறான். முன்பு முயங்கிய அந்த இடத்திற்குச் சென்றால் முன்போல தனக்கு அவள் இன்பம் நல்குவள் என்று எண்ணுகிறான் ஆளும் பொறுப்பை மீளவும் மீளவும் மக்கள் அண்ணாவுக்குத் தருவதை எண்ணி தன் தலைவியும் தருவாள் என்று அங்கு செல்ல எழுகிறான்.

## முந்துறக் காண்டல் :

இன்றைய கூட்டத்திற் கெம்மண்ணு வாராரோ என்றுசொல்லி
மன்றுளார் யாவரும் மாழ்கிய போழ்தில் மகிழவரும்
வென்றியை அன்றிவே றென்றையுங் கண்டிடா வண்ணுவைப்போல்
என்றனே இன்றுமே இன்பவெள் ளத்திலே ஏற்றுவாளே.

(தெ-ரை) தலைவன் பழைய பழகிய இடத்திற்குச் செல்கிருன். தலைவியையும் காண்கிருன். சில சமயம் தான் கலந்து உரையாற்ற வேண்டிய கூட்டத்துக்கு அண்ணு காலதாமதமாக வருவார். அப்போழ்து கூட்டத்துள்ளோர் வருவாரோ மாட்டாரோ என்று வருந்தும் நேரத்தில் அண்ணு வந்தால் கூட்டத்தினர் எவ்வணம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்வார்களோ அதுபோல தலைவனும் மகிழ்கிருன்.

## முயங்கல் :

செந்தமிழ் அண்ணுபால் சேர்ந்ததைப் போலின்று சிக்கிக்கொண்ட
அந்தமில் அன்பினல் பைந்தமிழ்ப் பண்பிரு ளார்வமோடு
சொந்தமாய் வந்தவள் சொன்னதைக் கண்டதைச் சொல்லுவேனே
கொந்தவிழ்ப் பூவினுள் வண்டுசெந் தேனினைக் கொண்டதென்னே

(தெ-ரை) வண்டு பூவினுள் தேனுண்டதைக் காண்கிருன். அண்ணுவிடம் செந்தமிழ் கொஞ்சி விளையாடுவதையும் எண்ணுகிருன். தலைவியைப் பூவாக, தமிழாகக் கொண்டான் தலைவன்.

## புகழ்தல் :

அண்ணுவைப் போலே அவைதன்னில் பேச அனைவருமே
எண்ணும லுள்ளாரோ யாருமிப் பாரினி லேங்திழையே
பண்ணினை வெல்லுமுன் பாகு மொழியினைப் பாலுங்தேனும்
எண்ணினும் பெற்றிடற் கேலுமோ சொல்லுவா யென்றனுக்கே,

(தெ-ரை) அவளுடன் அவன் கலந்துரையாடினன். அவள் மொழி அவனுக்குப் பாலையும் தேனையும் விட இனிக்கிறது. அண்ணுவைப்போலப்பேச எண்ணுவோர் பலரெனினும் முடிவதில்லையே. அதுபோல, அவள் போல இனிமையுடையது எதுவுமிருக்குமோ அவனுக்கு?

### ஆயத்துய்த்தல்:

| | | | | |
|---|---|---|---|---|
| எப்போ | வருவாரோ | என்றெண்ணி | ஏங்கும்பல் | தம்பிமார்க்குத் |
| தப்பா | துவகையைத் | தந்திடுந் | தன்மையுள் | அண்ணவைப்போல் |
| இப்போ | வருவாயோ | என்றதோ | ஏங்கிடுந் | தோழிமார்பால் |
| செப்பாது | செல்வாய்நீ | என்றுலும் | யானெங்கே | செல்லுவதே. |

*(தெ–ரை)* தலைவியை அண்ணவுக்கும், தோழியரை அண்ணவின் வரவுக்காகக் காத்திருக்கும் தம்பிமார்களுக்கும் உவமிக்கும் தலைவன், தான்யாங்கு செல்வது என்றும் எண்ணத் தொடங்குகிறுன்.

## அ. பாங்கற் கூட்டம்

### தலைவன் பாங்கனைச் சார்தல்:

| | | | | |
|---|---|---|---|---|
| தம்பியர் | தங்களுக் | கெத்தகைத் | தொல்லைவந் | தாலுமென்றும் |
| தெம்புடன் | யாவையுந் | தீர்ந்திடச் | சேர்வதோர் | அண்ணவன்றே |
| நம்முடைக் | காதலை | நண்பன்பா | லின்றே | நவின்றுவிட்டால் |
| செம்மனக் | காரிகை | சேர்ந்திட | வோர்வழி | செப்புவானே, |

*(தெ-தை)* இரண்டு நாட்கள் இன்பங் கொண்ட தலைவனது வேட்கை தீரவில்லை. மூன்றும் நாளும் கூட எண்ணுகிறுன். இதற்கு யார் துணையை நாடுவது? மூன்றும் நாளும் தலைவி அவ்விடமே வருவாள் என்பது உறுதியன்று. ஏன்எனின் தோழியர்க்கு ஐயம் எழும். தம்பியர் யார்க்காவது தொல்லை ஏற்படின் நாடுவது அண்ணவைத்தானே. அதுபோல தலைவனும் தன் துணைவஞகிய பாங்கனை நாடுகிறுன்.

### பாங்கன் தலைவனை உற்றது விஞதல்:

| | | | | |
|---|---|---|---|---|
| அறிஞரே | றண்ணவின் | ஆசிபெற் | றேரை | அரசியலில் |
| முறித்திட | வெண்ணியோர் | மூஞ்சிபோல் | நின்முகம் | வாடிநிற்க |
| குறித்தவர் | யாரெனக் | கூறுவாய் | நண்பனே | கோளந்தன்னில் |
| நெற்த்தவர் | சென்னியை | நின்னடி | சேர்ப்பன்யான் | நேர்ந்ததென்னே. |

*(தெ-ரை)* தலைவன் பாங்கனை நாடுகிறுன், தலைவன் முகம் சோர்நதிருக்கிறது. அண்ணவை வெற்றிகாண எண்ணி தோல்வியிற்றேரின் முகமே அவனுக்கு நினைவுக்கு வருகிறது. ''ஏன் உன் மூஞ்சி இப்படி வாடியிருக்கிறது'' என்று கேட்டு, தலைவனுக்கு வாட்டம் தந்தவரை வாட்டுவதாக உறுதிகூறுகிறுன் (மூஞ்சி = முகத்துக்கு பேச்சு வழக்கு;) சோக முகத்தை இழிவுபடுத்தி என்றலும் உண்டு)

### தலைவன் உற்றதுரைத்தல் :

உலகதது வாழ்மக்கள் உள்ளமொவ் வொன்றிலு மூன்றிவாழும்
புலகற்ற பைந்தமிழ்ப் பண்புடை யண்ணுவாழ் பார்தனிலே
நலமுற்ரு ரெல்லாரும் நான்மட்டும் நண்பா நலிந்திடற்கு
நலமுற்ற திங்கள்தன் நீள்கணை கொண்டெதிர் நின்றதுவே,

(தெ-ரை) ''அண்ணு நாடாளும் போது யார்தான் வருத்தம் எய்துவர்; நண்பா, எல்லாரும் நலமாகவே உள்ளனர். நான்மட்டுமே வருத்தம் எய்தியுள்ளேன். அதற்குக் காரணம், வானுலகை விட்டு சந்திரன் நிலவுலகுக்கு வந்து நீண்ட அம்புகளை என் எதிர் தொடுததததுதான'' என று தலைவன் மறுமொழி கூறுகிருன்.

(தலைவி—நிலா ; இருகண்கள்—கணைகள்)

### கற்றறி பாங்கன் கழறல் :

குலையாத நெஞ்சினைக் கொண்டநம் மண்ணுவின் கொள்கையிலே
நிலையாக சார்ந்துள்ள நேரிழை சத்திய வாணிமுத்தாய்த்
தலையான சீர்பெற்ற தங்கைமார் வாழும் தமிழகத்தில்
கலையாவுந் தேர்ந்துள்ள காளைநீ சோர்வுறக் கண்டதென்னே?

(தெ–ரை) பாங்கன் தலைவன் கூறியதை குறிப்பாலுணர்ந்து. ''அண்ணு குலையாத நெஞ்சுடையவர் அவர் கொள்கைவழியில் சத்தியவாணிமுத்து போன்ற பெண்கள் நிற்கிறுர்கள். அவர்கள் யார்க்கும் தொல்லை கொடுக்கமாட்டார்களே. நீயோ கலைகளில் தேர்ந்தவன். உனக்கு எப்படி சோர்வு உண்டாகலாம்'' என்று தலைவனை இடித்துரைக்கிருன்.

### கிழவோன் கழற்றெதிர் மறுத்தல் :

நினைத்ததைச் செந்தமிழ் நெஞ்சொடு சிந்தையில் நேரச்செய்து
புனைந்திடு ... மண்ணுசொல் போற்றிடா மாந்தரிப் பூமியுண்டோ?
அனைத்தையுங் கற்றபே ரன்பனே கண்ணிலான் தன்னையன்றி
எனைத்தையும் வென்றவள் கண்ணெதிர் பட்டபின் மீள்வதெங்ஙே,

(தெ-ரை) ''நண்பா, நீ அனைத்தும் அறிந்தவன். சொல்லைப் போற்ருதவர் இவ்வுலகில் உண்டா? குருடனைத்தவிர வேறுயார் அவளைப் பார்த்தாலும் அங்கேயே மயங்கி வீழ்ந்திருப்பார்களே தவிர மீண்டு வந்து உலாவ முடிந்திருக்காது'' என்கிருன் தலைவன்

## கிழவோற் பழித்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பண்புடை | யண்ணுவின் | பாசறை | தன்னில் | பயின்றவர்கள் |
| பண்படா | எண்ணத்தால் | பாதை | விளங்கிடப் | பார்த்ததுண்டோ |
| நண்பனே | நீயின்று | நாடிய | நீள்விழி | நாட்டையாளத் |
| திண்படை | யாவளோ. | தீதெதுங் | கொள்வளோ | சிந்திப்பாயே. |

(தெ-ரை) பாங்கன் தலைவனைப் பழிக்கிறான். தலைவன் அண்ணு வின் பாசறையைச் சேர்ந்தவன். நாட்டுக்கும் கொள்கைக்கும் கடமையைச் செய்யவேண்டியவன். தனக்குத் துணையாக வருப வள் தனக்குத் தகுந்தவளா என்பதை யெல்லாம் கண்டபிற கல் லவா காதலிக்க வேண்டும்? இக்கருத்தைப் பாங்கன் தலைவற்குக் கூறுகிறான்.

## கிழவோன் வேட்கை தாங்கற் கருமை சாற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| சிந்தனைச் | சிற்பியாம் | சிற்றர | சென்னுமோர் | சீர்திருத்தத் |
| தந்தையைத் | தன்னுடைத் | தம்பியாய்த் | தாங்கிநின் | றண்ணுதானும் |
| செந்தமிழ் | நாட்டினைச் | சீர்திருத்தம் | செய்தும் | சீறுநண்பா |
| சொந்தமாய் | வந்தவள் | சூழலை | நீக்கிடின் | சோர்வுதானே. |

(தெ-ரை) தலைவன் தனது ஆற்றாமையைப் பாங்கற்குரைக்கி றான். ''நண்பனே, இந்தக்காலத்திலும் நீ என்னை சீறுகிறாயே. சிந்தனைச் சிற்பி சிற்றரசு. அவரோ சீர்திருத்தத்தின் தந்தை. என் றாலும் அண்ணுக்குத் தம்பி. இவர்களுடையசீர்திருத்தக் கொள் கைகளை யெல்லாம் கேட்டபிறகுமா காதலுக்குத் தடை விதிக்கக் கருதுகிறாய்'' என்று தலைவன் மறுமொழியுரைக்கிறான்.

## பாங்கன் தன்மனத் தழுங்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| கேட்டாரை | யீர்த்துப்பின் | கேளாரை | வீழ்த்துந்தன் | கேள்விப்பேச்சால் |
| நாட்டரை | வென்றுபின் | நாடாளு | மண்ணுவாழ் | நாட்டினிலே |
| கூட்டாளி | யென்னையே | கூப்பிட்டுத் | தன்குறை | கூறிநின்றான் |
| வேட்டாரை | வேல்கொண்டு | வீழ்த்திடும் | வேதனை | வீழ்த்துதற்கே. |

(தெ-ரை) தலைவன் கூறியவற்றை பாங்கன் சிந்தித்து ''அண்ணு தான் எழுப்பிய வினுக்கள் மூலமே பகைவரை வீழ்த்தும் ஆற்றல் உள்ளவர் அவர் இன்று ஆள்கிறார். தலைவனோ வேல்விழியால் தாக்குண்டு தவிக்கிறான். அவன்குறை தீர்ப்பது பாங்கனின் கடமையல்லவா'' என்று, எண்ணுகிறான்.

## பாங்கன் தலைவனோடுழுங்கல்:

தென்னகக் காந்திபோல் தீமையைப் போக்கிழும் தெய்வம்போன்ற
மென்மைகொள் எண்ணுவே மேலலர் கொள்சினம் கொண்டுவிட்டால்
என்னுறு மிங்கில மென்றுநீ யன்பனே எண்ணிப்பார்ப்பாய்
துன்புறு முன்மனம் தூய்மையில் நீங்கிடின் தொல்லையன்றே.

(தெ-ரை) அவ்வண்ணம் எண்ணிய பாங்கன் ''என் அன்பனே, நீ மிகவும் தூய்மையான சிந்தையுடையன். நீயே இவ்வணம் துன்புற்றால் என்னாகும்? தெய்வத் தன்மை வாய்ந்த தென்னாட்டு காந்தி அண்ணாவே கோபம் கொண்டால் அதை எவ்வணம் தணிப்பது'' என்று கேட்கிறான்

## எவ்விடத் தெவ்வியற்றென்றல்:

உன்னதப் பேற்றினை ஊற்றபல் தீயரே ஊறளித்தும்
பின்னிடா தன்னவர் பேதுறச் செய்துவா ழண்ணாநாட்டில்
மன்மதப் பாணமும் மாய்த்திடா நண்பனே மங்கைநல்லாள்
தன்மனை யாண்டதோ தன்மையென் சொல்வையோ என்றனுக்கே.

(தெ-ரை) இவ்வண்ணம் கேட்டும் தலைவன் மாறினானல்லன். ஆதலின் தலைவனது துன்பம் நீக்கக் கருதிய பாங்கன் ''அண்ணாவுக்கும் தீங்கிழைப்போர் இருக்கிறார்கள். அவர்களை அண்ணாவே வெற்றி கொள்ளுவார். உனக்கு ஊறளித்தவளின் வாழ்விடத்தையும், தன்மையையும் எனக்கு உணர்த்துவாயாக'' என்று கூறுகிறான்.

## அவனஃதிவ்விடத் திவ்வியற் றென்றல்:

இன்னல் தரினும் இனியவே செய்யும்நம் மண்ணாவெற்பில்
கன்னல் மொழியால் கனிவின் விழியால் கருத்தையள்ளி
மின்னல் இடையால் மிடுக்கு நடையால் மிகவருத்தி
நென்னல் தனியே நெறியெதிர் கொண்டெனை நேர்ந்தனளே.

(தெ-ரை) ''நண்பனே, இன்னல் செய்தவர்க்கும் இனியவையே செய்யும் நம் அண்ணா வெற்பிலேதான் நான் அவளைக்கண்டேன், அவள் மொழியிலே கரும்பின் சுவையுண்டு. விழியிலே கனிவைக் கண்டேன். அவள் இடை மின்னலை ஒத்தது. நடை மிடுக்காக இருக்கும். நேற்று தனிமையில் சந்தித்தேன்'' என்று தலைவன் கூறுகிறான். (வெற்பு=மலைச்சாரல்)

### பாங்கன் இறைவனைத் தேற்றல் :

அண்ணாதன் தம்பிக்கே ஆறாத் துயரம் அணுகிவிட்டால்
உண்ணாதும் அத்துயர் ஒட்டா தொழிவாரோ உண்மைநண்பா
கண்ணாலுன் நெஞ்சைக் கவர்ந்தவள் தன்னையக் காவினிலே
கண்டுநான் மீளுவன் காத்திரு நீயுமக் காரிகைக்கே

(தெ-ரை) பாங்கன் தலைவனை ஆற்ற யெண்ணி, ''அன்பனே, தன் தம்பிக்குத் துன்பமொன்று உண்டானால் அண்ணா தூங்குதலும் உண்டோ? துயரை நீக்காமல் உறங்கிடார். உன் துயர் களைய நான் அவ்விடம் சென்று அவளைக்கண்டு வரும்வரை காத்திரு'' என்று கூறிப் புறப்படுகிறான்.

### குறிவயிற் சேறல் :

அன்பே உருவான அண்ணா வரசா எழுத நாட்டில்
துன்பே உருவாகத் தோன்றலை மாற்றிய தோகைநல்லாள்
இன்பே உருவாக என்னெதிர் நிற்பளோ எப்படியோ
முன்பே வருவளோ முன்வந்து மீள்வளோ முந்துநெஞ்சே.

(தெ-ரை) ''அன்புருவான அண்ணா அரசாள்கிறார். ஆனால் அவளோ என் அன்பனை துன்ப உருவாக மாற்றி விட்டாள். அவள் எப்படி இருப்பாளோ? நான் செல்வதற்கு முன்பே வந்து விட்டுப் போய் விடுவாளோ'' என்றெல்லாம் பாங்கன் எண்ணுகிறான். பின் தலைவன் குறிப்பிட்ட இடத்துக்கு விரைவாகச் செல்லுகிறான்.

### இறைவியைக் காண்டல் :

தேம்பிழி யாழ்மொழி சேர்த்திடுஞ் தீங்கனிக் கொவ்வையோடு
மாம்பழங் கள்மேலே மாவடுக் கள்ளிரண் டார்ந்தமைகாண்
சோம்பலே இல்லாத சூரர் பலர்வாழு மண்ணாநாட்டில்
சோம்பிய தோழனும் சுட்டிய தோருருச் சூழலிதே

(தெ-ரை) தலைவியைக் கண்டு ''இவள்தான் நம் நண்பனைச் சோர்வடையச் செய்திருக்க வேண்டும். இவள் இதழ்கள் இனிய கொவ்வைக் கனிகள் போன்றிருக்கின்றன. கன்னங்களாகிய மாம்பழங்களின்மேல் கண்களாகிய இரு மாவடுக்களும் இருக்கின்றன'' என்று எண்ணுகிறான்.

## இகழ்ந்தற் கிரங்கல்:

| | | | | |
|---|---|---|---|---|
| அடுக்குத் | தொடரால் | அழகு | மொழியால் | அறிஞரண்ணு |
| தொடுக்கு | மறிவுத் | தொடர்சொற் | பொழிவை | மடுத்தபின்னே |
| இடுக்க | ணெதுவேற் | படினு | மெவரும் | ஏற்பரன்றே |
| உடுக்கை | யிடையாள் | உன்னு | மெவரும் | உறைவதெங்கே |

(தெ-ரை) தலைவியின் பேரெழிலைக் கண்ட பாங்கன், "அண்ணு வின் அழகு தமிழ்ச்சொல்லைக் கேட்டு மயங்காதவரும் உண்டோ? எத்துணைத் துன்பம் ஏற்பட்டாலும் அதை ஏற்பரே. இவள் எழிலைக்கண்டு மயங்கிய நம் தலைவனை இகழ்ந்தது தவறே" என்று எண்ணி தன் தவறை உணர்கிறான்.

## தலைவனை வியந்தல்:

| | | | | |
|---|---|---|---|---|
| எண்ணு | இயல்புகள் | யாவுமே | ஒன்ரு | யிணைந்துநிற்கும் |
| அண்ணு | இயக்கத்தி | லார்வ | முறச்சேரு | மாருமென்றும் |
| ஒண்ணு | இயைபினை | யோர்வதிஞ் | ஞால | முணர்வதுண்டோ |
| பெண்ணு | ளிவளைப் | பிரிந்தவன் | வந்ததெப் | பேதைமையே |

(தெ-ரை) "இத்துணைப் பேரெழில் படைத்த இவளைக்கண்டு, உள்ளம் பறிகொடுத்த நம் தலைவன் எவ்வண்ணம் இவளைப் பிரிந்து வர முடிந்தது? அண்ணுவின் இயக்கத்தில் ஆர்வம் கொண்ட எவரும் பிரிந்து செல்ல இயலாதே" என்று எண்ணிய பாங்கன் தலைவனை வியந்து பாராட்டுகிறான்.

## தலைவியை வியத்தல்:

| | | | | |
|---|---|---|---|---|
| செந்தமிழ் | வார்த்தைகள் | சீர்பெற | அண்ணுவாய்ச் | சேர்ந்ததேபோல் |
| செந்தளிர் | வஞ்சியில் | சேல்வந்து | துள்ளுமிவ் | விந்தையென்னே |
| செந்நிறத் | திங்களும் | திங்கள்மேல் | செல்லும் | கருமுகிலும் |
| இந்நிலங் | கண்டியோ | எங்கணும் | நெஞ்சமே | இங்ஙனமே |

(தெ-ரை) "அண்ணுவின் நாவில் செந்தமிழ்ச் சொற்கள் துள்ளி ஓடிவருவதுண்டு. சிவந்த தளிர் கொண்ட கொடியில் சேல் மீன்கள் துள்ளி வருவதை இன்றுதான் நான் காண்கிறேன். சிவந்த சந்திரனையும் அதன்மேல் கருத்த மேகங்களையும் நான் கண்டதில்லையே" என்று எண்ணி தலைவியின் பேரெழிலை வியந்துரைக்கிறான். (தலைவியைக் கொடியாகவும், முகத்தை சிவந்த சந்திரனுகவும் கூந்தலைக் கருமேகமாகவும் கூறி கருத்த மேகம் திங்களுக்கு மேல் செல்லும் இயற்கையில்லாத ஒரு காட்சியை வியந்தான்.)

### தலைவன் றனக்குத் தலைவி நிலை கூறல்:

அயல்நாடு சென்றநம் மண்ணு வருகைக்கா யன்புத்தம்பி
செயல்யாவு மெண்ணுது சிந்தித்தோர் சாலைபால் சேர்வதேபோல்
மயல்மேவு நெஞ்சோடு மங்கைநல் லாளுந்தன் மன்னனுக்காய்ப்
புயல்தாவி நிற்கின்ற பூஞ்சோலை போநந்தங்கே நிற்கின்ருளே.

*(தெ-ரை) தலைவியைக் கண்ட பாங்கன் தலைவனிடம் சென்று "அயல்நாடு சென்று மீளும் அண்ணுவைக் காணும் ஆர்வத் தோடு நிற்கும் தம்பி ஒருவனைப்போல, உன் தலைவி, சோலை யொன்றில் நிற்கின்ருல்" என்று உரைக்கிருன்.*

### தலைவன் கூறல்:

கூர்மதி கொண்டுநற் கொள்கையே கூறிடும் தம்பிமார்கள்
சீர்மிகு நம்மண்ணு செப்புமோர் நல்வழி செல்வதேபோல்
பார்மதி பார்த்தநம் பாங்கனசொல் நேர்வழிப் பாதைதன்னில்
சேர்மதி பெற்றதால் சேல்விழி யாளிடம் சேர்வுற்றேனே.

*(தெ-ரை) தலைவியைக் காணச் செல்லும் தலைவன் "அண்ணு சொல்வழி தம்பிமார் சென்று பயன் பெறுதல் போல, யானும் பாங்கன் சொற்படி சென்று பயனடைவேன்" என்று எண்ணி அவ்விடம் சேர்கிருன்.*

### தலைவியைக் காண்டல்:

கூட்டத்திற் கண்ணுவைக் கூப்பிட்டுப் பேசச்செல் கொள்கைவீர்
வாட்டத்தோ டண்ணன் வருகைக்காய்க் காத்து வருந்தலேபோல்
கூட்டத்திற் கென்றன் குறுகலை நோக்கும் குறியிடத்தில்
வாட்டத்தைப் போக்கும் வதன மதியின்று வாடியதே.

*(தெ-ரை) பொதுக்கூட்டம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்து அண்ணுவின் வருகைக்காகக் காத்திருக்கும் தம்பியைப் போல் தலைவி காத்திருப்பதைப் பார்த்து நிற்கிருன் தலைவன்.*

### கலவியின் மகிழ்தல்:

ஆட்சியைக் கைப்பற்றி அண்ணையின் ருள்வதைக் காணுகின்ற
மாட்சியை யெண்ணியே மாநில மக்கள் மகிழ்வதேபோல்
காட்சியா லென்னைக் கவர்ந்தாளும் யானும் களித்தமைக்கு
சாட்சியா ரெங்களைச் சார்ந்தவர்க் காரினி சாற்றுவோரே.

*(தெ-ரை) தலைவியைக் கலந்து மகிழ்கிருன். அரசாட்சியை அண்ணு கைப்பற்றிப் பெருமையோடு ஆளுவதை யெண்ணி யெண்ணி மக்கள் மகிழ்வதைப் போல, தன இன்ப நுகர்ச்சியை யெண்ணி யெண்ணி தலைவன் இறும்பூதெய்துகிருன்.*

## புகழ்தல் :

ஆற்றலா லன்பா லறிவா லெழுத்தா லகிலமெங்கும்
போற்றலா லண்ணவைப் போலென்றுங் கண்டிடப் போவதுண்டோ
கூற்றலா லுன்னுடைக் கூர்விழிக் கீடெனக் கோளமீதில்
சாற்றலா கும்பொருள் சார்ந்திழன் ஒன்றேனும் சாற்றுவாயே

*(தெ-ரை) தலைவியின் கண்களை எதற்காவது உவமித்துப் புகழ எண்ணுகிறான். கூற்றுவனைக் கூறலாம் ஆயினும் கொல்லுதலோடு வாழவும் வைக்கும் பண்பு அவனிடம் இல்லாமை அவன் நினைவுக்கு வருகிறது. அண்ணவின் ஆற்றலுக்கும், அன்பிற்கும், அறிவுக்கும், எழுத்துக்கும் உவமை கூற முடியாது என்பதை எண்ணி, தலைவிக்கும் உவமை கிடையாது என்று புகழ்கிறான்.*

## பாங்கியொடு வருசெனப் பகர்தல்

நண்ணா ரெனினும் நலிவெது மெண்ணிடா நற்குணங்கொள்
அண்ணாவின் நாட்டினை ஆள்கின்ற ராயினும் ஆயிழைநீ
பண்ணார் மொழியுடைப் பாவையா முன்னுயிர்ப் பாங்கியோடு
நண்ணலே நல்லது நள்னெறி நங்கையே நாடிவாயே.

*(தெ-ரை) தலைவி தனியே வருவது அவனுக்கு விருப்பமாக இல்லை. ஏதாவது அபாயம் ஏற்படும் என்று எண்ணி ''ஆய்ந்த ஆபரணங்களை அனிந்த என் தலைவியே, அண்ணா ஆளுகையில் துன்பம் ஒன்றும் உண்டாகாது என்று எண்ணி நீ தனியே வருகிறாய். எனினும் எவனாவது ஒரு கொடுமையாளனும் வாழக்கூடும். ஆகவே உன்னுயிர்ப் பாங்கியுடனேயே இனி நீ வருவாயாக'' என்று அறிவுரை தருகிறான்.*

## பாங்கிற் கூட்டல்

உலகினர் யாவரும் உள்ளன்போ டண்ணாவை யுன்னுதல்போல்
அலகிலா தோழியர் அன்பொடு சேர்ந்தநல் லார்வத்தோடு
நலமெலா மொன்றிட நண்பொடு உன்னையே நாடிநிற்கும்
நிலையிணா லங்குநீ சென்றிடல் நேர்மைதான் நீள்விழியே

*(தெ-ரை) ''அன்பே, உலக மக்கள் அண்ணாவை எப்போழ்தும் உளத்துள் எண்ணிக்கொண்டே இருப்பதுபோல், உன்னை உன் தோழிமார்கள் எண்ணிக்கொண்டிருப்பார்கள். நீ அவர்கள்பால் இப்போழ்து சேர்வையாக'' என்று தலைவன் தலைவியை அவளின் தோழியர்பால் விடுக்கிறான்.*

# கூ. பாங்கி மதியுடன்பாடு.

## தோற்றத் தாலாராய்தல்:

அன்புடன் யாரையும் ஆட்கொளும் பண்புடை அண்ணநாட்டில்
சென்றிழன் யாதொரு தீமையும் சிந்தையுஞ் சேர்வதுண்டோ
இன்றிவள் பொன்னுடல் இத்தனைப் பொன்றிட ஏதுவேதோ
கன்றிய நெஞ்சமே கன்னியின் நீள்விழி காணுவாயே.

*(தெ-ரை)* தலைவனைக் கூடிவந்த தலைவியிடம், பாங்கி சிலவேறு பாடுகளைக் காண்கிறாள். ஐயுற்ற பாங்கி, ''யாருக்கும் தீங்கு விளையா வகையில் இந்த நாட்டை அண்ண ஆளுகிறார். இவளது பொன்போன்ற உடலில் ஏன் வேறுபாடு வரவேண்டும். விழியில் கூட மாறுபாடு தோன்றுகிறதே'' என்று நினைக்கிறாள்.

## ஒழுக்கத்தாலையம் தீர்தல்:

தம்பியர் யாவருந் தன்னிக ரற்றநம் மண்ணதன்னை
எம்பிரான் போலவே எண்ணித் தொழுகின்றா ரென்னவென்றும்
அம்பிறைத் திங்களை ஆராதனைச்செய வார்வம் கொள்வாய்
இம்முறைச் சென்றிட எத்தடை வந்ததோ ஏந்திழையே.

*(தெ-ரை)* தன் ஐயத்தைத் தீர்த்துக்கொள்ள, ஒரு ஆலோசனை செய்கிறாள் தோழி. ஒருத்தி ஒருவனை மனதில் வரைந்துவிட்டால் வேறு கடவுளை தொழ மாட்டாள். இவ்வழக்கை யெண்ணி, தலைவியை பிறை தொழ அழைக்கிறாள் தோழி. தம்பியர் அண்ணவைத் தொழுவதுபோல தொழ அழைத்தும் தலைவி பிறையை வணங்க மறுக்கிறாள். இதற்கு முன்னெல்லாம் பிறையைத் தொழுது வணங்கியவள் இப்போது மறுத்திட வேண்டிய காரணத்தைத் தோழி தலைவியிடம் வினவுகிறாள்.

## சுனைநயப் புரைத்தல்:

அறிவொடும் அன்பொடும் அண்ணயின் றுற்றும் அரும்பணிககாய்
நெறியறி மாந்தர்கள் நேர்பொருள் யாவுமே நேர்வதேபோல்
குறியவாய்ச் செம்மையைக் கூர்வேற் கருமையைக் கொண்டதற்காய்ச்
நறியதோர் முல்லையை நல்கிய தோர்சுனை நங்கையெங்கே

*(தெ-ரை)* தன் காதலை அப்போதும் தலைவி தோழிக்குக் கூறா மலிருக்கவே, தலைவியின் கண் சிவந்திருத்தலையும், இதழ் வெளுத் திருத்தலையும் நோக்கி அதற்கான காரணங்களைத் தோழி கேட்க, சுனை நீரில் மூழ்கி விளையாடியதால் ஏற்பட்டது என்றால் தலைவி.

அப்பொழுது ''தலைவியே, இந்நாட்டை அறிஞர் அண்ணா அன்போடு ஆட்சி செய்வதற்குக் கைம்மாறாக, சான்றோர் பல்வேறு உதவிகளைச் செய்து ஊக்குவிக்கிறார்கள். ஆனால் அண்ணா தனக்காக ஒரு பொருளையும் பெறுவதில்லை. நீயோ, உன்னுடைய உதட்டுச் செம்மையையும், கண்ணின் கருமையையும் சுனைக்குக் கொடுத்துவிட்டு நறுமணம் பொருந்திய முல்லை மாலையைப் பெற்று வந்திருக்கிறாய். அப்படிப்பட்ட சுனை எங்கே உள்ளது என்று வினவுகிறாள்.

### சுனை வியந்துரைத்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| இல்லையென் | பார்க்கெல்லாம் | இல்லையேன் | றெப்போதுஞ் | சொல்லிடாமல் |
| ஒல்லும் | வகையில் | உதவியைச் | செய்துவாழ் | அண்ணாவூரில் |
| முல்லையும் | நெற்றிமுன் | வேர்வும் | முருகும் | தருவதானால் |
| சொல்வாய் | நல்லாய் | சுனையதில் | நானும் | சுழலுவேனே, |

(தெ-ரை) வினாவிற்கு விடை வராதது நோக்கி, ''வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்து அரசாலும் அண்ணாவின் ஊரில் நான் உன்னை ஒன்று வேண்டுகிறேன். தனது நீரில் குளித்தால், முல்லை மாலையும், நெற்றியில் சிறு வியர்வையும், அழகும் தரக்கூடிய சுனை இருக்குமிடத்தை எனக்குக்கூறு. நானும் அவற்றைப் பெற்றுவருகிறேன்'' என்று தோழி கூறுகிறாள். (போகம் துய்த்தலால் கண் சிவத்தல், நெற்றியில் வியர்வை தோன்றல் ஏற்படும் என்று தெரிந்த தோழி இவ் வகையாகக் கூறி தன் ஐயம் தெளிகிறாள்)

### தகையணங் குறுத்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| நீதியும் | நேர்மையும் | நேரச்செய் | யண்ணாவின் | ஆட்சிதன்னில் |
| ஏதெது | மில்லாம | லெச்சிறு | மாற்றமு | மேற்படுமோ ? |
| கோதைநீ | செவ்விழி | வெள்ளிதழ்க் | கொண்டதென் | கூறுவாயோ |
| மாதுநீ | என்னுயிர் | மங்கைபோல் | வந்தவோர் | மாலணங்கே |

(தெ-ரை) இவ்வளவு கூறியும், தலைவி தன் நாணம் காரணமாக உண்மையை உரைக்காமலேயே இருக்கிறாள். தோழி, மேலும் ஆலோசித்து, ''அண்ணாவின் நேர்மையான ஆட்சி இப்போது நடைபெறுகிறது. ஆகவே காரணமில்லாமல் எந்த மாறுபாடும் நிகழாது. காரணம் ஏதுமே இல்லாமல் உன்னிடம் இவ்வகை மாறுபாடுகள் இருப்பதால் நீ என் தோழியல்லள். அவளைப் போல வேடம் பூண்டுவந்த பெண் தேவதை போலும்'' என்று கூறுகிறாள்.

### நடுங்க நாட்டம்.

தன்தம்பி யாரேனும் தன்னெறி மாறிடின் தாறுமாறுல்
என்தம்பி யல்லன் இவனென் றியம்லடு மண்ணுகன்போல்
தன்கண் சிவந்த தலைதடு மாற்றங்கொள் தந்தயானை
ஒன்றிந்த ஊரெல்லாம் ஒடி யலைந்து வருவதுண்டே

(தெ-ரை) இவ்வண்ணம் பொய் கூறியும், தலைவி அசைந்து கொடுப்பவளாயில்லை. ஆகவே, தலைவனுக்கு ஆபத்து நேரிடக் கூடிய ஒரு செய்தியைக் கற்பித்துக் கூறத்துணிந்து ''தம்பிமாருள் யாராவது தவறு செய்தால், அண்ணாவின் கண்கள் கோபத்தால் சிவக்கும். அதுபோல் சிவந்த கண்களோடு கூடிய மதயானை ஒன்று இப்பக்கமாக அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கிறது'' என்று தோழி கூறுகிறாள்.

### பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்:

திராவிட முன்னேற்றக் கட்சியை இங்குளோர் தேர்தல்தன்னில்
ஒருதட மாய்க்கொண்டு ஊராள அண்ணாவை ஓர்ந்ததேபோல்
கருவிடக் கண்ணுடைக் கன்னியின் பாங்கியை நாடிக்கண்டு
மருவிட வாராதம் மங்கையை வந்திடச் செய்குவமே

(தெ-ரை) தன் தலைவியின் காதல் விளையாட்டைத் தோழி உணர்ந்திருந்தும், தலைவியின் வாயால் அதை வெளிப்படுத்த எண்ணிய தோழிக்குத் தோல்விதான் கிட்டுகிறது. தலைவியும் தோழியின் உள்ளம் உணர்ந்தவள்தான். ஒரு நாள், தலைவன் தலைவியைக்கூட எண்ணுகிறான். அதற்கு, பாங்கியின் உதவி வேண்டும் என்று எண்ணுகிறான். அப்போது ''இந் நாட்டு மக்கள், அண்ணாதான் நாடாளவேண்டும் என எண்ணுகிறார்கள். ஆகவே திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தேர்தலில் வெற்றி பெற வைக்கிறார்கள். அதுபோல் யானும் தலைவியை அடைய, பாங்கியை வெற்றிகொண்டு உதவியைப்பெற வேண்டும்'' என்று தலைவன் எண்ணுகிறான்.

### ஊர் வினுதல்:

செந்தமிழ் நாட்டினைச் சீர்பெற வாளுநற் சிந்தைகொண்டு
வந்தநம் மண்ணுபோல் வஞ்சியீர் இவ்வூர்ப் புதியவன்யான்
சிந்தனை யேதுமே செய்யாதும் மூர்ப்பெயர் செப்பிடுவீர்
வந்தனை செய்குவன் வாட்டம் உமக்கெதும் வந்திடாதே.

(தெ-ரை) அவ்வண்ணம் எண்ணிய தலைவன் பாங்கியைக்கண்டு ''அண்ணாவின் நல்ல எண்ணம்போல் எண்ணமுள்ள நங்கையே, நான் இவ்வூர்க்குப் புதியவன்; உம்மூர் எது என்று கூறினால் உங்களுக்குத் துன்பம் ஏதும் ஏற்படாது'' என்று கூறுகிறான்.

## பெயர் வினாதல்

எண்ணிய எண்ணம் எதையும் ஒளிக்கா தியம்புகின்ற
அண்ணனைப் பெற்ற அருந்தமிழ் நாடுவா ழாயிழையீர்
தண்ணிய லோடும தூர்ப்பெயர் தந்திடீர் என்னினும்நும்
கண்ணியப் பேரா யினுமின் றெனக்காய்க் கழறுவீரே

*(தெ-ரை)* பாங்கி ஏதும் பெசவில்லை. ஆகவே ''அறிஞர் அண்ணா தன் உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் கூறுவார். அவர் ஆளும் நாட்டின் நங்கையே, உமது ஊர்ப்பெயர் சொல்ல தொல்லை இருக்குமென்று கருதினால் உமது பெயரையாவது கூறக் கூடாதா'' என்று கேட்கிறான்.

## கெடுதி வினாதல்

போர்க்குப் புறங்கொடா தாயினும் என்னம்பால் புண்ணினைப்பெற்
றூர்க்குங் களிறென்று பாய்ந்தஞ்சி ஓடிடப் பார்த்ததுண்டோ
யார்க்குந் கெடுதி எதுவுமே எண்ணாத வண்ணாநாட்டின்
ஊர்க்குள் உறையும் உயர்குடி யீரே உரைமின்களோ

*(தெ-ரை)* இதற்கும் விடையில்லாததால், அப்பாங்கியை நோக்கி ''என் வில்லிலிருந்து அம்பு ஒன்றை, ஒரு மதயானை மீது விடுத்தேன். இப்பக்கமாக அது ஓடி வந்தது. அண்ணா ஆளக் கூடிய இந்த ஊரில் உள்ளவர்களுக்கு அவ் யானையால் துன்பம் நேராமல் காப்பாற்ற வேண்டும். அந்த யானை எப்பக்கம் சென்றது என்பதைப் பார்த்தீர்களா? என்று வினா விடுக்கிறான்.

## ஒழிந்தது வினாதல்

எதிர்கட்சி யாரிடம் அண்ணா விடுக்கும் வினாவெதற்கும்
எதிர்செப்ப வொண்ணா ததுவு மேசொல்லா திருப்பதைப்போல்
கதிரோனும் நாணும் கயல்விழ கொண்டொளிர் காரிகையீர்
பதிலேதுஞ் செப்பாத பான்மைக்கெவ் வேதோ பகருவீரே

*(தெ-ரை)* அப்பொழுதும் தோழி பேசாமலேயே இருந்தாள். அதைக்கண்ட தலைவன் ''அண்ணா சில சமயம் எதிர்க்கட்சியில் உள்ளவர்களுக்கு சில வினாக்களை விடுப்பார். அவர்கள் பேசத் தெரியாமல் விழிப்பார்கள். அதுபோல நான் கேட்பதற்கு ஒன்றுமே பதில் கூறாமலிருப்பது ஏன்'' என்று பாங்கியைக் கேட்கிறான்.

## யாரே இவர் மனத் தெண்ணம் யாதெனல்

அணங்கினர் யார்க்கு மயர்வெது மேற்படா வண்ணாநாட்டில்
துணிந்துநும் மூரெது பேரெதென் தோணியால் துன்பமுற்றுப்
பணிந்துசெல் யானையைப் பார்த்திரோ சொல்லீர் பதிலையென்று
வணங்குவார் போல்குறை கூறுவார் யாரிவர் வாட்டமென்னே

(தெ-ரை) அம்புபட்ட யானை வந்ததா என்று தலைவன் கேட்டானே ஒழிய அவன் கையில் அம்போ, வில்லோ இல்லை. மாருக மாலையும் ஆடையும்தான் உள்ளன. எனவே பாங்கி ஐயுறுகிருள் ''அண்ணு ஆளும் இந்த நாட்களில், ஒரு பெண்ணைப் பார்த்து இப்படியெல்லாம் அச்சமின்றி இவன் கேட்பது விந்தையாக இருக்கிறதே. இவனுக்கு வேறு ஏதோ குறையுண்டு போலும் அதனுல்தான் நம்மை வணங்கிக் கேட்பதுபோல கேட்கிருன்'' என்று பாங்கி எண்ணுகிருள்.

### எண்ணந் தெளிதல்

உலகத்து மக்களின் உள்ளத் துணர்வையெல் லாமுணர்ந்து
நலமுற்ற வண்ணுயிங் நாடாளும் தன்மைபோல் நாம்பழகும்
தலமுள்ள யிவ்வண்ணல் தண்ணளி கெ'ண்டேநம் தையலாண்டு
வலமுற்றே நிற்கினுர் வாய்மை யிதுவனறி வ:ட்டமேதே

(தெ-ரை) ''மற்றவர் உள்ளமெல்லாம் அண்ணு உணர்ந்து நாட்டை ஆள்வது போல, இவனும் நம் உள்ளமறிந்து, நாம் தலைவிக்கு உயிர்த்தோழி என்பதை உணர்ந்து இவ்வாறு கேட்கிருன். தலைவியைக் காதலிக்கும் இவன், அவளையடைய நம் உதவியை நாடுகிருன்'' என பாங்கி நினைக்கிருள்.

## (இருவருமுள்வழி அவன்வர வுணர்தல்)

### தலைவன் கையுறை யேந்தி வருதல்

பாவலர் போற்றிடும் பைந்தமிழ் வேந்தராய்ப் பாரையாளக்
காவலர் அண்ணுநம் நாவலர் தம்மொடு போவதேபோல்
பூவலர் காவினில் பூற்கொடி தன்னுடைப் பாஞ்கியோடு
மேவிருள் காதலை மேவிட நாடுநற் காலமீதே.

(தெ-ரை) பாங்கியும் தலைவியும் சேர்ந்து சோலையின் பக்கம் வருகிருர்கள். நாவலர் நெடுஞ்செழியனும் அண்ணுவும் வருவது போலிருக்கிறது அக்காட்சி. தலைவிக்குத் தான் அளிக்க எண்ணிய பரிசுப் பொருளான ஆடை ஒன்றிஞேடு தலைவன் வருகிருன். ''நம் காதலை உணர்த்தித் தலைவியை அடைய இதுதான தக்க சமயம்'' என்றெண்ணி அப்பக்கமாக தலைவன் வருகிருன்.

### தலைவன் அவ்வகை விஞ்தல்

ஆற்றலி ஞேருரு வானநம் மண்ணு வினையெதிர்த்துத்
தோற்றதா லோடிடுந் தூற்றுவோர் போலவென் தோணிபட்டே
ஆற்ற'டா தோடிடு மோாகலை மானதைக் கண்களாக
ஏற்றுளீர் கண்டிரோ இவ்வழி சாற்றுவ் ரென்றனுக்கே

(தெ-ரை) வந்த தலைவன் அவர்களை நோக்கி ''ஒரு மான் மீது நான் அம்பெய்தேன்.. அண்ணுவுக்குத் தோற்று ஓடுபவர்களைப் போல பயந்து அம்மான் இப்பக்கமாகத்தான் ஓடி வந்தது. அந்த மான் போன்ற கண்களையுடைய கன்னியரே, இவ்வழியாக ஓடிய அம்மானைப் பார்த்தீர்களா'' என்று வினவுகிறான். (தோணி=அம்பு)

### எதிர் மொழி கொடுத்தல்

சொல்செயல் யாவுமே சோர்வுரு தன்மைகொள் லாண்ணுநாட்டு
நல்லியல் மேவிய நம்பிநீர் இங்கு நவின்றதைப்போல்
கொல்லியல் யானையோ கொம்புடை மானோ குருதியோடு
செல்லலை யாம்கண்ட தில்லையே செய்வது யாதினியே

(தெ-ரை) அவன் கூறியது கேட்ட பாங்கி ''உம்மைப் பார்த்தால் அண்ணுவைப் போன்று நல்ல பண்புடையவராகக் காணப்படுகிறீர். உம்மிடம் சோர்வு ஏதுவும் தென்படவில்லை. இரத்தம் சொரிகின்ற யானை சென்றதா, மான் ஓடியதா என்று கேட்கிறீர். அப்படியொன்றும் இப்பக்கம் போனதாகத்தெரியவில்லை. அதற்கு நாங்கள் என்ன செய்ய முடியும்'' என்று விடையிறுக்கிறாள்.

### இறைவனை நகுதல்

பொற்புடைக் கன்னியே புள்ளிமான் போன்றவென் பொற்கொடியே
கற்பனை யாற்றலால் காதைகள் சாற்றிடு மண்ணுவைப்போல்
சொற்றிறம் மின்னிட சொல்லுமிப் சொய்க்கலை மான்கதைகள்
விற்பனை யாற்றுமிவ் வீரர்தம் மாற்றலை வெல்லுவோமே,

(தெ-ரை) அதுகேட்ட தலைவன் சற்று அப்பால் செல்கிறான். அப்போது பாங்கி தலைவியை நோக்கி, ''கற்பனைக் கதைகள் புனைவதில் அண்ணுதான் சிறந்தவர் என்றிருந்தேன். இதோ இன்னுமொருவர் நம் முன்னே இருக்கிறார். பொய்மான் கதைகளை நம்மிடம் விற்பனை செய்கிறார். அவரை வெற்றிகாண வேண்டும்'' என்றாள்.

### பாங்கி மதியின் அவரவர் மனக்கருத் துணர்தல்

அன்புடை நெஞ்சினர் இன்புற வாழவே எண்ணுமண்ணு
நன்குற வாண்டிடும் நாடிதில் நம்மிடை வந்தநம்பி
தன்குறை மானன்று தையலாள் பார்ப்பதிக் காவுமன்று
என்குறை என்பதை இங்கிவர் கண்கள் இயம்பினவே

(தெ-ரை) பாங்கி கூறியதற்குத் தலைவி ஏதும் பதில் கூறாது, தலைவன் சென்ற திக்கை நோக்கி நிற்கிறாள். இவற்றையெல்லாம் சிந்தித்த பாங்கி, தலைவனுக்கும் தலைவிக்கும் தொடர்புள்ளது என்பதை ஐயமின்றி தெளிகிறாள். ''அன்புடை நெஞ்சுடைய இருவரும் தங்கள் குறை இன்னது என்று தங்களின் கண்களாலேயே சாற்றி விட்டனர். எல்லாரும் இன்புற்றிருக்க எண்ணும் அண்ணா ஆளும் நாட்டில் இந்த அன்புடை நெஞ்சங்கள் ஒன்றிய பாங்கு இயல்புதானே'' என்று பாங்கி எண்ணுகிறாள்.

## ௧0, பாங்கியிற் கூட்டம்.

### தலைவன் உட்கோள் சாற்றல்

| | | | | |
|---|---|---|---|---|
| மக்களி | ஞவல் | எதுவா | யினுமதை | மாண்புடனே |
| அக்கறை | கொண்டுடன் | ஆற்றி | யகமகி | ழண்ணாவைப்போல் |
| இக்கண | மேயும் | தெண்ணம் | எதனையு | மேற்றுசெய்வேன் |
| அக்குறை | சொலுவி | ரேந்திழை | யீரெனை | யாண்டுகொண்டே |

(தெ-ரை) தலைவியை அடைந்தே தீரவேண்டும் என்ற ஆவல் மிகுதியால், தலைவன் பாங்கிக்குத் தன் உள்ளக் கருத்தைத் தெரிவித்துவிட எண்ணி, ''அறிஞர் அண்ணா அவர்கள், மக்களின் ஆவலைக்கேட்டு அதைச் செய்து முடிக்கும் ஆற்றலுடையவர். நானும், உங்கள் குறை எதுவாயினும் அதை செய்து முடிக்கும் திறமையுடையவன். என் மீது அருள் காட்டுங்கள்'' என்று பாங்கியிடம் தெரிவிக்கிறான்.

### பாங்கி குலமுறை கிளத்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| அருங்குணம் | யாவையும் | ஆளுந்தி | றமையும் | ஆய்வறிவும் |
| ஒருங்குடை | ஏந்தலாம் | ஓர்பேர் | அறிஞரா | மண்ணாவைப்போல் |
| பெருங்குடித் | தோன்றிய | பேறுடை | யண்ணலே | பேதையென்றன் |
| கருங்குழல் | தாழ்குடிக் | கண்டபின் | தையலைக் | காணுவீரே |

(தெ-ரை) ''உங்கள் உள்ளம் இன்னது என்று என்னால் உணர முடிகிறது. நீங்களோ, அண்ணாவைப் போன்று, சிறந்த அறிவும் திறனும் பெற்ற பெருங்குடித் தோன்றல். என் தோழியோ சாதாரண குடும்பத்துப் பெண். அவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்த்து நீங்கள் ஒரு முடிவுக்கு வரவேண்டும்'' என்று தலைவனுக்குத் தோழி கூறுகிறாள்.

### தலைவன் தலைவி தன்னை உயர்த்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| நிலத்துறை | மாந்தரில் | நீண்டவர் | தாழ்ந்தவர் | மாறுபாட்டை |
| நலத்துறை | வேண்டுவோர் | நானில | மீதிலே | நாடுவாரோ |
| கலப்புத் | திருமணத் | தம்பதி | கட்குநம் | மண்ணுநாட்டில் |
| உவப்பில் | பரிசுகள் | தந்ததை | உன்னுவீர் | உண்கணீரே. |

(தெ-ரை) "உலகில் பிறந்தவர்களில், குலத்தால் உயர்வு தாழ்வு கூறுதல் அறிவுடைமை யாகாது. மேலும், கலப்புத் திருமணத் தம்பதிகட்குச் சிறந்த பரிசில்கள் தருவதாக அண்ணு அறிவித்துள்ளார்கள். அதையும் எண்ணிப் பாருங்கள்" என்று பாங்கியிடம் தலைவன் கூறுகிறுன்.

### பாங்கி யறியால் போன்று விறுதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பொங்கும் | தமிழால் | பூனைந்தநம் | மண்ணு | பெருங்கதைபோல் |
| எங்கும் | எழிலாடு | மிவ்வூர் | இளமரக் | காக்களிலே |
| தங்கும் | விளையாடும் | தையல்மார் | தங்களுள் | தாங்கள்கொண்ட |
| தங்கம் | எவளோ | தகுதிதா | னென்னவோ | சாற்றுவீரே. |

(தெ-ரை) அது கேட்ட பாங்கி, தலைவனின் காதலி யார் என்பனேத அறியாதவள்போல, "அண்ணு எழுதிய நாவல்களுள் எல்லா இடங்களிலும் அழகு பொங்கும். அதுபோன்ற பூஞ் சோலைகள் எங்கும் அழகு நங்கையர் பலர் விளையாடிப் பொழுது போக்குவர் தங்கள் உள்ளத்தைக் கொள்ளைகொண்ட தையலின் அடையாளம் கூறமுடியுமா?" என்று தலைவனைக் கேட்கிறுள்.

### இறையோன் இறைவியின் தன்மை இயம்பல்:

| | | | | |
|---|---|---|---|---|
| மிடுக்கு | நடையாள் | மிடைந்த | தொடையாள் | மிலைமுலையாள் |
| துடுக்கு | மெ ழியாள் | துடித்த | உதடாள் | துடியிடையாள் |
| சொடுக்கு | விழியாள் | சுடர்த்த | நுதலாள் | சுருங்கச்சொல்லின் |
| அடுக்கு | மொழியால் | அழகுற்ற | அண்ணுவின் | செந்தமிழே |

(தெ-ரை) உடனே தலைவன் தலைவியை வருணிக்க ஆரம்பித்து விடுகிறுன். தலைவியின் நடை மிடுக்கானதாம்; நேருங்கிய தொடைகளையுடையவளாம்; ஒன்றோடொன்று மோதும் பருத்த மார்பகங்களையும் கொண்டவளாம்; அவள் துடுக்குத்தனமாகப் பேசுவாளாம்; இதழ்கள் துடித்துக் கொண்டிருக்குமாம்; உடுக்கையைப்போன்ற இடுப்புடையவளாம்; பார்வையாலேயே சொடுக்கி விடக்கூடியவளாம். ஒளி பொருந்திய நெற்றியுடைய வளாம். இவற்றையெல்லாம் கூறிய தலைவன் "சுருக்கமாகச் சொன்னுல் அண்ணு பேசும் செந்தமிழின் தீஞ்சுவையைப் போன்றவள்" என்று கூறுகிறுன்.

### பாங்கி தலைவிய தருமை சாற்றல்:

| | | | | |
|---|---|---|---|---|
| உதயனைத் | தன்சின்ன | மாயுற்ற | வண்ணுவுன் | கற்பனைக்கும் |
| உதயமா | காதவோர் | பேறழில் | உற்றவள் | கண்முகத்தே |
| உதயனு | திங்களும் | ஒன்றியே | உள்ளனர் | உம்மையுற்ற |
| மதனையம் | வென்றவர் | மங்கையை | வெல்லுவ | தெங்ஙனமே |

(தெ-ரை) தலைவனது காமவேட்கையை உணர்ந்த பாங்கி, தலைவியை யடைவது அத்துணை யெளிமையான செயல் இல்லை என்பதை உணர்த்த எண்ணி, ''அவள் மிகவும் பேரெழில் கொண்டவள்; உதயசூரியனைத் தன் சின்னமாகக் கொண்ட அண்ணாவின் கற்பனைக்குங்கூட எட்டாத பேரெழில் கொண்டவள்; சந்திரனிடத்தில் சூரியனைக் கற்பனை செய்ய முடியுமா? அவளது முகமாகிய சந்திரனில், கண்களாகிய இரண்டு சூரியர்கள் உள்ளனரே. உம்மை உற்ற காமநோயையே உம்மால் வெல்ல முடியவில்லை. பிறகு எவ்வண்ணம் அப்பேரெழிலாளை வெல்லப் போகிறீரோ?'' என்கிறாள்.

### தலைவன் இன்றியமையாமை கூறல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பாங்கியே | வும்முரை | பான்மைதா | ருயினும் | பாரையண்ணு |
| தாங்கியே | நிற்கின்ற | தன்மைபோல் | தையலு | மென்னுயிரைத் |
| தாங்கியே | நிற்கின்றாள் | தண்ணளி | செய்றத் | தவருவீரேல் |
| வாங்குவீ | ரென்னுயிர் | வாகையை | சூடிபின் | வைதிடீரே. |

(தெ-ரை) ''பாங்கியே, நீ சொல்வது உண்மையே. இவ்வுலக மக்களின் எண்ணங்களையெல்லாம் அண்ணா தாங்கி நிற்பதுபோல என் உயிரை உன் தலைவிதான் தாங்கியுள்ளாள். எனக்கு நீ அருள் கூர்ந்து உதவாவிட்டால் என் உயிர்தான் போகும். பிறகு கவலைப்பட்டுப் பயனில்லை'' என்று கூறி, தன்னுயிர் தலைவி உயிரென்றும், தன்னுயிர் போனால் தலைவியின் உயிரும் போய்விடும் என்றும், உணர்த்தி, தனக்கும் தலைவிக்கும் உள்ள தொடர்பை குறிப்பால் அறிவுறுத்துகிறான்.

### பாங்கி நின்குறை நீயே சென்றுரையென்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தம்பியர் | யாரும் | தயக்கோர் | குறைவரின் | தாமேசென்று |
| நம்பியர் | வேந்தனு | மண்ணு | விடமே | நவில்வதைப்போல் |
| நம்பியே | நீருமே | நங்கைமுன் | னல்போய் | நவின்றுமது |
| கும்பிடைப் | போடுவீர் | கோதையை | தேடுவீர் | கூடுவீரே |

(தெ-ரை) ''தம்பிமாருள், குறைகொண்ட எவரேனும் ஒருவர் இருப்பின், அவரே அக்குறையை அண்ணாவிடம் நேரில் தான் சொல்லி ஆற்றிக் கொள்வார். அதுபோல, நீரும் உம் குறையைத் தலைவியிடம் நேரிலேயே சொல்லி தீர்த்துக்கொள்வீர்'' என்று கூறுகிறாள் பாங்கி.

### பாங்கியைத் தலைவன் பழித்தல் :

சிலவேளை நம்மண்ணா தன்சிறந்தை நேராகச் செப்பிடாமல்
உலாவந்து சுற்றி உரைத்திடுஞ் சூழலை நீயுணர்வாய்
உலோபி உணையின் றிரந்து பின் நின்றயா னூமையல்லேன்
காலப மயிலே கன்முகில் கண்டாற் களித்திடுமே

(தெ--ரை) பாங்கியின் சொற்கேட்டு, சற்று சினமடைகிறான் தலைவன். ''சிலவேளைகளில், அண்ணா அவர்கள், தான் சொல்லக் கருதிய கருத்துக்களை நேரிடையாகக் கூறாமல் சுற்றி வளைத்துக் கூறுவதுண்டு. அந்தச் சூழ்நிலை இப்போழ்து எனக்கும். நான் ஒரு ஊமையல்லன். நான் சொல்லவேண்டும் என்பதுகூட இல்லை அண்ணாவின் பார்வையே கூட சில சமயம் அவர் கருத்தை உணர்த்தும்; தம்பியரும் உணர்ந்து கொள்வர். நான் மேகம், உன் தலைவி மயில், மேகத்தைக்கண்டு தானாகவே மயில் தோகை விரித்தாடுவதை நீயறியாயா''? என்கிறான்.

### பாங்கி பேதமை யூட்டல் :

செந்தமிழ் நாடுவாழ் மாணவர் சிந்தையை நன்குணர்ந்து
இந்தியை ஓட்டிய ஏந்தலா மண்ணாவின் ஆற்றலெல்லாம்
வந்திட வாள்விழி யாட்கு வயதினும் வாய்க்கவில்லை
நுந்தம துள்ளநோய் நீக்கிடு நுட்பமு மில்லவட்கே,

(தெ--ரை) ''எல்லாரும் அண்ணாவாகிவிட முடியுமா? மாணவர்களின் உள்ளம் உணர்ந்து, இந்தி எனும் பேயை இந்த நாட்டை விட்டே ஓட்டிய பெருமை அண்ணாவுக்குத்தான் உண்டு. அத்தகைய ஆற்றலைப்பெற அனுபவமும் வேண்டும் உமக்கு வந்துள்ள நோயை ஓட்டுமளவுக்கு என் தலைவி ஆற்றலற்ற இளையவள்'' என்று பாங்கி தலைவனுக்கு சுட்டிக்காட்டுகிறாள்.

### காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல் :

திரைசூ ழுலகத் தற்வெலா மொன்றாய்த் திரண்டுருண்ட
உருவா யமைந்தநம் மண்ணா உறைமேந் நாட்டிலுற்ற
கருவும் உறுமே கலைரயில் லறிவைக் கனிமொழியே
மருவுமென் மங்கையின் மாண்பினைத் தாழ்த்திய மாயமென்னே.

(தெ-ரை) ''அறிஞர் அண்ணா, உலகத்து அறிவையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஓர் உருவமானவர். அவருடைய ஆளுகை இன்று நடக்கிறது. தாய் வயிற்றிலே உள்ள கருவும்கூட அறிவு பெறக்கூடிய அளவுக்கு அண்ணா நம் நாட்டில் அறிவை வளர்த்துள்ளார். என் மங்கையின் அறிவைக் குறைத்து மதித்தது என்ன காரணமோ'' எனத் தலைவன் பதிலளக்கிறான்.

### பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல் :

பல்லா றறிவையும் பற்றிய வண்ணுவாழ் பாரிதனில்
எல்லா வறிவுமே என்றன் தலைவிக் கிருப்பதாகப்
பொல்லா தலைவரே புல்லினீர் போலப் புகழ்ந்துரைத்தீர்
நல்லா ளவளைநீர் நானின்றி முன்போல நாடுவீரே.

(தெ--ரை) தலைவியும் தலைவனும், முன்னமே ஒருவரை ஒருவர் கண்டு இன்புற்ற செயலைத் தோழி அறிவாள். இருந்தும் அதைக் குறிப்பால் தலைவனுக்கு உணர்த்த எண்ணி, "அண்ணுவைப் போன்ற அறிவு என் தலைவிக்கு இருப்பதாக நீர் கூறுவதானுல், அவளோடு கூடிப் பழகியிருக்க வேண்டும். அப்படிப்பழகிய நீரே, முன்போல் அவளைப் பெறலாமே. அதற்கு என் உதவி உமக் கெதற்கு'' என இயம்புகிருள்.

### தன்னிலை தலைவன் சாற்றல் :

தன்னைப் பகைத்தோர் தமக்குமே தண்ணளி செய்யுமண்ணு
தன்னை வளர்த்த தமிழகந் தன்னில் தவழுநங்காய்
என்னைப் பகைக்க இதுவோ சமயம் எழிலரசி
என்னைத் தழுவா தொழியின் எனதுயிர் எவ்விடமே.

(தெ-ரை) ''பாங்கி, தன்னைப் பகைத்தவனுக்கும், நன்மை செய்யும் அண்ணுவை இத் தமிகம் வளர்த்துள்ளது. நீயும் இத் தமிழகத்தில் தான் வாழ்கிருய்—என்னைப் பழிவாங்க இதுவா தருணம்? தலைவி என்னைத் தழுவ நீ உதவி செய்யாவிட்டால் என்னுயிர் எங்கு செல்லும் என்று எனக்கே தெரியாது'' என்கிருன்.

### பாங்கி உலகிய லுரைத்தல் :

திருமணச் சட்டத்தைச் சீர்திருத் தம்செய்த வண்ணுநாட்டில்
கருமணற் கூந்தலாள் என்னுடைக் கன்னியும் காலைநீரும்
ஒருமனப் பட்டினிர் ஒன்றினிர் என்ருல்நம் சுற்றமுன்னர்
திருமணம் செய்துபின் செம்மையாய் வாழ்வீர் திருவினேடே

(தெ--ரை) ''தலைவனே, அறிஞர் அண்ணு அவர்கள் திருமண முறையில் சீர்திருத்தம் செய்து அதற்குச் சட்டமும் வகுத்துள் ளார். தலைவியை நம் சுற்றத்தினர் முன் திருமணம் செய்து கொள்வதில் என்ன இடையூறு எழும்? எனவே உலகியல் முறைப்படி மணந்து வாழ்வீர்'' என்று கூறுகிருள் பாங்கி.

## தலைமகன் மறுத்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| உன்னுடை | எண்ணம்போல் | ஒரிரு | திங்கட்குள் | உண்கணாளே |
| என்னுடை | வீட்டவ | ளாக்குவேன் | ஏந்திழை | இஃதுறுதி |
| சொன்னதைச் | செய்கையில் | காட்டிடச் | சோர்ந்திடா | வண்ணாவைப்போல் |
| என்னையு | மெண்ணியென் | ஏகுயிர் | காத்திட | எண்ணுவாயே, |

(தெ-ரை) ''சொன்னவாறு நடந்து காட்டும் பண்புடைய அண்ணாவைப் போன்றவன் யானும். ஒன்று அல்லது இரண்டு மாதங்களுக்குள் தலைவியைத் திருமணம் செய்து கொள்வது உறுதி. அதற்குள் என்னுயிரைக் காப்பது உன் கடமையாகும்'' எனத்தலைவன் பதிலுரைக்கிறான்.

## பாங்கி யஞ்சி யச்சுறுத்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| யாரு | மறியுமா | றண்ணாயிங் | நாட்டினை | யாளுநாளில் |
| ஆரு | மறியாம | லாயிழை | யாளைநீ | ராளவந்தீர் |
| மேரு | மறியத | மீளியா | ரெம்மவர் | மேவுமுன்னே |
| ஊரு | மறியாமல் | பேரு | முணராம | லோடுவீரே |

(தெ-ரை) அண்ணாவைத் தனக்கு உவமையாகக்கூறிய தலைவனை நோக்கி, பாங்கி ''அறிஞர் அண்ணா அவர்கள் இந்த நாட்டை எல்லாரும் அறிந்து போற்றுமாறு ஆளுகிறார். நீரோ, யாருக்கும் தெரியாமல் தலைவியை ஆள வந்து நிற்கிறீர். எம்மைச் சார்ந்தவர்கள் இதை அறிவதற்கு முன்னமேயே இவ்விடத்தை விட்டு ஓடிவிடுங்கள். அவர்கள் மேருமலையொத்த வலிமை யுடையவர்கள்'' என்று தலைவனை அச்சுறுத்துகிறாள்.

## தலைவன் கையுறை புகழ்தல்

| | | | | |
|---|---|---|---|---|
| குறுகிய | நோக்கமில் | கொள்கையர் | யாவரும் | சேர்ந்துகொண்ட |
| அணுபதா | மாண்டு | பிறந்த | விழாவிலு | மண்ணாகாணப் |
| பெறுதலு | மில்லப் | பெருமைகொள் | என்தழைப் | பேற்றையெண்ணி |
| நறுநுதல் | நங்கையீர் | நான்கொண்டு | வந்ததை | நாடுவீரே. |

(தெ-ரை) அதுகேட்ட தலைவன் தன் கையுறையின் சிறப்புக் கூறி அதைத் தலைவியிடம் சேர்ப்பிக்குமாறு வேண்டுகிறான். அண்ணாவுக்கு 59 ஆண்டுகள் நிறைந்து 60-வது பிறந்த நாள் விழா நடந்தபோது பலரும் பல்வேறு உயர்ந்த பொருள்களைக் காணிக்கை யாக்கினார்கள். அக் காணிக்கைகளை விட தான் கொண்டுவந்த தழையாடை இயற்கையும் செயற்கையும் மிளிர்ந்து பெருமை மிக்கது என்பதைத் தலைவன் பாங்கிக்கு உணர்த்துகிறான்.

### பாங்கி கையுறை மறுத்தல் :

இன்மையே இல்லாமல் என்றுமே செய்திடு மண்ணுதிட்டம்
மென்மையே தந்தாலும் மேன்மைதா னென்ருலும் மேவிடாத
நன்மையே வந்தாலும் நாடார் சிலரிங்கே நாட்டிலுள்ளார்
புன்மையே கண்டவர் போற்றிபார் நும்தழை பொற்கொடிக்கே

(தெ-ரை) "அறிஞர் அண்ணு அவர்கள் மிகச் சிறந்த திட்டத்தைத் தீட்டித் தந்தாலும் ஏதாவது குறைகூறி அதை நாடாதவர்கள் சிலர் இருக்கிறுர்கள். (காமராஜ் நாடார் போன்றவர்கள்) அதுபோல நீர் தருவது சிறந்த பரிசில் என்ருலும், அது பற்றி ஐயமுற்றுக் குறை கூறுவோர் எம்மக்ததது உள்ளார்கள்" என்று கூறி தலைவனின் கையுறையைப் பெற்றுக்கொள்ள பாங்கி மறுக்கிருள்.

### ஆற்ரு நெஞ்சினே டவன் புலத்தல்:

அன்பும் தயையும் அருளும் மிகக்கொண்ட வண்ணுநாட்டும்
வன்பும் குறையும் வசையும் மிகக்கொண்ட வஞ்சியீர்நீர்
இன்பம் தருமெம் இணையில் தழையினை ஏற்றிடீரேல்
முன்பெம் முயிரை முடித்திட லாவது முந்துவீரே.

(தெ-ரை) பாங்கி, தனக்கு உதவ முன்வரவில்லை என்பதறிந்த தலைவன், மிகவும் வருந்துகிருன். "கருணையுள்ளத்தோடு, அண்ணு இந்த நாட்டை யாளும்போது, கொடுமை மிகுந்த உள்ளம் உங்களுக்கு எவ்வாறு உண்டானது? என் கையுறை ஏற்காவிட்டாலும் பரவாயில்லை. என் உயிரையாவது ஏற்றுக்கொள்ள முந்துங்கள்" எனத் தலைவன் புலம்புகிருன்.

### பாங்கி ஆற்றுவித்தகற்றல்:

முத்தமிழ்ப் பேற்றினை நித்தமும் போற்றிடு மண்ணுநாட்டில்
எத்துணைச் சீருடைத் தென்னினு மேற்றிடா வேந்திழைக்கும்
பித்தினைச் சேர்த்திராப் பேச்சில் இறைஞ்சுவேன் பேதுருதீர்
சித்தியே நாளைநும் கையுறை சேயிழைக் கையிலேயே.

(தெ-ரை) "அண்ணுவின் நாட்டில் முத்தமிழ்ச் செல்வம் எங்கும் நிறைந்திருக்கும் போழ்து, தலைவி வேறு ஒரு செல்வத்தையும் விரும்புவாளோ? இருப்பினும், உம்முடையகாதல் பைத்தியத்தை இன்று இராப்பொழுது, எப்படியாவது தலைவியிடம் கூறி, உபக்காக அவளை இறைஞ்சி கேட்டுக்கொள்வேன். அவள் கையில் நாளை உமது கையுறை இருக்க உறுதி கூறுகிறேன். அஞ்சாமல் சென்று நாளை வாரும்" என்று பாங்கி தலைவனைத் தேற்றுகிருள்

# இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன்

### மடலை பொருளென மதித்தல்:

இடரேது மில்லாமல் எல்லார்க்கு மின்பமே ஈட்டுவிக்கும்
அடலேறு போன்றநம் அண்ணா இனிதாக வாளும்போது
மடமாது நம்முடை மங்கையைக் கூட்ட மறுப்பளாகில்
மடலேறு மோர்பேர் மருந்தன்றி வேறுண்டோ மாற்றுநெஞ்சே

(தெ-ரை) இவ்வண்ணம் மூன்று நாட்கள் கழிந்தன. நான்காம் நாள் காலையும் தலைவன் அவ்விடம் வருகிறான். பாங்கி தன்குறையைத் தீராளென நினைக்கும் தலைவன் மடலேறுதல் பற்றி சிந்திக்கிறான். பழங்கால முறைப்படி, காதலியை அடைய, பனைமடல் முதலியன கொண்டு தேர்போல் வாதான்று செய்து, தலைவியின் உருவம் எழுதிய திரைச் சீலையுடன் ஊரின் தெருவழியே சென்று தன் காதலை ஊராருக்கு அறிவித்துத் தலைவியை அடையதன்னைத் தானே வருத்திக்கொள்ளும் ஒரு வழிதான் மடலேறுதல் என்பது. அறிஞர் அண்ணா யாருக்கும் இடரின்றி ஆளுகையில், பாங்கி தலைவியையடைய வழி செய்யாவிடில் மடலேறுதற்கும் தலைவன் துணிகிறான்.

### பாங்கிக்குலகின் மேல் வைந்துரைத்தல் :

பழந்தமிழ்ப் பண்பாட்டைப் பாரெங்கும் சாற்றியயிப் பாரையாண்டே
உழந்திடும் மக்களுக் குற்சாக மூட்டிவாழ் அண்ணாநாட்டில்
சுழன்றிடும் காளையர் சோர்வுற யாருமே சூழ்ச்சிசெய்யின்
அழன்றிடா தூர்வர் கிழியொடு மாமட லாரணங்கே.

(தெ-ரை) அம் மடல் ஏறும் வழக்கம் ஒன்று உள்ளது என்பதைப் பாங்கிக்கு உணர்த்த எண்ணி, "அறிஞர் அண்ணா அவர்கள் பழைய தமிழ்ப் பண்பாட்டையெல்லாம் பாரெங்கும் சாற்றுகிறார்கள். அவற்றுள் ஒன்று மடலேறுதலும் கூட. காளை ஒருவன் கன்னியொருத்தியை விரும்பி அடைய முடியவில்லையானால் அவனுக்கு மடலேறுதல் என்ற ஒரு மரபும் உண்டு" என்று தலைவன் கூறுகிறான்.

### அம்மட லேற்றினைத் தலைவன் தன்மேல் வைத்துச்சாற்றல் :

ஆர்குறை கூறினும் ஒர்ந்ததை மாற்றிடு மண்ணாநாட்டில்
நேர்முறை வேண்டியும் கூர்மதி கொண்டிடீர் தீள்விழியீர்
தீருறை ஊரிலே நாளையே ஊருவேன் நீள்மடல்மேல்
யார்தறை என்பதை யாவரு மெண்ணுவார் யாதினியே

(தெ-ரை) பொதுவாகக் கூறிய தலைவன், தான் கருதிய தலைவியை அடைய முடியாவிட்டால், தானும் மடலேறி தன் காதலை ஊராருக்கு உணர்த்தப் போவதாகப் பாங்கியிடம் உரைக்கிறான்.

## பாங்கி தலைமகள் அவயத்தருமை சாற்றல் :

ஒல்லாத மாவூரு முன்னே கிழியொன்றி லொண்டொடியின்
இல்லாத வோரிடை சொல்லாத பேருரை ஏற்றுவீரோ
பொல்லாத வல்லோரும் போற்றுமா றண்ணாயின் ருளும்போது
வெல்லாத சொல்சொன்னீர் வேண்டுவீ ராமினும் வேல்விழியே.

(தெ-ரை) ''மடலூர வேண்டுமென்றால், தலைவியின் உறுப்புக்களை உணர்ந்து உருவத்தைத் திரைச்சீலையில் எழுதியாக வேண்டும். தலைவிக்கோ இடை உண்டோ இல்லையோ என்று அறிய முடியாத சிறப்புடையது. அவள் சொல்லினிமையை எவ்வண்ணம் எழுதிக்காட்ட முடியும். எவரையும் வெல்லும் அண்ணாவின் ஆட்சி நடக்கும்போது, வெற்றி தராத சொல்லை நீர் எவ்வாறு சொல்லத் துணிந்தீர்'' என்று பாங்கி, தலைவியின் அவயவச் சிறப்பை உணர்த்துகிறாள்.

## தலைவன் தன்னைத் தானே புகழ்தல்:

எல்லாக் கலையிலும் வல்லவ ணுயுள்ள வண்ணாநாட்டில்
கல்லாக் கலையெது கன்னியே சொல்லுவாய் காரிகையின்
இல்லா இடையையும் சொல்லா உரையையும் ஓர்ந்தவன்யான்
ஒல்லா ததுவென ஒன்றுமே யில்லெனக் கெண்ணுவாயே

(தெ-ரை) ''ஓவியம் தீட்டுவதுட்பட எல்லா கலையிலும் வல்லவர் அறிஞர் அண்ணா. அவர் தம்பியாகிய யானும் கலையெல்லாம் கற்றவன். அதுவுமன்றி தலைவியின் இடையையும், சொல்லையும் உணர்ந்தறிந்தவன் யான். ஆகவே வெற்றி எனக்குக் கிட்டும்'' என்று தலைவன் பதிலுரைக்கிறான்.

## பாங்கி அருளியல் கிளத்தல்

மாநிலம் வாழ்த்திடும் மக்கள் தமக்காக மட்டுமன்றி
யாநிலம் வாழ்பவை யாவைக்கு மின்பமே யெண்ணுமண்ணா
நானில மாள்கையில் மாமட லேறிட நாடுவீரேல்
வானில மாய்க்கொண்டு வாழ்ந்திடும் புட்களை வாட்டுவீரே

(தெ-ரை) ''மனிதர்க்கு மட்டுமன்றி உயிரினம் எதற்குமே ஊறு விளைவிக்காத பெருங்குணம் படைத்த அண்ணாவின் வழிசெல்லும் நீர், பனைமடலைப் பறிப்பீரேயானால், அங்கு வாழும் பறவைகட்கு ஊறு விளைவித்தவராவீர். ஆகவே உம்மால் அச்செயல் செய்ய முடியாது'' என்கிறாள் பாங்கி.

## கொண்டுநிலை கூறல் :

தெருளா மனிதரும் திட்பம் பெறவே திருத்தியாளும்
அருளே உருவான அண்ணா வனையவென் னாயிழையாள்
அருளா ளுமக்கெனின் அன்பரே பெண்ணைநீர் ஆய்ந்துசெய்யும்
உருளா மடலினை ஊருவீர் பின்பிந்த ஊர்நடுவே

(தெ-ரை) அது கேட்ட தலைவன் செய்வதிறியாது திகைத்து வருந்துகிறான். அவன் நிலைகண்ட பாங்கி ''அன்பரே, அண்ணாவிற்கு அருள்நிறைந்த உள்ளம் இருப்பது போல் தலைவியும் அருளே வடிவானவள். அவள் உம்மிடம் கருணை காட்டாமற் போனால் பனையால் செய்த மடலூர்வது பற்றி பிறகு எண்ணலாம்'' என்கிறாள். (பெண் = பனை)

## தலைவி இளமைத்தனமை பாங்கி தலைவற் குணர்த்தல் :

அரும்பிய மீசைகொள் ஆணழ காவுன்றன் ஆர்வத்தாலே
பெரும்பய னாற்றிடும் பேரறி வாளனா மண்ணாநாட்டில்
அரும்பினைப் பூவாய்க் குரும்பையைத் தேங்காயாய் ஆய்ந்துகொண்டு
விரும்பினை யாயினும் வேல்விழி யாளிடம் வேட்கையேதே.

(தெ-ரை) பாங்கி தலைவியின் இளமைத் தன்மையை உணர்த்த எண்ணி ''நீரோ மீசை யரும்பிய ஆணழகர். குறைந்த நாளிலேயே நிறைந்த பயனியற்றும் அண்ணா இன்று ஆள்கிறார். அதனால்தானோ என்னவோ, நீர் மொட்டை மலராகவும், குரும்மையைத் தேங்காயாகவும் எண்ணிவிட்டீர் போலும்'' எனக் கூறி, தலைவி இன்னும் பக்குவம் பெறாத தன்மையள் எனக் கூறுகிறாள்.

## தலைவன் தலைவி வருத்திய வண்ணமுரைத்தல் :

கூற்றாரும் கூர்விழி கொண்டவள் என்னையும் கொல்லுதற்கு
மாற்றாரைச் சொல்லம்பால் மாண்டிடச் செய்யும்நம் மண்ணாகண்ணோ
ஏற்றாரைக் கண்ணம்பால் ஈர்த்துவீழ்த் தாற்றலை ஏற்றுக்கொண்டாள்
ஆற்றாரை வெல்லுதல் ஆயிழாய் நந்தமிழ்ப் பண்பாடன்றே.

(தெ-ரை) ''பாங்கி, அண்ணா அவர்கள் தன் சொல்லம்பால், எதிர்தரப்பாரை வீழ்த்துதல் போல தலைவி தன் கண்ணம்பால் என்னை வீழ்த்தினாள். இவ்வணம் வீழ்த்தும் ஆற்றலைத் தலைவி அண்ணாவிடமோ பயின்றாள்? எதிர்ப்பைத் தாங்க வலிமையில்லாதவர்களை எதிர்த்து வெற்றிபெறுதல் தமிழ்ப் பண்பாடன்று'' எனக்கூறி தலைவன், தலைவியால், தான் ஈர்க்கப் பெற்றதைக் கூறுகிறான்.

### பாங்கி தலைமகள் செவ்வியருமை செப்பல் :

நீயனுறு செவ்வியை நம்பிரா னண்ணுபால் நாடிச்சென் று
வயமுறு தம்பியர் வாடுவர் அவ்வணம் வார்குழற் கம்
பயனுறச் செப்பலா மென்றுலோ பாவையாள் பந்துமாடாள்
புயலுறு சோலையும் போந்திபாள் பூவெதுஞ் சூடிடாளே.

(தெ-ரை) ''தம்பியர், தம் வாட்டத்தைக் கூற அண்ணுவுக்குரிய காலம் பார்த்துக் கூறுவர். அவ்வணம் யானும் தலைவிக்குரிய காலம் பார்த்து, யாரும் அறியாமல் கூற வேண்டும். அவளோ, முன்போல, பந்தாடவும் வருவதில்லை. பூஞ்சோலைப் பக்கமும் வருவதில்லை. நான் எவ்வண்ணம் கூறமுடியும்'' என்று கூறுகிறுள்.

### தலைவன் செவ்வி யெளிமை செப்பல்

நாநலங் கொண்டு நயம்பட அண்ணுயிந் நாட்டையாள
நான்'ல மக்களுள் வாடுவா ருண்டுகொல் நங்கைநீயிக்
காநிலத் தோர்காளை கண்டதாய்க் கூறிடின் கன்னியாள்தன்
கானிலங் தோய்ந்திடா துன்னையுங் கட்டிக் கொண்டாடுவாளே.

(தெ-ரை) ''பேச்சுக் கலையைச் சிறப்புறக் கற்ற அண்ணு நாட்டை திறம்பட ஆளுகிறுர். அதுபோல, பேசும் வகையறிந்து கூறின், தலைவி உணர்வாள். அதற்காக நீ ஒன்றும் அதிக முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டாம். 'சோலையில் காளை போன்ற ஒருவனைக் கண்டேன்' என்றுலே போதும். அவள் உன்னையும் தழுவிக்கொண்டு மகிழ்வாள்'' என்று பாங்கிக்கு ஆலோசனை கூறுகிறுன்.

### என்னை மறைத்தபின் எளிதென நகுதல் :

தமிழும் தமிழ்நாடும் தாம்செய் தவத்தால் ஒருங்குறினும்
அமிழ்தே எனத்தகும் அண்ணு அரசின்றேல் ஆய்ந்துபாரீர்
கமழுங் குழலாளும் காளையீர் நீரும் கருதிருலும்
நமதின் னுதவியை நாடிடீர் ஆயின் நடப்பதென்னே

(தெ-ரை) தலைவன், தலைவி இருவரும் முன்பே நெருக்கமுற்றதைக் குறிப்பாலுணர்த்திய தலைவனது பேச்சு, பாங்கிக்கு அதிக வேலை இல்லாத நிலையையும், பாங்கி உதவி அதிகம் தேவையில்லாத நிலையையும் உணர்த்தியதால் பாங்கிக்குச் சற்றும் சினம் தோன்றுகிறது ஆகவே அவள் ''தமிழ் நாட்டில் தமிழ் மொழி பரவியுள்ளது. தமிழ் மொழி நாட்டுக்குரிய இடத்தைப்பெறச் செய்தது அண்ணுதான். அவரில்லாவிட்டால் தமிழின் கதியை எண்ணிப்பாரும். அதுபோல நானில்லாமல் தலைவி உமக்குக் கிட்டுவது எளிதன்று'' என உணர்த்துகிறுள்; எள்ளிநகையாடுவதுபோல புன்னகை செய்கிறுள்.

### அந்நகை பொருதவன் புலம்பல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தஞ்சம் | அடைவாரைத் | தன்கண்போற் | காப்பாற்று | மண்ணுநாட்டில் |
| வஞ்சியின் | வேறுபட்டு | வாடிப்பின் | ருடியே | வந்தவென்னை |
| அஞ்சிடா | யென்றே | வடய | மளிக்காதுன் | புன்னகையால் |
| செஞ்சரப் | புண்ணிலே | வெஞ்சரம் | சேர்த்ததேன் | வேல்விழியே. |

(தெ-ரை) அண்ணு, தன்னிடம் தஞ்சமடைவாரைக் காப்பாற்றத் தவற மாட்டார். ஆனால் நீயோ, தலைவியின் விழிபட்டு வாடி நிற்கும் எனக்கு அபயம் தராமல், புண்ணில் வேல் பாய்ச்சுவது போலப் பேசுகிறாய்'' என்று தலைவன் தனது ஆற்றாமையை உணர்த்துகிறான்.

### பாங்கி தலைவனைத் தேற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தேடியே | வந்தவர் | தெவ்வரே | யாயினும் | தேர்தல்கூறும் |
| நாடிதை | யாள்பவர் | நம்மண்ணு | என்பதால் | நானுமுங்கள் |
| வாடிய | தன்மையை | வஞ்சியாள் | தன்னிடம் | வாயப்பக்கூறி |
| கூடிய | சீக்கிரம் | நும்குறை | போக்குவேன் | கோபமேனே. |

(தெ-ரை) ''அன்பரே, அண்ணுவைத் தேடி பகைவரே வந்தாலும், அவருக்கு அண்ணு அருள் புரிவார். அப்படியிருக்க, நான் உமக்கு உதவி செய்யாமல் இருப்பது நல்லதன்று. ஆகவே உமது எண்ணத்தைத் தலைவியிடம் கூறி விரைவில் உம் குறையை நீக்க முற்படுவேன்'' என்று பாங்கி தலைவனைத் தேற்றுகிறாள்.

### பாங்கி கையுறை யேற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தங்குறை | நீங்கிட | நந்தமிழ் | மக்கள்தம் | மாட்சிதன்னை |
| நங்குணக் | குன்றின | ரண்ணுபால் | சேர்ப்பதை | நாடிவென்றார் |
| நுங்குறை | தீர்த்திட | நுங்கை | யுறைதன்னை | நுண்ணிடையாள் |
| தங்கையிற் | சேர்த்திடத் | தையல் | எனைவென்றீர் | தக்கதொன்றே. |

(தெ-ரை) அவனுக்கு மேலும் தெளிவு உண்டாக்கக் கருதிய பாங்கி கையுறையை ஏற்கிறாள். அப்போது ''மக்கள் தங்கள் குறைகளை நீக்கிக்கொள்ள தங்களை ஆளும் பொறுப்பை அண்ணுவிடம் தந்தமைபோல, உம்முடைய குறையைப் போக்க, உம் கையுறையைத் தலைவியிடம் தருவேன், வெற்றி உமக்குதான்'' என்று பாங்கி கூறுகிறாள்.

### கிழவோனுற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தமிழ்நா | டெனும்பெயர் | இந்நாட் | டரசியல் | சட்டந்தன்னில் |
| கமழவே | பெற்றதைக் | கண்டுநம் | மண்ணு | களித்ததேபோல் |
| அமிழ்தனை | யாயுன்றன் | அன்புடை | சொற்கேட் | டகமகிழ்ந்தேன் |
| இமிழ்கடல் | வேலியில் | யாரினி | யென்னை | யெதிர்ப்பவரே. |

(தெ-ரை) அதுகேட்ட தலைவன் தன் துயரம் நீங்கித்தேறுகிறான். ''அமிழ்தம் போன்ற பாங்கியே, அரசியல் சட்டத்தில், தமிழ் நாடு எனும் பெயர் பொறிக்கப்பட்டபோது அண்ணா மகிழ்ந்த தைப் போன்று, நான் உன் சொற்கேட்டு மகிழ்கிறேன்'' என்று தான் தெளிந்ததைப் புலப்படுத்துகிறான்.

## இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன் குறையுணர்த்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| நாளும் | வளரும் | நமதண்ணா | நாடுகாண் | நன்மையேபோல் |
| நாளும் | வளரும் | நகிலேந்து | நங்கையே | நம்புனத்தெந் |
| நாளும் | வருவார் | நலிவெதும் | நம்பால் | நவின்றிடாமல் |
| நாளும் | வருமிந்த | நாடகம் | நல்லதோ | நம்பியார்க்கே, |

(தெ-ரை) தலைவன் பற்றிய செய்தியைத் தலைவிக்குப் பாங்கி நாகரீகமாக உணர்த்த எண்ணி ''தலைவியே, நீ தினமும் வளர்ந்து வருகிறாய். அண்ணா ஆளுவதால் தினமும் நாட்டுக்கு நன்மை வளருவதுபோலே, உன் மார்பகங்களும் வளர்ந்து நல்லெழில் பெற்றுள்ளன. இந்நிலையில் நாம் சென்று விளையாடும் சோலைக் கருகே, யாரோ ஒருவர் தினமும் வந்து போகிறார். ஆனால் நம் மிடம் எதுவுமே பேசுவதில்லை. இந்த நாடகம் நல்லதுதானா'' என்று தலைவனின் குறையைக் குறிப்பாக உணர்த்துகிறாள்.

## இறைவியறியாள் போன்று குறியாள் கூறல்:

| | | | | |
|---|---|---|---|---|
| நாடகம் | கட்டுரை | நாவல் | சிறுகதை | நாநலங்கள் |
| ஏடகம் | ஏற்றியே | எல்லா | ரிசையுங்கொள் | ஏந்தலண்ணா |
| நாடிதை | யாள்வதால் | நன்மைகொள் | பாவையே | நாமினிதாய்ப் |
| பாடுகம் | வாவினிப் | பைந்தமிழ்த் | தாயினைப் | பாட்டிசைத்தே. |

(தெ-ரை) இதைச் செவியுற்ற தலைவி, அதுபற்றி அறியாதவள் போலவும், அதைச் சரியாகக் காதில் வாங்காதவள் போலவும் வேறு ஒன்றைப் பற்றி, பாங்கியின் கேள்விக்குச் சம்பந்தமில்லாத ஒன்றைக் கூறத் தொடங்கி ''அன்புடைப் பாங்கியே, அண்ணா அவர்கள், நாடகம் எழுதுவதிலேயும், கட்டுரை தீட்டுவதிலேயும் புதினம், சிறுகதை முதலியன இயற்றிடுவதிலும், சொற்பொழி வாற்றுவதிலும், நூல்கள் வெளியிடுவதிலும் இத்துறைகளில் அவர்க்கு முன் பணியாற்றிய எல்லாரையும் மிஞ்சி விட்டார். அவர் இன்று நாடாளும் சிறப்பைப் போற்றித் தமிழ்த் தாயைப் பாடி மகிழ வா'' என்று கூறுகிறாள்.

### பாங்கி இறையோற் கண்டமை பகர்தல் :

நாடகம் ஆடுவார் நாட்டையும் ஆளுவார் நன்றுயென்று
நாடிதில் கூறி நடிகர்கள் கொண்டுமாள் அண்ணு நாட்டில்
ஆடவும் பாடவும் ஆரை அழைக்கின்ரு யாரணங்கே
ஆடவன் வந்தவன் அன்றுனை மானெனத் தேடினேனே.

(தெ-ரை) அவ்வண்ணம் தலைவி கூறினும், பாங்கி விடுவதாக இல்லை. தலைவியை எண்ணியே தலைவன் வருவதைச் சுட்டிக்கூற எண்ணி, ''அன்புத் தலைவியே, நாடகமாடுபவரால் நாட்டையும் ஆளமுடியும் என்ற கருத்துடன், நடிகர்களையும் கூட தன் கட்சிப் பணியாற்ற அண்ணு பயன்படுத்துகிறார். அதுபோல் என்னையும் உன் பணியாற்ற அழைக்கிறாய் போலும். அன்று வந்த அவன், உன்னைத்தான் மான் தேடும் சாக்கில் தேடிவந்தான் என்பதை நான் உணராதவளல்லள்'' என்று கூறி தலைவன் தலைவியின் வயமானதை உணர்த்துகிறாள்.

### பாங்கியைத் தலைவி மறைத்தல் :

அயல்நாட்டா ரண்ணுவின் ஆட்சியைக் கண்டு வியப்பதேபோல்
வயற்காட்டுப் பக்கம்நாம் வந்ததைப் பார்த்தங்கு வந்துசேர்ந்து
மயில்கூட்டும் நம்மார் எழில்கண்டு மாழ்கியே நின்றவரின்
இயல்காட்டி என்றனை வாட்டுதல் எற்றுக்கோ வேந்திழையே.

(தெ-ரை) அப்படி உணர்த்தியும் தலைவி நேரிடையாகத் தன் காதலை ஒப்புக்கொள்ளாது மறைக்க எண்ணி ''பாங்கி, அண்ணுவின் ஆட்சியைக்கண்டு அயல் நாட்டாரும் வியந்து பார்ப்பதைப் போல, நம் எழில் கண்டு யாரும் வியந்து பார்த்தால், அதைக் கூறி என்னை நீ வாட்டலாமோ'' என்று கூறி தன் காதல் விளையாட்டை மறைக்கப் பார்க்கிறாள்.

### பாங்கி என்னை மறைப்பதென்னெனத்தழால் :

நம்பிய மக்களுக் கென்றுமே நற்பணி யாற்றுகின்ற
தம்பியர்க் கண்ணுபோல் நீயென தாருயி ராயிருந்தும்
தெம்பொடு நேர்ந்ததைச் செப்பிடா தென்னை மறைத்துரைக்கும்
நம்பிடாத் தன்மையை நாணமோ தந்ததென் நாயகியே.

(தெ-ரை) ''மக்களுக்குத் தம்பிமார்களின் பணியாற்றும் திறத்தில் நம்பிக்கையுண்டு. அத்தம்பியர்க்கு அண்ணுதான் உயிர். அது போல நானும் நீயும். அண்ணு தன் தம்பியரிடம் எதையும் மறைப்பதில்லை. நீ ஏன் என்னிடம் உள்ளதை மறைக்கிறாய்'' என்று கூறி தான் தலைவிக்கு வேறானவள் அல்லள் என்பதை உணர்த்தி அவளைத் தழுவிக் கொள்ளுகிறாள்.

### பாங்கி கையுறை புகழ்தல் :

அகில உலகத்து மண்ணுவைப் போலோர் அறிஞர்காணப்
புகினு மியலுமோ பூங்கொடி சொல்லுவாய் இப்புவிக்கண்
தகுதி உடைய தலைவன் உனக்குத் தருந்தழையின்
மிகுதி எதுவு மிருந்திட மேவுமோ எண்ணுவ யே.

(தெ-ரை) அப்படித் தழுவிய தலைவி, அவளுக்கு நம்பிக்கை பிறக்கும் வண்ணம், தலைவனின் கையுறைப்பரிசைப் புகழ்கிறுள். ''அண்ணுவைப் போல உலகில் வேறு ஒருவரைக் காண்பதரிது. அதுபோல உன் தகுதிக்கேற்ற தலைவன் தந்த பரிசுபோலக் காண்பதும் அரிது'' என்று கூறுகிறுள்.

### தோழி கிழவோன் துயர் நிலை கிளத்தல் :

வானும் வணங்கும் வளம்பல வாய்த்தநம் மண்ணுநாட்டில்
நானும் மடவன்னம் நீயும் நடைபயில் நம்புனத்தே
மானும் பிணையும் மலர்த்தே னளியும் மயக்கமுட்ட
ஊனும் உருகுமா றென்னைக் கடைக்கணு லோர்ந்தனரே.

(தெ-ரை) தலைவனின் வேட்கையைத் தலைவிக்குணர்த்தக் கருதிய தோழி ''தலைவியே, இந்நாட்டை அண்ணு ஆளுவதால் வளம்பல வந்துற்றன. கவலைப்படுவார் யாருமில்லை நானும் நீயும் விளையாடும் சோலையில், ஆண் மானும் பெண் மானும் கூடி விளையாடுகின்றன. மலரின் தேனை வண்டுண்டு மகிழ்கிறது. ஆனுல் அவர் மட்டும் வாட்டத்தோடு காணப்படுகிறுர்'' என்று தலைவன் தலைவியையே நினைத்து வருந்துவதைப் புலப்படுத்துகிறுள்.

### மறுத்தற் கருமை மாட்டல் :

தம்மை புகழ்ந்தித் தரணிவாழ் யாவரும் போற்றும்போது
நம்மை அறிஞறே றண்ணுபோல் நாணுமென் நாயகியே
வெம்மை மனங்கொள வேட்கையால் வாடிடும் வெய்யவற்கு
நம்மை மறைத்தினி எங்குநாம் செல்லுவோம் நாடுவாயே.

(தெ-ரை) பாங்கிக்குத் தலைவி விடையேதும் கூருததால், பாங்கி மேலும் தொடருகிறுள். ''தலைவி, பிறர் தன்னைப் புகழ்வதைக் கேட்கும் அண்ணு நாணம் கொள்வதுபோல நீ நாணுகிறுய். வேட்கையால் வாடும் தலைவருக்குத் தெரியாமல் இனி நாம் வேறெங்கு செல்ல முடியும்? ஆய்ந்து பாராய்'' என்கிறுள்.

### தலைவன் குறிப்பு வேருக நெறிபடக் கூறல் :

| | | | | |
|---|---|---|---|---|
| எண்ண | இயல்புகள் | எத்துணை | ஏற்பினும் | இந்த நாட்டில் |
| அண்ண | எதிர்த்தால் | எதிரிகள் | வாழ்வாரோ | ஆய்ந்துபாராய் |
| பண்ண | ளுனையே | பகலிர | வெல்லாம் | பயின்று பார்த்தும் |
| ஒண்ண | தெனுமோர் | நிலைவரின் | உத்தமர்க் | கோர்மடலே. |

(தெ-ரை) இதற்கும் ஒன்றும் பதில் கூருத தலைவியை நோக்கி, "அண்ண மீது பகைகொண்டு யாரும் வாழ்வது இயலாது. அதுபோல நம் தலைவரின் பகை பெற்று இனி வாழ்வது நமக்கு முடியாது. ஏனெனில், உன்னை அடைய பகலும் இரவும் பலவகை யில் முயல்கிருர். முடியாவிட்டால் அவர்க்கு மடலேறலைத்தவிர வேறு வழியேது. அப்படி அவர் நினைப்பவராகத் தோற்றுகிறது பிறகு நாம் எப்படி மறைக்க முடியும்" என்று பாங்கி கூறுகிருள்.

### தோழி தலைவியை முனிதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| ஆளும் | திறமை | எனக்கிலே | யென்ருலென் | ருட்சியையெங் |
| நாளும் | துறந்திட | நாணிடே | னென்றுரை | யண்ண நாட்டில் |
| கோளும் | அலருமே | கூறிடாக் | கோதையர்க் | கொண்டுனது |
| நீளும் | கதையினை | நீயேகாண் | நானின்றி | நேரிழையே. |

(தெ-ரை) இதற்கும் ஒன்றும்பதில்இல்லாமற்போகவேதோழிக்குத் தலைவிமீது சற்று சினம் உண்டாகிறது. "ஆளும் திறமை தனக்கு இல்லாவிட்டால், ஆளும் பொறுப்பிலிருந்து அண்ண தானே விலகிக் கொள்வதாகக் கூறினுர். அது போல உன்நம்பிக்கைக்கு நான் பாத்திரமானவளாக இல்லாவிட்டால் நானும் விலகிக் கொள்கிறேன். உன்கருத்துக்கு ஒத்தவர்களைக் கொண்டு நீயே உன்கதையைமுடித்துக் கொள்" என்று கூறுகிருள் பாங்கி.

### தலைவி பாங்கியை முனிதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| செம்முறை | யாட்சியில் | செந்தமிழ் | சேர்த்திடு | மண்ண நாட்டில் |
| மும்முறை | என்னை | முயங்கிய | நம்பியே | யிம்முறைக்கு |
| நம்முறை | தோழியை | நாடிய | தாலன்றே | நல்லவளும் |
| எம்முறை | நாணினை | எண்ணியும் | பாரா | தெதிர்த்தனளே. |

(தெ-ரை) இதைக்கேட்ட தலைவிக்கு பாங்கி மீது கோபமேற்படு கிறது. தன்னைபற்றித் தோழி இவ்விதம் கூறத் தொடங்கியது நம் தலைவரால்தான் என்று நினைக்கிருள். மூன்று முறை இது வரை தலைவனைக் கூடிமகிழ்ந்தவள் அவள். நான்காம் முறைக்கு தலைவன் தோழியை நாடினுன். இருந்தும், "என் நாணம் இவளிடம் அதைச் சொல்ல மறுக்கிறது. இவள் நல்லவளாக இருப்பினும் என்பெரு நாணத்தை உணராதிருப்பது என்ன காரணமோ ?" என்று தலைவி தனக்குள்ளேயே எண்ணிக் கொள்கிருள்.

### தலைவி கையுறை ஏற்றல் :

நல்லவர் நம்மண்ணா நல்லதே செய்யினும் நாட்டிலுள்ள
பொல்லவர் புன்மையர் பொல்லாங்கு சொல்லல்போல் பூவையேயென்
வல்லவர் கையுறை வாங்கிடின் காதலில் வாய்மைகாணா
இல்லவர் தூற்றுவர் என்னினு மித்தழை யென்னுயிரே.

(தெ-ரை) இவ்வண்ணம் எண்ணிய தலைவி "பாங்கி, அண்ணா நல்லகாரியம் சிலசெய்தால் கூட, அதைத் தூற்றித் திரிபவர்கள் இந்நாட்டில் இல்லாமலில்லை. அதுபோலநீ நல்லதையேசெய்கிறாய் காதலின் சிறப்பறியாத சிலர் என்னைத்தூற்று வார்களோ என்று எண்ணிதான் தயங்கினேன். இருந்தாலும் என் தலைவன் தந்த இக் கையுறை எனது உயிர் போன்றது" என்று கூறி அப்பரிசுப் பொருளை ஏற்றுக் கொள்கிறாள்.

### இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற் குணர்த்தல் :

தம்பியர் அண்ணாவின் நூல்களைத் தாமாக வாங்குதல்போல்
நம்முடைய நாயகி நம்பிநீர் தந்த நறுந்தலைழயை
விம்மிய கொம்மையும் வீங்கிய கெவ்வையும் வேர்க்குமாறு
எம்மிடை வாங்கியே ஏந்தினாள் எங்கெங்கோ சார்த்தினளே

(தெ-ரை) தலைவனது கையுறையைத் தலைவி பெற்றுக்கொண்ட பிறகு, பாங்கி தலைவனைச் சந்தித்து "அண்ணாவின் புத்தகம் என்றால், தம்பியர் மிகப்பெரும் ஆர்வத்தோடு வாங்கிப்படித்து மகிழ்வர். அது போல நீர் தந்த கையுறையைத் தலைவி வாங்கி மகிழ்ந்தாள்" என்று கூறுகிறாள்.

### பாங்கி தலைமகற்குக் குறியிடம் கூறல் :

இடுப்பொடி பட்டின் றெதிர்க்கட்சி யாயுள்ளோ ரேந்தி நின்ற
தடிக்கடி பட்டாலுந் தம்பியர் முன்பாகத் தாமேசென்று
அடிக்கடி அண்ணாதன் கூட்டம் நடத்துமப் பக்கமேதான்
படிப்படி யாகவே பாலவையும் யானும் பயில்பொழிலே.

(தெ-ரை) தலைவியைச் சந்திக்கத்தலைவன் விரும்புவதை யுணர்ந்த பாங்கி, சந்திக்க ஓர் இடத்தைக் குறிப்பாக உணர்த்துகிறாள். இன்று எதிர்க்கட்சியாக உள்ள காங்கிரஸ்கட்சி ஆளுங்கட்சியாக இருந்த போது, அண்ணா பொதுக்கூட்டத்துக்கு அடிக்கடி தடை போடுவார்கள். கூட்டம் நடந்தால் அடிதடி நடத்துவார்கள். என்றாலும் குறிப்பிட்ட இடத்தில் கூட்டத்தில் பேச அறிஞர் அண்ணா அச்சமின்றி வருவார். அந்த இடத்தைச் சுட்டிக்காட்டி, அதற்குப்பாக்கமாக உள்ள பூங்காவிலே தான் தானும் தலைவியும் அடிக்கடி விளையாடு மிடம் என்பதைப் பாங்கி தலைவனுக்குக் கூறுகிறாள்.

### பாங்கி குறியிடத் திறைவியைக் கொண்டு சேறல் :

இயலிசை நாடகம் யாவையும் நாடுமென் ஏந்திழையே
குயிலிசை நாடொறும் கூவிடும் நாம்பயில் பூம்பொழிற்குத்
தயவுசெய் தென்னேடு தப்பாது வந்திரு தட்டிடாமல்
அயலிலே இன்றுநம் மண்ணவும் சொற்பொழி வாற்றுவாறே.

(தெ-தை) தலைவனைவரச் சொல்லிய இடத்திற்குத் தலைவியை அழைத்துச் செல்ல வேண்டிய கடமை பாங்கிக்குரியது. அனுலும் அதை நாகரிகமாகக் குறிப்பிட வேண்டும். ஆகவே. ''தலைவி, உனக்கு இயல், இசை, நாடகம் என்றால் மிகவும் பிடித்தமானது தானே. அடிக்கடி நாம் விளையாடும் பொழிலுக்குப் பக்கத்தில் இன்று அண்ணு பேசுகிருர். அவர் பேச்சில் இயலும், இசையும் நாடகமும் ஆகிய முத்தமிழும் கொஞ்சும். தவருது, தட்டாமல் வருக'' எனப் பாங்கி கூறுகிருள்.

### பாங்கி தலைமகளைக் குறியிடத்துய்த்து நீங்கல் :

ஞாயிறு போன்றநம் அண்ணுவின் பேச்சிலே நாட்டங்கொண்ட
ஆயிரம் மாயிரம் ஆடவர் பெண்டிரோ டார்வத்தோடு
போயிடுங் காட்சியை யோர்நொடிப் போழ்திலே பார்த்து வாரேன்
ஆயிழை நீயிங் கதுவரைக் காத்திரு அஞ்சிடாதே.

(தெ-ரை) பாங்கியும் தலைவியுங் குறித்தஇடத்துக்குப்போகிருர்கள் தலைவியைத் தனியே விட்டு விட்டுப் பாங்கி பிரியவேண்டும். ஏதாவது காரணம் சொல்லியாக வேண்டும். உண்மைக்காரணத்தை உரைப்பது நாகரிகமாகாது. ஆகவே ''ஆயிரக்கணக்கான மக்கள் ஆண்களும் பெண்களுமாக அண்ணுவின் பேச்சைக்கேட்கப் போய்க் கொண்டிருக்கிருர்கள். அக்காட்சியைப் பார்த்து விட்டு ஒரு நொடியில் ஓடிவருகிறேன். நீ இங்கேயே இரு'' எனத்தலைவியிடம் கூறிவிட்டுப் பிரிகிருள்.

### இறைவி இறையோனிடத் தெதிர்ப்படுதல் :

தெக்கணம் வாழ்ந்திடும் செந்தமிழ்ப் பேசிடும் சீர்மையுற்ற
மக்களின் துன்பங்கள் யாவையும் மங்கிடச் செய்வதற்குத்
தக்கவன் அண்ணு ஒருவன் தான் தையல்நீ யீங்கவன்போல்
இக்கணம் தோன்றிஞய் என்துயர் யாவையும் போக்கிருயே.

(தெ-ரை) குறிப்பிட்டபடி தலைவனும் அங்குவந்து சேருகிருன். ''திராவிடநாட்டு மக்கள் யாவருக்கும் துன்பம் நீக்க அண்ணு தோன்றியது போல், இங்கு என்துன்பம் நீக்க நீ தோன்றிஞய்'' எனத் தலைவன் கூறுகிருன்.

## புணர்ச்சியின் மகிழ்தல் :

வான்புகழ் செந்தமிழ் வாழ்ந்திட வாழூம் மண்ணுநாட்டில்
நான்புகழ் நங்கையே நானில மீதினில் காணும்வாழ
தேன்கமழ் பூம்பொழில் தீஞ்சுவைத் தேங்குழல் நீயும் வந்தாய்
ஊன்கமழ் கள்ளினை உண்டனம் நான்முறை யொன்றினேமே

(தெ-ரை) நான்காவது முறையாகத் தலைவியும் தலைவனும் கூடுகின்றனர். செந்தமிழ் வாழ அண்ணு வாழ்வது போல, தான் வாழத்தலைவி வாழ்வதாகத் தலைவன் எண்ணுகிறுன். ஊன் கமழ்கள்ளுண்டு இருவரும் உள்ளம் மகிழ்கின்றனர்.

## புகழ்தல் :

கண்ணு ளுனது கனியிதழ் ஊறிடுங் கள்ளைக்கொண்டே
நண்ணு ரெனினும் நயந்திடுங் தன்மையில் நாநலங்கொள்
அண்ணு வெழுதிய பண்ணுர் மெ ழ்களி ல ழ்ந்தபோதும்
எண்ணு மகிழ்வினை எவ்வணங் தந்ததை யென்றனுக்கே,

(தெ-ரை) மகிழ்ந்த தலைவன் தலைவியைப் புகழ்கிறுன். ''அண்ணுவின் கருத்துக்களை எண்ணி நான் எத்துணையோ முறை மகிழ்ந்திருக்கிறேன். உன் இதழ்த்தேன் சுவை அதனினும் மிக்க மகிழ்வினைத் தந்தது எவ்வாறென்று கூறுவாயோ'' என்று தலைவன் தலைவியைப் பாராட்டுகிறுன்.

## தலைமகளைத் தலைமகன் விடுத்தல் :

கோட்டைக்குள் சென்றிந்த நாட்டைத்தா ளினும் கொண்டகொள்கைப்
பாட்டைக்குள் என்றுந்தன் பாதையே சென்றிடு மண்ணுவைப்போல்
தேட்டைக்கொள் என்னிடம் தேன்மழை பெய்வதில் தேர்ந்த பின்னும்
வீட்டைக்கொள் தன்மையில் வேட்கைகொள் ளாயம்சேர் வேல்விழியே.

(தெ-ரை) அறிஞர் அண்ணு அவர்கள், ஆளுவதற்காகக் கோட்டைக்குள் சென்றுலும், முன்கொண்ட கொள்கை வழியினின்றும் விலகிப் போகமாட்டார் அதுபோல, இன்பம் பயப்பதற்காக நீ இங்கு வந்தாலும், உன் பெருமைக்கு ஊறு விளைய நீ நடக்க மாட்டாய். உன்னை உள் தோழிகள் தேடுவர். நேரத்தில் வீடு செல்ல வேண்டும்'' என்று கூறி தலைவியைப் போக விடுக்கிறுன்.

### பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறை காட்டல் :

விழிப்புற்ற மாந்தர்கள் வீணரா ளாட்சியை மாற்றுமாறு
பொழில்பக்க மாயண்ணு சொற்பொழி வாற்றிர் போதைகொண்டேன்
எழில்மிக்க தோற்றங்கொள் ஏந்திழாய் என்னையும் நானுமறந்தேன்
மொழிப்பற்று மூட்டுமோர் நூலிதும் வாங்கினேன் மோனமேனே

(தெ-ரை) தலைவி பாங்கியை நோக்கிவர, பாங்கியும் தலைவியைக் கண்டு, ''அழகுமிக்க நங்காய், உன்னை இங்கே விடுத்து, அண்ணாவின் கூட்டங்காணச்சென்றேன். அவர் சொற்பொழிவுத் தேனையுண்டு மயங்கி, என்னையானே மறந்தேன். அங்கு விற்ற அண்ணாவின் நூலொன்றும் வாங்கி வந்தேன்; இதோ பார் அதை'' என்று தன் கையுறையைத் தலைவிக்குக் காட்டுகிறாள்.

### பாங்கி தலைவியைப் பாங்கிற் கூட்டல் :

அறிவும் பரிவும் அழகும் ஒருங்குடை யண்ணுபேச்சில்
செறியும் கருத்தினைச் சிந்தையில் சேர்க்கும்நம் செல்விமார்கள்
மறையும் முனமே மதிமுக மங்கையே நம்மனையோர்
உறையும் இடந்தனை நாமும் உறுவோம் விரைவிலேயே.

(தெ-ரை) அவர்கள் இருவரையன்றி இன்னும் பல தோழிமார்களும் அங்கு வந்தனர். எல்லாரும் அண்ணாவின் பேச்சைக் கேட்டுக்கொண்டு இருந்தனர். அண்ணா பேச்சு முடியும் தருவாயில் இருந்தது. முடிந்துவிட்டால் தோழியர்கள் வீட்டுக்குப்புறப்பட்டு விடுவர் என்பதைத் தலைவிக்குக் கூறி விரைவில் செல்ல வேண்டும் என்பதையும் கூறுகிறாள். இருவரும் மற்றவர்களுடன் கலந்து கொள்கின்றனர்.

### பாங்கி தலைவியை நீங்கி தலைவற்கோம்படை சாற்றல் :

நேரிழை யாளைநீர் தேர்ந்திடவெ யெனை நேற்றுமின்றும்
பாரிதில் யார்க்கும் பணியீ ரெனினும் பணிந்துநின்றீர்
ஆரினும் பேரருள் காட்டிடு மண்ணாவாழ் நாட்டிலுள்ள
ஊரிதை என்றும் மறந்திடா தென்னிலை யுன்னுவீரே.

(தெ-ரை) தலைவியை மற்ற தோழிமார்களோடு இருக்கச் செய்துவிட்டு, உயிர்ப் பாங்கி மட்டும் மீண்டும் திரும்பி வந்து தலைவனைச் சந்தித்து ''தலைவரே, நீர் யாருக்கும் பணியமாட்டீர் என்றாலும் தலைவியை அடைய வேண்டி, நேற்றும் இன்றும் என்னைப் பணிந்தீர். யாரையும் விட அதிகக் கருணை காட்டும் அண்ணா வாழும் நாட்டிலுள்ள எங்களூரை மறந்து விடாதீர்கள்'' என்று கூறி தலைவியை மறக்காமை வேண்டும் என்பதை வலியுறுத்துகிறாள்.

### உலகியல் மேம்படவிருந்து விலக்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| செல்விருந் | தோம்பி | வருவிருந் | தோர்ந்திடு | மண்ணுநாட்டில |
| மல்கிய | வல்சியுள் | ஊன்பெய்த | நெய்ச்சோறும் | மீனும்தேனும் |
| செல்விய | ரெம்குழல் | சேல்விழி | யாளிடத் | தங்கியுண்டு |
| செல்லுதல் | எங்ஙனம் | தங்களுக் | கின்னலைச் | சேர்த்திடுமே |

(தெ-ரை) தலைவனை, இரவு நேரத்து வீட்டுக்கும் பக்கத்திலேயே தலைவியைச் சந்திக்கச் செய்ய எண்ணிய பாங்கி, தலைவனைத் தம் வீட்டுக்கு விருந்துக்கழைக்கிறாள். ''அண்ணு ஆளும் இந்த நாட்டில் விருந்தோம்பும் பண்பு மிகுதியாக உண்டு. எங்கள் குடிலில் கறி பிரியாணியும் (ஊன் பெய்த நெய்ச்சோறு) மீன் குழம்பாகிய தேனும் உண்டு செல்வதில் தங்களுக்கு ஏதேனும் இடையூறுண்டோ'' என்று பாங்கி நயமாகவும் நாகரீகமாகவும் தன் கருத்தைக் கூறி அழைக்கிறாள்.

### விருந்திறை விரும்பல் :

| | | | | |
|---|---|---|---|---|
| சொல்லிட | வெண்ணிய | சோல்லைச் | சுவையாக்கிச் | சொக்கவைக்கும் |
| வல்லமை | கொண்டநம் | மண்ணுவாழ் | நாளிலே | வாழுகின்ற |
| மெல்லியல் | வஞ்சியீர் | மீன்பாகைத் | தேன்பாகா | யாக்கிடநீர் |
| வல்லமை | கொண்டதை | வாழ்த்துதல் | தேவையோ | சொல்லுவீரே. |

(தெ-ரை) பாங்கியின் உட்கருத்தை உணர்ந்து கொண்ட தலைவனும், அவர்களின் உணவுபற்றிய செய்தியைக் கூறி விருந்துக் கழைத்தமைக்கு வாழ்த்துகிறான். பாங்கி மீனும் தேனும் எனக் கூறியதை நினைந்து ''மீன் குழம்பைத் தேன் குழம்பாகச் சமைக்கும் ஆற்றலை நீங்கள் பெற்றமைக்கு வாழ்த்துக் கூற எண்ணினேன். ஆனால், சொல்லையே சுவையாக்கும் ஆற்றல் வாய்ந்த அண்ணு வாழும் நாளில் உங்கள் ஆற்றல் ஒரு பெரிதன்று'' எனக் கூறிப் பிரிகிறான்.

## கக. ஒரு சாற் பகற்குறி.

### கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி பொழுது கண்டிரங்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பாதகம் | செய்தவர் | பாலும் | பகைகொள்ளா | வண்ணுநாட்டில் |
| ஆதவன் | பாலிந்தத் | தாமரை | யாள்செய்த | பாவமென்னே |
| மாதுயான் | துன்புற | மாலையைத் | தந்ததோ | மாய்கின்றனே |
| வேதனை | வென்றிட | வோர்வழி | விள்ளுவாய் | வேல்விழியே |

(தெ-ரை) மாலைக்காலம் வருகிறது. தலைவனை எண்ணித் தலைவி வருந்துகிறாள். "பாங்கி பாதகம் செய்பவர்களுக்குக் கூட அண்ணா இடையூறு கொடுக்க மாட்டார்கள். அவர் ஆளும் இந்த நாட்டில், சூரியன், தன் காதலியாகிய தாமரை மலரைக் கூம்ப வைத்து மறைவது ஏனோ? அவன் மறையும் இந்த மாலை நேரத்தில் என் காதல் நோய் பெருகுகிறதே. நோய் தீர மருந்து ஒன்றைச்சொல்லமாட்டாயா?" என்று தலைவி மாலைப்பொழுதை எண்ணி இரங்குகிறாள்.

### பாங்கி புலம்பல் :

தம்பியர் தம்மண்ணா தம்மைப் பிரிந்திடின் வாடுதல்போல்
செம்பிறை நெற்றியாள் சிந்தை நெகிழ்ந்தனள் செம்மலின்றிக்
கொம்பிவள் தன்முகங் கொண்டுதன் காதலி வென்றளென்றோ
வெம்பிய வேளையில் வெய்யவன் மாலையை வேண்டினனே.

(தெ-ரை) தலைவி வருந்துவதெண்ணிய பாங்கி, "நம் தலைவி, அண்ணாவைப் பிரிந்த தம்பியைப்போல வாடுகிறாள். மாலைக் காலத்தைத் தந்து, இம்மங்கைக்குத் துன்பந்தரக் கதிரவன் ஏன் எண்ணவேண்டும்? ஒரு வேளை, இவளுடைய முகம், தன் காதலி யான தாமரையையும்விட அழகாக உள்ளதை எண்ணி, அதனால் பொறாமைகொண்டு, வாட்டுவதற்கு முனைந்தான் போலும்" என்று புலம்புகிறாள்.

### தலைவன் நீடத் தலைவி வருந்தல் :

வன்புள்ளங் கொள்ளாது வாய்மை வழிசெல்லு மண்ணாநாட்டில்
அன்புள்ளங் கொண்டநம் மாயத்தா ரெல்லாரு மங்குமிங்குஞ்
சென்றுள்ள நல்வேளை சேர்ந்ததே யாயினுஞ் செம்மலிங்கே
இன்றின்னுங் காணோமே என்னவோ காரணம ஏங்குவேனே.

(தெ-ரை) தலைவனும் தலைவியும் சந்தித்தது முதல், ஐந்து நாட்கள் கடந்து, ஆறும் நாளும் துவங்குகிறது. தலைவனை எண்ணிய தலைவி "நம் தோழிமார்கள் அங்குமிங்கும் சென்றுள்ளனர். நான் தனியாக இருக்கும் இவ்வேளை கிடைக்கப்பெறாத ஒன்று. இன்னும் தலைவன் வரக்காணோம். வன்னெஞ்சம் கொள்ளாத அண்ணா ஆளும் இந்நாட்களிலும், தலைவன் என்னை இங்ஙனம் வாட்டுதல் ஏனோ?" என்று கலங்குகிறாள்.

### தலைவியைப் பாங்கி கழறல் ;

எழிலின் உருவாய்ப் பொழிலின் மருவிய பூங்கொடியே
அழலின் மெழுகா யவர்பிரி வாலின் றழிவதேனோ
பழகின் பிரியா பழக்கங்கொள் ளண்ணாயிப் பாரையாள
அழிவும் வருமோ பழியும் தருமோ வயர்வதென்னே

(தெ-ரை) கலங்கும் தலைவிக்கு அறிவுரை கூறித்தேற்ற எண்ணிய பாங்கி, "ஒருவரோடு பழகி விட்டால் பிரியும் பண்பைப் பெருத அண்ணு ஆளும் இந்நாளில், தலைவர் உன்னைப்பிரிந்தாலும் வாராமல் இரார். நீ வருந்துவது உன் அறியாமையேயாகும்" எனத் தலைவியை இடித்துரைக்கிருள்.

### தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல் :

இன் துணை யாயினுர் ஏந்திழை நீங்கிடின் என்னநேரும்
என்பதை எண்ணிடாத் தன்மையில் என்னையும் ஏசுவோர்கள்
அன்புடை யண்ணுவின் ஆணையைக் கேளாது மாறிசென்று
பின்புடை யின்னலைப் பேணுத தன்மைகொள் பேதையோரே.

(தெ-ரை) இப்படிக் கூறிய பாங்கியிடம் தலைவிக்குக் கோபம் வருகிறது. எனினும் நேரடையாகக் கூருமல், புறமொழியாகக் கூற எண்ணி "துணைவன் நீங்கினுல் துன்பம் எத்துணையளவாக இருக்கும் என்பதை எண்ணுதவர்கள், பின்னுல் வரும் இன்னலையறியாமல், அண்ணுவுடன் மாறுபட்டுப் பிரிந்தவர்களைப்போன்ற அறிவிலிகள் தான்" எனக் கூறுகிருள்.

### தலைவி பாங்கியொடு பகர்தல் :

என்மனந் துன்புறுந் தன்மையைச் சற்றுமே யெண்ணிடாமல்
இன்பமே தந்தவர் துன்பமும் தந்ததேன் எந்நாளும்
மன்பதை யாவர்க்கும் நன்மையே நாடுநம் மண்ணுநாட்டில்
கன்மனங் கொண்டவர் காண்டலுங் கூடுமோ காரிகையே.

(தெ-ரை) இது கேட்ட பாங்கி, தான் தலைவியை இடித்துரைத்தமைக்கு வருந்தித் தலைவியை உபசரித்தமையால், தலைவி சற்று சினம் தணிந்து "பாங்கி, எல்லார்க்கும் நன்மை செய்யும் அண்ணுவின் நாட்டில், என்னுடைய உள்ளம் அறியாமல் துன்பம் செய்யக்கூடிய கல்மனம் நம் தலைவருக்கு எப்படி ஏற்பட்டது என்றுதான் தெரியவில்லை" என்றுரைக்கிருள்.

### தலைவியைப் பாங்கி யச்சுறுத்தல் :

தென்னக மாண்டிடுஞ் செந்தமிழ் வேந்தன மண்ணுநாட்டில்
உன்னக மாண்டிரு முத்தமர்க் காகநீ வுள்ளழிந்தால்
என்னக மாண்டிடு மேந்திழாய் நம்மகத் தன்னைமார்கள்
நின்னக மாண்டிட நேருமே என்றுதா னஞ்சுவேனே.

(தெ-ரை) தலைவி நெஞ்சம் கலங்கினால், தலைவியின் தோற்றப் பொலிவு அழியும். பொலிவழிந்தால் தாய்மார்கட்கு ஐயந்தோன்றும். ஐயந்தோன்றினால் தலைவியை வீட்டிலேயே இருத்தி விடுவார்கள். வேறு யாருக்காவது மணமுடிக்க முற்படுவதும் இயற்கையே. அப்படி முற்படின் தலைவியின் கற்பு வாழ்க்கைக்கு கெடுதல் நேரும். இவற்றையெல்லாம் நினைத்து ''தென்னக மக்களின் உள்ளத்தை அண்ணா ஆட்கொண்டது போல, உன் நெஞ்சத்தைத் தலைவன் ஆட்கொண்டுள்ளான். ஆகவே கவலையுறத் தேவையில்லை.'' என்று கூறி, தலைவி இல்லத்தை விட்டுப் புறப்பட்டுத் தலைவனைச் சந்திக்கும் வாய்ப்பை இழக்க நேரும் என்ற தன் அச்சத்தைத் தலைவிக்கு வலியுறுத்துகிறாள்.

### நீங்கற்கருமை நினைந்திரங்கல் ;

இங்நிலத் தெங்கணுந் தன்புகழ் மேவுமா றேற்றங்கொண்ட
செந்தமிழ்த் தாயைநம் மண்ணாதன் சிந்தைக்குள் சேர்த்ததேபோல்
பைந்தொடி யென்னையும் பண்ணவன் தன்னுடைப் பக்கமொன்றில்
சொந்தமாய்ச் சேர்க்குமோர் விந்தையைக் கண்டிடின் சோர்ந்திடேனே

(தெ-ரை) இதுகேட்ட தலைவி, ''பாங்கி, அண்ணாவின் உள்ளத்தை விட்டுப் பிரியாமல் எப்போழ்தும் குடிகொண்டிருக்கும் செந்தமிழ்த் தாயைப் போல, என் தலைவரை விட்டுப்பிரியாமல் அவர் உடலில் ஒரு பாகமாக நானும் இருந்துவிட்டால் எனக்கு எந்தக் கவலையுமே தோன்றாது'' எனப் பாங்கியிடம் கூறி தன் நிலைமையெண்ணி இரங்குகிறாள்.

### தலைவிக்கவன் வரல் பாங்கி சாற்றல் :

வண்மையும் திண்மையும் வாய்மையும் வாய்த்தநம் மண்ணாநாட்டில்
உண்மையில் செய்தவ முற்றவர் உன்னையே உற்றவர்தான்
பெண்மையும் நாணமும் பீடுற நண்ணிய பேதைநீயும்
அண்மையில் பாரதோ அண்ணலின் சாயல்தான் ஐயமேதே

(தெ-ரை) இவ்வண்ணம் இவர்கள் இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போது தூரத்தே தலைவன் வருவது பார்த்த பாங்கி ''உன்னைப்போன்ற பெருமையுடை நங்கையை நற்பேறு பெற்றவர்தான் அடைய முடியும். அதோபார் உன் காதலன் வருகின்ற காட்சியை அறிஞர் அண்ணா ஆளும் இந்த நாட்டில் வாய்மை வீண் போகுமா'' என்று கூறி தலைவியைத் தேற்றுகிறாள்.

### தோழி சிறப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல் :

பொழிலினைச் சூழ்ந்த புனக்கதிர் சூல்முற்றிப் போனதாலே
எழிலினை ஏந்தினு ரெல்லாரு மில்லிற்கே யேகுவாரால்
உழவினை எங்குமே ஊக்கி வளர்த்திடு மண்ணாவூரில்
பழகிய பண்பினர் பைந்தொடி பார்த்திடப் பாதையேதே

(தெ-ரை) புனம் காக்க வரும் சாக்கில் தான், தலைவி இதுவரை தலைவனை வந்து சந்திக்கக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டது. கதிர்கள் முற்றியதால், இனி அறுவடை செய்ய ஆண் மக்கள் பலரும் வந்து சேருவர். ஆகவே இனி தலைவியைச் சந்திக்க முடியாமற் போகும் என்பதைக் குறிப்பாகக் கூற எண்ணிய பாங்கி, தலைவன் தோட்டத்துக்குப் புறமாக வருவதைக் கண்டும் காணாதவள் போல, ''தலைவி, உழவுத் தொழிற்கு மிகுந்த ஊக்கம் காட்டும் அண்ணா நாட்டில் கதிர்கள் விரைவிலேயே முற்றிப்போயின. இனித் தலைவனைச் சந்திக்க ஏதாவது வழியுண்டோ'' என்று கூறுகிறாள்.

## தோழி தலைமகற்கு முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்

நறும்பொழில் சூழ்ந்திடும் நாகிளம் பூவைகாள் கோகிலங்காள்
நறுந்தமிழ் யாங்கணும் நாட்டிய பேருடை யண்ணாநாட்டில்
சிறந்தநற் பண்புகொள் செம்மலே தாம்கொண்ட சேயிழையை
மறந்திடல் செய்தாலும் நீவிர் சிறிதும் மறந்திடேரே.

(தெ-ரை) தலைவன் அருகே நின்றும், அவனைக் காணாள் போல, பறவைகளை நோக்கிக் கூறுவது போல் ''பொழில் வாழ் நாகண வாய்ப்புட்களே, மயில்களே, நல்ல தமிழை யாரும் மறவாமை பொருட்டு அதை வளர்த்து நிலை நாட்டிய அண்ணா நாட்டில், நாங்கள் இவ்விடம் விட்டு நீங்கிய பின், தலைவியைத் தலைவன் மறந்தாலும் உங்களோடு பழகிய எங்களை நீங்கள் மறக்கக் கூடாது'' என்று கூறி தங்கள் நிலையைத் தலைவனுக்கு அறிவுறுத்துகிறாள்.

## பாங்கி தலைமகன் முன்னின்றுணர்த்தல்:

மோதிரம் மாற்றியும் முல்லையை மாட்டியும் முன் நின்ற
ஆதரம் சாற்றியெம் மாயிழை யாண்டபே ராண்டகையீர்
மாதரைப் போற்றிடும் மாண்புடை யண்ணாவாழ் நாட்டிலின்றெம்
சோதரர் சூழுவர் சோலையின் சூழலில் சூற்கதிற்கே.

(தெ-ரை) புறமாக மொழிந்த பாங்கி, தலைவனுக்கு நேரிடையாகவே உணர்த்த வெண்ணி, ''மோதிரம் மாற்றிக்கொண்டு, மாலை சூட்டி காதலைக் கூறி என்தோழியை நீர் ஆண்டுகொண்டீர் மங்கையர்க்குரிய மாண்பினைப் போற்றிப் பாதுகாக்கும் அண்ணா ஆளும் நாட்டில் நீரும் என் தோழியைப் பாதுகாப்பீராக. எம் சகோதரர்கள் இங்கு இனி சூழ்ந்திருப்பர். ஆகவே தலைவியைச் சந்திப்பதரிது'' என்று தலைவனிடம் கூறுகிறாள்.

### பாங்கி முன்னின்றுணர்த்தி யோம்படை சாற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| சீரா | ரமிழ்தமாஞ் | செந்தமிழ் | போற்றிய | சீர்மைகண்டு |
| பாரா | ரனைவரும் | பாராட்டு | மண்ணவாழ் | நாட்டுறைவீர் |
| ஏரா | ரணங்கனை | யேந்திழை | யாளைநீ | ரேற்றுவாழத் |
| தேரா | தமைந்திடின் | தேமொழி | யிந்திலந் | தேர்வதேதே |

(தெ-ரை) ''செந்தமிழை மறவாமல் போற்றி வாழும் அண்ணு இல்லாவிட்டால் தமிழ் மொழி நிலைக்குமா? என் தலைவியை நீ மறந்து விட்டால் என் தலைவியும் வாழ்வளோ? ஆகவே அவளைக் காப்பது உன் கடமை'' எனப் பாங்கி மேலும் தன் கருத்தை வலியுறுத்துகிருள்.

### கிழவோன் தஞ்சம் பெருது நெஞ்சொடு கிளத்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| முத்தமிழ் | வேந்தரும் | அண்ணு | மொழிந்திடும் | மோனைப்பேச்சை |
| எத்துணை | இன்னல்கள் | நேரினும் | இந்நாட்டுத் | தம்பிமார்கள் |
| நத்திடா | தார்வரோ | நெஞ்சமே | நங்கையை | நாடிடாமல் |
| எத்தனை | நாழிகை | என்னுயிர் | இந்நிலம் | எண்ணுவாயே |

(தெ-ரை) பாங்கி கூறியவற்றைக் கேட்ட தலைவன், தலைவியைச் சந்திக்கும் வாய்ப்பு கிடைக்காமற்போகுமே என்று கலங்குகிருன். ''எவ்வளவு தான் இன்னல்கள் ஏற்பட்டாலும், அண்ணுவின் அழகு மொழிப் பேச்சைக் கேட்காமல் தம்பியரால் வாழ முடியுமோ? தலைவியைக் காணுமல் நான் எப்படி வாழ முடியும்?'' என்று எண்ணி நெஞ்சத்துள் வருந்துகிருன்.

## கஉ. பகற்குறி யிடையீடு.

### இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| நந்தமிழ் | நாட்டுறை | நற்பொருள் | நானிலத் | தெவ்விடத்தும் |
| நந்திடாத் | தன்மையில் | நாடாளு | மண்ணுபோல் | நங்கைதன்னை |
| எந்தம | தன்னைமார் | இல்லத்துட் | காப்பதா | லெந்தபோழ்தும் |
| வந்துமை | பார்த்திட | வார்குழற் | கில்லையால் | வாடுவாளே. |

(தெ-ரை) தலைவியைக் காணும் பொருட்டு காத்திருக்கும் தலைவனை நோக்கி, ''நம் நாட்டுச் செல்வங்களை அண்ணு பாதுகாப்பது போல, தலைவியை எம் தாய்மார்கள் காக்கின்றனர். உம்மை வந்து பார்க்கத் தலைவிக்கு வாய்ப்பேதுமில்லை'' என்று கூறி, தலைவனை அங்கு வரவேண்டாம் எனக் குறிப்பாக உணர்த்துகிருள் பாங்கி.

### இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல் :

எண்ணிய யெண்ணியாங் கெய்துதற் கேற்ற கடைமையேந்திக்
கண்ணிய கட்டுடன் காசினி யாண்டிடு மண்ணுநாட்டில்
எண்ணிய வண்ணமே ஏந்தலைக் கொண்டிட ஏலுமேனும்
கண்ணிய வன்னைமாங் காவலைக் காணுவாய் காரிகையே

(தெ-ரை) தலைவனுக்குணர்த்தியது போல தலைவிக்கும் உணர்த்த எண்ணிய பாங்கி "தலைவியே, அறிஞர் அண்ணு அவர்கள் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்ற மூன்று பண்புகளை மேற்கொண்டு எண்ணிய செய்கைகளை எண்ணியவாறு செய்து பயன் பெறுவதைப்போல, நீயும் உன் எண்ணத்தை முடித்துக் கொள்வதே நல்லது. உன்னை இப்போது அன்னைமார்கள் கண் காணிப்பதால், இப்போது நீ எங்கும் செல்வலாகாது" என்று கூறி, காலமறிந்து கடமையை செய்யத் தூண்டுகிருள்.

### இறைமகள் ஆடிடம் நோக்கி அழிதல் :

கூடிய கூட்டமே கொள்கையைக் கூறிடக் கொள்ளுமண்ணு
நாடிய நாட்டினில் நங்கையர் தம்மொடும் நம்பியோடும்
ஆடிய ஆட்டமும் கூடிய கூட்டமும் நாடிநாடி
வாடிய வாட்டமே வஞ்சியேன் கொண்டிட வாய்த்ததென்னே

(தெ-ரை) தானும் தலைவனும் விளையாடிய இடம் நோக்கித் தலைவி வருகிருள். அறிஞர் அண்ணு அவர்கள், பொதுக்கூட்டத்திலே கூட, மக்கள் கருத்தைக் கேட்டு அவர்களின் எண்ணத்தை அறிந்து முடிவெடுப்பார்கள். தலைவனும் தலைவியும் கூடி எடுத்த முடிவை மேற்கொள்ள முடியாமல் இடையூறு வந்து விளைகின்ற தன்மையை நினைந்து தலைவி வருந்துகிருள்.

### பாங்கி ஆடிடம் விடுத்துக் கொண்டகறல் :

ஏவர்க்கும் எளிதிலே யெட்டாத ஏல்தந்த ஏற்றந்தன்னை
உவக்கும் பொழுதிலு மண்ணுவி னுள்ளத்துட் தம்பிமார்போல்
இவட்கும் இதண்காண் இதயத்து ளெப்போழ்து மேந்தலேதான்
அவர்க்கும் அறைவீரின் றையன்மா ராணையா லேகினேமே,

(தெ-ரை) அவ்விடத்தை விட்டுத் தலைவியை நீக்கி, பக்கத்துள்ள ஊர்க்குத் தம் வீட்டுக்குத் தலைவியை அழைத்துச் செல்லுமுன், பாங்கி, அங்குள்ள, பரண் ஒன்றினை நோக்கிக் கூறுவது போல ''ஓ, பரணே, அமெரிக்காவில் சிறந்த பல்கலைக்கழமானஏல்கழகம் அறிஞர் அண்ணாவின் சிறப்பறிந்து, அவரைத் தன்பால்அழைந்து மாணவர்கட்கு அறிவுரை வழங்கச்செய்தது அந்தச்சமயத்திலும் கூட அண்ணா தம் தம்பிமார் பற்றியே எண்ணிக் கொண்டிருந் தமைபோல, தலைவி எங்கிருந்தாலும் தலைவனையே தான் எண்ணிக்கொண்டிருப்பாள். தலைவர் வந்தால் நீ இதை அவரிடம் கூறு'' என்கிறாள். (இதண்—பரண்)

பின்னால் நெடுந்தகை குறிவயின் நீடுசென் றிரங்கள் :

| | | | | |
|---|---|---|---|---|
| அமரிக்கா | சென்றாலு | மண்ணாதன் | னுள்ளத் | தருந்தமிழ்போல் |
| தமரிக்கா | வந்தாலுந் | தையலாள் | தானேயென் | நெஞ்சத்துள்ளாள் |
| தமரிக்காத் | தத்தைகாள் | தாவிடா | நவ்விகாள் | தாழ்குழல்கொள் |
| குமரிக்காக் | கண்டிரோ | கூறுவீர் | கூற்றெனைக் | கொள்ளுமுன்னே |

(தெ-ரை) இவ்வண்ணம் ஆறுவது நாள் கடந்தது. ஏழாம்நாள் தலைவன் தலைவியைத் தான் சந்தித்த அவ்விடம் வந்து தலைவியைக் காணாது வருந்துகிறான். அங்குள்ள கிளிகளும் மான்களும் கூடத் தலைவியின்றி பேசாமல், பாயாமல் அமைதியாயுள்ளன. அதுகண்ட தலைவன், ''ஓ பேசாக் கிளிகாள், தாவா மான்காள், அண்ணா அமெரிக்கா சென்றாலும் அவர் மனதில் தமிழ்தானே குடி கொண்டிருந்தது. அத்தமிழ் போல என் நெஞ்சில் தலைவி குடிகொண்டுள்ளாள். அவளை நீங்கள் பார்த்ததுண்டா. என்னுயிர் நீங்குமுன் கூறுங்கள்'' எனக்கூறி இரங்குகிறான். (தமர் + இ + கா = தம்மை சார்ந்தோர் இத் தோட்டத்தில் தமரிக்கா=ஒளிசெய்யாத)

தலைவன் வறுங்களம் நாடி மறுகல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அஞ்சாத | நெஞ்சன் | அழகிரி | சாமியை | யெண்ணியெண்ணி |
| நெஞ்சாரத் | துன்புறு | மண்ணாபோ | லென்னெஞ்சும் | நெக்குருக |
| மஞ்சாடு | பைஞ்சோலை | மஞ்ஞைகாள் | நும்மனை | மாதரார்கள் |
| நஞ்சார | லெண்ணாது | நாடிய | தெங்கண் | நவிலுவீரோ |

(தெ-ரை) தலைவியில்லாத சோலையை நோக்கிய தலைவன் ''சோலைவாழ் மயில்களே, நும் சாயலை ஒத்த என் தலைவி எங்கு சென்றாள்? சுயமரியாதைக் கொள்கைகளைத் தன் உயிராகக் கருதிய தன்மான வீரன் அஞ்சா நெஞ்சன் அழகிரிசாமி இறந்து போனதை எண்ணி அண்ணா அடிக்கடி வருந்துவதுபோல, என்னுள்ளம் தலைவியைக் காணாது வருந்துகிறது'' எனக்கூறி அல்லற் படுகிறான்.

குறுந்தொடி வாழூர் நோக்கி மதிமயங்கல் :

மங்குல் திகழ்ந்தெங்கும் மாதமும் மாரி பொழிவதாலே
எங்கும் புகழ்தங்கு மேற்றம் மிகுந்தநம் மண்ணநாட்டில்
பொங்கும் எழில்தங்கிப் பூரித்த வங்கங்கொள் பூங்கொடியாள்
தங்கும் இடமெங்கோ தையலூர் நோக்கித் தவிக்கின்றேனே.

(தெ-ரை) தலைவி வாழும் ஊரினை அறியாது மயங்கிய தலைவன் ''காலத்து மழை பொழிந்து வளந்தங்கும் அண்ணா நாட்டில், தலைவியின் வளமார்ந்த ஊரைக் கூட அறியாமல் நான்தவிக்கிறேன்'' என எண்ணி மதிமயங்குகிறுன்.

## கூ. இரவுக்குறி.

இறையோ னிருட்குறி வேண்டல் :

தொகைவுற மேகங்கள் தோன்றிய தன்மையரல் தொல்லையுற்றேம்
பகைவரே யாயினும் பாசங்கொள் எண்ணவைப் போலவென்றும்
நகைதரு நங்கையீர் நாங்களிக் கங்குலும் நல்விருந்தாய்த்
தகைவுறத் தங்கிடின் வந்திடுந் தாழ்வெதோ சாற்றுவீரே.

(தெ-ரை) பகல் நேரத்தில் தலைவியைச் சந்திக்கும் வாய்ப்பு அற்றுப்போனதால், பாங்கியைச் சந்தித்து, இரவு நேரத்திலாவது தலைவியைச் சந்திக்க விரும்புவதைத் தெரிவிக்கிறுன் தன் எண்ணத்தை வெளிப்படையாகக் கூறுமல் ''பாங்கி, எங்கும் மேகங்கள் சூழ்ந்து மழைக்கு அறிகுறியாயின. நான் என்னூர் செல்வது கடினம். பகைவரையும்கூட வரவேற்று அன்புகாட்டும் அண்ணாவின் பண்பையுற்ற நீங்கள் என்னை விருந்தாக ஏற்றுக் கொண்டால் என்ன தாழ்வு வந்துவிடும்'' என்று தன் எண்ணத்தை வெளியிடுகிறுன்.

பாங்கி நெறியின தருமை கூறல் :

மருட்சி எதனுலும் மாறிடா தண்ணவை யென்றும் போற்றும்
புரட்சி நடிகரைப் போன்றநற் சிங்கங்க ளெங்கும்போகுந்
திரட்சியைக் கண்டிடின் தீரரு மஞ்சுவார் தேர்ந்துகொள்வீர்
வெருட்சியே கொண்டிடா வேல்வழி யாரெம்மூர் வேண்டுமுன்னே

(தெ-ரை) தலைவியின் ஊர் பக்கத்திலே உள்ளதாயினும், இரவு நேரத்தில் வருவது இடையூறுகளைத் தரும் என்று கூறவெண்ணிய பாங்கி ''தலைவ, அண்ணவைப் பின் பற்றும் நடிகர்கள் பலர் உளர். ஆயினும் சிலர் அச்சம் காரணமாகக் கொள்கை மாறிவிடுவதுண்டு. என்றுலும் எதற்கும் அஞ்சாத சிங்கம் போன்றவர் புரட்சி நடிகர் M. G. ராமச்சந்திரன் அவர் அண்ணவுடனேயே பணியாற்றுவார். அவர் போன்ற சிங்கங்கள் உம்மூர்க்கும் எம்மூர்க்கும் இடையுள்ள காட்டில் மிகுதி. ஆகவே உமக்கு எம்மூர் அடைதல் இரவில் கடினம்'' என்று கூறுகிறுள்.

## இறையோன் நெறியின் தெளிமை கூறல் :

| | | | | |
|---|---|---|---|---|
| ஓாறி | வேகொள் | ளுயிர்கூட | உத்தமர்க் | கூறிழைக்காப் |
| பேரறி | வாளனு | மண்ணுவின் | நாடுவாழ் | பேதையீர்நீர் |
| பாரறி | யாதவர் | போலவே | பேசுதல் | பான்மைதானே |
| யாரறி | யாதவர் | எம்முடை | யாண்மையை | யாண்டுமின்றே. |

(தெ-ரை) இது கேட்ட தலைவன் ''ஓரறிவுடைய உயிர்கூட, அண்ணு ஆளும் இந்த நாட்டில், பிற உயிர்க்குத் துன்பம் செய்ய அஞ்சும். அப்படி இருக்க, அண்ணு நாட்டு சிங்கங்கள் நல்லவ ஞகிய எனக்குத் துன்பம் செய்யாது. ஒருவேளை ஒன்றிரண்டு தீய விலங்குகள் கொடுமை செயினும் என் ஆற்றலை நீ அறிய மாட் டாயா'' என்று தன் வீரத்தைப் புலப்படுத்துகிறுன்.

## பாங்கியவனுட் டணியியல் விஞதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| நடிகர்கள் | கூட | இலட்சியம் | ஒன்றையே | நாடுமாறு |
| கடமையைக் | கூட்டிய | கண்ணிய | வானண்ணு | நாடுகண்டீர் |
| துடியிடை | யாரும்மூர் | தோற்றிய | பூந்தழை | தொங்கலோடு |
| நடைபயில் | காவெதோ | நத்திய | பூவெதோ | நாடினீரே |

(தெ-ரை) தலைவியைத் தலைவனுடன் கூட்ட ஒருவாறு எண் ணிய தலைவி தலைவனுக்கு சந்திக்குமிடத்தைக் கூறிட விரும்பு கிறுள். ஆனுல் நேரிடையாகக் கூருமல் அதற்குத்தொடர்புடைய சில விஞக்கள் மூலமும் விடைகள் மூலமும் இரவுக் குறியிடத் தைத் தலைவனுக்கு அறிவுறுத்துகிறுள். ''தலைவ, அண்ணு நாட்டு நடிகர்களுக்குக் கூட இலட்சியம் உண்டு. கடமை யுணர்ந்து கண் ணியத்தோடு நடப்பார்கள். உங்கள் ஊர் பெண்கள் எத்தகைய பூ முதலிய அணிகள் அணிந்து எங்கு எவ்வணம் உலாவுவார்கள் என்று சொல்லுவீரா'' என்று வினவுகிறுள்.

## தலைவன் அவனுட் டணியியல் விஞதல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அணிமொழி | கொண்டேயிந் | நாடாளு | மண்ணுநாட் | டாரணங்கே |
| பணிமொழி | யாரிடம் | பைத்டயங் | கொண்டிடாப் | பான்மைதன்னுல் |
| அணியிழை | கேட்கும் | அளவிற்கு | யானென்னு | ரானதில்லை |
| துணிவொடுன் | தோழியர் | தூசணி | பாங்கெலாங் | தோற்றுவாயே |

(தெ-ரை) அதற்கு அவன் ''அழகானமொழி கொண்டே அறிஞர் அண்ணு நாடாளுகிறுர். அவர் ஆளும் நாளில், கண்ட பெண்களை யும் பார்க்கும் பழக்கம் என்னிடம் கிடையாது. அணிபணி முதலி யன கேட்கும் அளவுக்கு எப்பெண்ணிடமும் நான் பழகியதுமில்லை எம்முரில். உன் தோழிக்குப் பிடித்த ஆடை ஆபரணங்களைப்பற்றி வேண்டுமானுல் கூறு அறிந்து கொள்கிறேன்'' என்று பதில் தருகிறுன்.

### தன்னுட் டணியியல் பாங்கி சாற்றல் :

மாந்தரார் போற்றும் மாத்தமிழ் வேந்தன மண்ணுநாட்டில்
மாந்தளிர் மேனியர் மாலையில் மாந்தழை யாடையோடு
காந்தளம் போதும் களிறளி முத்தும் கமழுகின்ற
சாந்தமும் தோர்ந்தணிந் தாடுவர் சண்பகச் சோலைசார்ந்தே

(தெ-ரை) பாங்கியின் குறிப்பைத் தலைவன் உணர்ந்துள்ளான் என்பதை, அவன் மறுமொழி மூலம் உணர்ந்த பாங்கி, சந்திக்கும் இடத்தைச் சுட்டுவதுபோல ''தலைவ, தமிழ் மொழிக்கும் அண்ணு நாட்டில், காந்தள் முதலியன தழைத்தோங்கும் சண் பகச் சோலை யொன்றுண்டு. அங்கு தான் மாலை நேரத்தில் எங்களூர் மாதர்கள் விளையாடி மகிழ்வர்'' என்று கூறி இடத்தை குறிப்பாகப் புலப்படுத்துகிறுள்.

### இறைவிக்கு இறையோன் குறையறிவுறுத்தல் :

பகைத்தவர் தம்மையும் பாராட்டிச் சீராட்டும் பான்மையுற்ற
நகைச்சுவை மன்னனும் நாடியே வாழ்த்திய வண்ணுநாட்டில்
திகைத்திடாத் தன்மைகொள் தீரருன் காதல ருன்னைத்தேடி
நகைத்திட நண்ணுவர் நங்கைநீ பெண்ணுவாய் நள்ளிரவே

(தெ-ரை) தலைவனுக்கு, சந்திக்கவேண்டிய இடத்தைப் புலப் படுத்திய பின்னர் தலைவியைச் சந்திக்கிறுள் பாங்கி. ''தலைவி நகைச்சுவை மன்னனுக விளங்கிய N. S. கிருஷ்ணன், அண்ணு வைப் பாராட்டி அடிக்கடி மகிழ்வார். இவ்வணம் மகிழ்ச்சி பொங்கும் இந்நாட்டில் உன் தலைவர் மகிழாமல் வாழலாமா. இன்று உன்னைச் சந்திக்க உன்னவர் எண்ணுகிறுர்'' என்று தலைவியிடம் அறிவுறுத்துகிறுள்.

### நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல் :

பெண்புத்தி பின்புத்தி என்னும் பிழையார் பழமொழியும்
எண்பற்றி வந்ததிவ் வேந்திழை போன்றுரின் ஏழைமைதான்
பண்பற்ற வேங்கைகள் பாதையுள் ஊண்பார்க்கும் வேளைதன்னில்
விண்பெற்ற பேறுற்ற வண்ணுவெற் பென்கண்ணுர் வேண்டினளே

(தெ-ரை) அச்சம் காரணமாக, தலைவி, பாங்கியுடன் உடன் படாது, ''இவ்விராவேளையில் நீ வரச்சொல்லலாமா? இரை தேடும் புலிகள் இருட்டு வழியில் பதுங்கி இருக்குமே. தலைவ னுக்கு ஏதாவது நேர்ந்தால் என் செய்வேன். இதை நீயறியாதது ஏன்? உன் போன்ற நங்கையரும் உலகில் இருப்பதால்தான் ''பெண் புத்தி பின் புத்தி'' என்னும் தவருனதொரு பழமொழி உண்டாயிற்றே'' என்று உரைக்கிருள். (எண்பற்றி=எண்ணத் தில் பற்றி)

### நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல் :

தமிழவேள் போன்ற தகைசான்ற மேலோர் தமையழைப்பின்
அமிழ்தனை யண்ணா வதனையும் ஏற்கா தமைவதுண்டோ
இமிழ்கடல் சூழ்ந்திடு மிப்புவி தன்னிலே என்னையாண்டு
கமழ்ந்திடச் சூழ்ந்தவர் காத்திட வெண்ணிய காரிகையே.

(தெ-ரை) அப்படிக் கூறினாலும், தலைவன் மீதுள்ள அன்பால், "பாங்கி, தமிழவேள் என்று பாராட்டப்பெறும் நீதிக் கட்சித் தலைவர் P. T. இராசன் அவர்களை நீ அறிவாய். அவர் அழைப்பின், அண்ணா அவர்கள் அவ்வழைப்பை ஏற்க மறுக்க முடியுமா? என் தோழியாகிய நீ அழைத்தால் நான் ஏற்காமல் இருக்க முடியுமா?" என்று, தன் உடன்பாட்டை உணர்த்துகிறாள்.

### நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல் :

ஆச்சாரி யார்முதல் காமரா சர்வரை அண்ணாநல்ல
பேச்சாளி நாட்டாளி பாட்டாளி யென்றெல்லாம் பேசுமாறுன்
நாச்சாரைப் போற்றியுன் நாட்டத்தைக் கூறினான் தாழ்ந்திரந்தேன்
வீச்சாளும் வேல்விழி யினைமரா வெற்பிதை வேண்டுதற்கே.

(தெ-ரை) தலைவியின் உடன்பாட்டைக்கூறத் தலைவனைச் சந்திக்கிறாள் பாங்கி. தான் எத்துணைப் பாடுபட்டுத் தலைவியை இணங்கவைக்க வேண்டியதாயிற்று. என்பதைப் புலப்படுத்துவதற்காக "தலைவ, உன் விருப்பத்திற்கு ஏற்பத் தலைவியை இணங்கவைக்க நான் பெரும் பாடுபட்டேன். இராசகோபாலாச்சாரியார் முதல் காமராசர் வரையுள்ள பல தலைவர்களும் அண்ணாவை 'நல்ல பேச்சாளி, உழைப்பாளி, நாட்டையாளும் திறனுள்ளவர்' என்று பாராட்டுவது போல, நானும் உன் தேவியைப் பாராட்டி அவளை வணங்கிக் கேட்டுக்கொண்டேன்." என்று தலைவி இரவில் தலைவனைச் சந்திக்க உடன்பட்டதைக் கூறுகிறாள்.

### குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்;

காரிரு ளாயினும் கன்னியெம் மனனாய் கருத்தையள்ளும்
ஓரிர வென்னுமோர் அண்ணா ஒப்பிலா நாடகத்தைப்
பாரறி வாளர்கள் பார்த்துப்பின் பாராட்டிப் போவதைநீ
பாரெனக் கூறியும் பாய்விட் டகலாத பான்மையென்னே.

(தெ-ரை) "தலைவனை அக்குறித்த இடத்திலேயே நிற்கச்செய்துவிட்டு, வீடு திரும்பிய பாங்கி, தாயின் தூக்கத்தை அறிய முற்படுகிறாள். தாயைக் கூப்பிட்டுச் சில வார்த்தைகள் கூறியும் அவள் பதில் பேசாவிட்டால் தூங்குகின்றாள் என்பதுணர்ந்து தலைவியை தலைவனிடம் அழைத்துச் செல்வாள். அதற்காக "தாயே, இந்த நல்ல இருட்டிலும், அண்ணாவின் ஓர் இரவு எனும் நாடகத்தைப் பார்த்துவிட்டு, அதைப் பாராட்டிப் பேசிச் செல்லும் வார்த்தைகள் உன் காதில் விழவில்லையா, அதைவந்து பார்." என்று கூறியும் தாய் எழாதது அறிந்து நல்ல தூக்கமென்று உணர்கிறாள்.

## இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல் :

நள்ளிர வாயினும் அண்ணாவின் பேச்சுக்காய் நாட்டுமக்கள்
கள்ளினை எண்ணரியோ ரென்னவே காத்திடும் காட்சிபோல
ஒள்ளிய பண்பினர் உன்னுடைப் பொன்னெழி லுண்டுபோக
உள்ளியே வந்துளார் நம்மனைப் பின்புறத் தொண்டொடியே

(தெ-ரை) தாயின் தூக்கமுணர்ந்த பாங்கி, தலைவியை நோக்கி, ''அண்ணாவின் பேச்சினைக் கேட்க, நள்ளிரவு வந்தாலும் காத்து நிற்கும் மக்களைப்போல், உன் அழகை உண்ண, நம் மனைக்குப் பின்புறமுள்ள தோட்டத்தே உன் தலைவர் காத்திருக்கிறார்'' என்று கூறுகிறாள்.

## தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுசேறல்:

இராசா சர் முத்தைய செட்டியார் போன்றோரு மேற்றெழுந்து
பராவுதல் செய்துநம் மண்ணாவைப் பார்த்தழைத் தார்தல்போல
விராவுதல் எண்ணிய வேட்கையால் வந்தவுன் வேந்தர்தம்மை
இராவிதில் நாமும் எதிர்கொளச் செல்லுவோ மேந்திழையே.

(தெ-ரை) ''அண்ணா வருகிறார் என்பதறிந்தால், ராஜா சர். முத்தையா செட்டியார் போன்ற பழம்பெரும் நீதிக்கட்சித் தலைவர்களும்கூட, எதிர்சென்று வணங்கி வரவேற்று மகிழ்தல்போல உனக்காக வந்திருக்கும் தலைவரை நாம் எதிர்கொண்டு வரவேற்போம். வருக'' எனத் தலைவியை அக்குறியிடத்துக்குப் பாங்கி அழைத்துச் செல்லுகிறாள்.

## குறியுய்த் தகறல் :

மூலைக்கோர் பூஞ்சோலை மூளச்செய் தண்ணாயின் றாளும்போது
சோலைக்குஞ் செல்லாது சோர்வுற்று யென்றாலுஞ் சொர்ணக்கொம்பே
கோலக்கா இங்குள்ள கொய்யாப்பூ ஏதேனுங் கொண்டுவாரேன்
மாலைக்கோர் கொலங்கொள் மானேநீ சற்றேநில் மன்னிப்பாயே

(தெ-ரை) தலைவியை அங்கு நிற்க வைத்துவிட்டுத் தான் பிரிய எண்ணிய பாங்கி பொய்யாக ஒரு காரணம் கற்பித்து ''தலைவி, நீ சில நாட்களாக எங்கும் செல்வதில்லை. அண்ணா ஆட்சியில் எங்கு பார்த்தாலும் பூங்காக்கள் மலிந்துள்ளன. நீ இங்கேயே நில். நான் ஏதாவது பூப்பறித்து வருகறேன்'' என்று கூறிவிட்டுப் போகிறாள்.

## வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல் :

திருட்டுப் பயமின்றித் தோர்ந்தாளு மண்ணாவின் நாட்டிலெங்கும்
இருட்டுப் பொழுதிலும் ஏந்திழை யெண்ணியும் யாருமென்றும்
மருட்டும் நிலையிலா மாண்பினு லன்றோயென் மானேயானுன்
தெருட்டும் விழியொடு தேனூர் மொழியையுந் தோர்ந்ததுவே.

(தெ-ரை) தலைவியைக் கண்ட தலைவன் ''இந்நாட்டை அறிஞர் அண்ணா ஆளுவதால் திருட்டுப்பயம் எதுவும் இல்லை. தனியே வரும் பெண்ணிடம்கூட வம்பு பேசுவோர் கிடையாது. அதனால் தான், நீ தனியே நிற்கவும் நான் உன்னைக்கண்டு மகிழவும் முடிந்தது'' என்கிறான்.

பெருமகள் ஆற்றினதருமை நினைந்திரங்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தமிழர் | புரட்சி | குழந்தைத் | தனமென்ற | நேருவிற்குத் |
| தமிழர் | தலைவரே | றண்ணாதன் | றுணை | தலைமேற்கொண்டு |
| தமிழர் | பலரும் | கருப்புக் | கொடிகண்ட | தன்மைபோன்று |
| தமிழர் | வனமெலாந் | தாவிருட் | போழ்திலோ | தாங்களிங்கே |

(தெ-ரை) தலைவன் இருளில் வந்ததை எண்ணிய தலைவி ''தாங்கள், இந்த நிறைந்த இருளில் எப்படி வந்தீர்கள். தமிழர்களின் புரட்சிப் போராகிய அறப்போரை, பண்டித நேரு அவர்கள், குழந்தைத் தனம் என்று குறை கூறியதை எதிர்த்து அவர் சென்னை வந்தபோது அவருக்குத் தமிழர்கள் கருப்புக்கொடிகளை வானளாவ உயர்த்திக் காட்டினர். அக் கொடிகள், சூரியனையும் மறைத்து நாட்டை இருளில் ஆழ்த்தியது. அத்தகைய இருள் இன்றும் இருந்தது. இவ்விருளில் வந்தது யாங்ஙனம்'' என வினவுகிறாள்.

புரவலன் தேற்றல்

| | | | | |
|---|---|---|---|---|
| என்னுடை | வேலெனும் | நின்னுடைக் | கண்களும் | நெற்றியிந்தும் |
| மின்னிடை | யாவுமே | என்மனக் | கண்களில் | மேவிநின்று |
| அன்புடை | யண்ணாவின் | சொற்கள் | அறியாமை | நீக்கல்போல |
| வன்புடை | யிவ்விருள் | நீக்க | வரப்பெற்றேன் | வஞ்சியானே. |

(தெ-ரை) ''தலைவி, என் வேலைப்போன்ற உன் கண்களும், சந்திரனைப் போன்ற உன் நெற்றியும், மின்னலைப்போன்ற உன் இடுப்பும் எப்போழ்தும் என் மனக்கண்களில் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அவை வழியில் வெளிச்சம் தந்து, அண்ணாவின் சொற்கள் அறியாமையாகிய இருளை நீக்குதல் போல, இவ்விருட்டை நீக்கின. யானும் வந்து சேர்ந்தேன்'' என்று அவளைத் தேற்றுகிறான்.

புணர்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அறிவுறு | கொள்கையும் | அண்ணாவின் | சொல்லும் | அளவுறல்போல் |
| செறிவுறு | கொங்கையும் | செங்கையுங் | கோடலைச் | செய்ததாலும் |
| நறவுறு | செவ்விதழ் | நான்குமே | சேர்ந்து | நடந்ததாலும் |
| பெறவரு | மின்பமே | பெற்றோம் | பிரிந்திடல் | பேதைமையே |

(தெ-ரை) அண்ணாவின் சொற்களில் அறிவுக் கொள்கைகள் சேர்ந்து ஒன்றான தன்மையைப் போல, இருவரின் அங்கங்களும் ஒன்றோடொன்று பொருந்தியமை யெண்ணி, 'இனிப்பிரியோம்'' என்று தலைவன் எண்ணுகிறான்.

புகழ்தல் :

எப்பா லவருமே எண்ணித் துதிபாடு மேற்றங்கொண்ட
அப்பா துரையுமே அண்ணா துரையையே அண்ணாக
ஒப்பா வயதென ஓர்கிலா தேதுடன் ஓர்ந்துகொண்டார்
தப்பா உனையென் தலைவியாய் நான்கொண்ட தில்லையன்றே.

(தெ-ரை) தலைவியிடம் இன்பம் நுகர்ந்த தலைவன் ''நீ தான் எனக்குத் தலைவி. அப்படி அழைப்பதில் தவறேதுமிருக்க நியாய மில்லை நீ என்னைவிட இளையவளாயினும் இன்பம் தருவதில் எனக்குச் சிறந்தவள். திரு. கா. அப்பாத்துரையார் வயதான மூதறிஞர். அவர் தனக்கும் இளையவராகிய அண்ணாவைத் தகுதி கருதி அண்ணா என்றே அழைப்பார். ஆக நான் உன்னை என் தலை வியாகக் கருதுதல் ஒன்றும் குறையன்று'' எனத் தலைவியைப் புகழ்கிறான்.

இறைமக ளிறைவனைக் குறிவரல் விலக்கல் :

அரசில் மிளிர வணைவர் மனமு மலைவதேபோல்
அரவும் களிறும் அரியும் புலியு மலையுமிந்த
இரவில் வனத்தே வரநீ இசையின் எனதகத்தே
விரவும் பயத்தை விரட்டலில் அண்ணாவும் வென்றிட்டாரே.

(தெ-ரை) ''தலைவ, அரசியலரங்கில் ஒளிவிட, பலருடைய மன மும் அப்படியும் இப்படியும் அலைந்து திரிதல்போல, இக்காட்டு வழியே, பாம்பு, யானை, சிங்கம், புலி போன்றவை அலைந்து கொண்டிருக்கும். இரவில் தாங்கள் வருவது எனக்கு நிறைந்த அச்சம் தருகிறது. எல்லாருடைய அச்சத்தையும் நீக்கும் அறிஞர் அண்ணாவாலும்கூட என் அச்சத்தை நீக்க முடியாது'' என்றுகூறி, இரவுக் குறிக்குத் தலைவன் வருவதைத் தலைவி விலக்குகிறாள்.

இறைவியை இல்வயின் விடுத்தல் :

சொல்வல ரண்ணாவின் சொற்பொழி வானபின் சோதார்தம்
இல்லதை யேகுவா ரென்னவே யென்னுயி ரேந்திழைநீ
கல்லலை பாதையுன் கால்சிவக் காமலிக் காவகன்று
செல்லுவா யுன்மனை யன்னையர் தேடுமுன் செல்வியோடே.

(தெ-ரை) "அண்ணாவின் சொற்பொழிவைக் கேட்டு மகிழ்ந்து தங்கள் இல்லம் ஏகும் தம்பியர் போல, நீயும் உன் தோழிமார் களுடன், உங்கள் அன்னையர் தேடுமுன் செல்வீர்களாக" என்று தலைவன் தலைவியை விடுக்கிறான். (அண்ணாவின் பேச்சைக் கேட்க அவர் தம்பியர் முன்பெல்லாம் வீட்டுக்குத் தெரியாமல் வந்து போவதுமுண்டு).

இறைவியை யெய்திப் பாங்கி கையுறை காட்டல் :

கல்யாண சுந்தரர் போன்ற கவின்தமிழ் வல்லுநரும்
பல்லாண்டு சொல்லியே பாராட்டும் பேறுற்ற வண்ணாசொன்ன
பல்வேறு பூக்களும் பார்த்தாய்ந்து வந்துளேன் பாவையன்னாய்
செல்வோமா யில்லினி சேவல்சூழ்ந் தல்லிணைச் சீறுமுன்னே.

(தெ-ரை) தலைவியைத் தனியே விட்டுச்சென்ற பாங்கி, பூக்கள் கொய்ய என்று கூறிவிட்டு அண்ணாவின் கருத்துக்களாகிய பூக்களைக் கொய்யச் சென்று திரும்பி வந்து "தலைவி, திரு. வி. க. போன்ற பெரும் தமிழறிஞர்களாலும் பாராட்டப்பெறும் அண்ணா சொன்ன பூக்களைப் பறிக்கச் சென்றுவந்தேன், இவ்விருளை சேவல் சூழ்ந்து கூவி நீக்குமுன் நாம் வீடுசென்று விட வேண்டும்" என்று கூறி அண்ணாவின் நூல்களைக் காட்டுகிறாள்.

இற்கொண் டேகல் :

இனித்தமிழ் காத்திட வண்ணா இருக்கின்றா ரிங்கேயென்று
தனித்தமிழ் காத்த மறைமலை சாற்றிய தன்மைசொல்வேன்
கனித்தமிழ் நின்னையுன் காதலர் காப்பார் கலக்கமினற்
இனித்தநற் சிந்தையோ டேகுவாய் நம்மனை யேந்திழையே.

(தெ-ரை) வீட்டுக்குச் செல்லும் தலைவியிடம் "தனித்தமிழ் காத்த மறைமலை அடிகள், 'இனி தமிழ் காக்க அண்ணா இருக்கிறார்; கவலையில்லை' என்று கூறுயது போல "இனி உன்னைக் காக்க, உன் தலைவர் உள்ளார். கவலைப்படாதே" என்று நான் கூறுகிறேன்" என்று கூறி தலைவியை இல்லத்திற் சேர்க்கிறாள்.

பின்சென் றிறைவனை வரவு விலக்கல் :

இரவும் பகலா யிருக்கும் படியாயிச் சாரலெங்கும்
விரவும் பலமின் விளக்கா லொளிசெய்த வண்ணாநாட்டில்
பரவும் அலரால் பகலும் உறங்காநும் பாவைகாண
வரவும் இயலா வலகநீ ரிருப்பதால வாடுவேனே.

(தெ-ரை) தலைவியை இல்லத்தில் சேர்ப்பித்துவிட்டு, மீண்டும் தலைவனிடம் திரும்பி வந்து, "அண்ணாவின் ஆட்சியில், வழிநெடுக மின் விளக்குள் போடப்பட்டு இரவு நேரம்கூட பகல் போலக் காட்சியளிக்கிறது. பகலில் பக்கத்துள்ளோர் அவர் தூற்றிக் கொண்டுள்ளனர். இனி நீ இரவிலும் தலைவியைச் சந்திக்க முடியாமற் போவதற்கு வருந்துகிறேன்" என்று கூறி தலைவனின் வரவை விலக்குகிறாள்.

## பெருமகன் மயங்கல் :

கதம்பமாய் யானுமுன் கன்னியும் ஆனதைக் கண்டபின்பும்
சுதந்தரம் வந்ததைச் சொல்லிக் களித்திடு மண்ணாநாட்டில்
இதந்தரா இந்தியை எல்லாரு மேற்க இயம்பலேபோல்
பதந்தனில் நஞ்சினைப் பாய்ச்சுதல் நேர்மையோ பாவையின்றே.

(தெ-ரை) தோழியின் இச்சொற்கேட்ட தலைவன் "பாங்கி, உன் தோழியும் நானும் கதம்பமானதை நீ கண்ட பிறகும் இவ் வணம் கூறுவது நியாயமா? சுதந்தரம் நமக்குக் கிடைத்தமை குறித்து அண்ணா மகிழ்கிறார். ஆனால் அதே நேரத்தில் இந்தி மொழியை ஏற்க மறுக்கிறார். எனினும் உணவில், விஷத்தைக் கலப்பதுபோல, சுதந்தரத் தமிழ் நாட்டில் இந்தியைத் திணிக் கிறார்கள். அவர்கள் பேசுவதுபோல நீயும் பேசலாமா" என்று கூறி மயங்குகிறான்.

## தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தல் ;

எப்பகை வர்க்குமே வஞ்சா யியல்புடை யண்ணாநாட்டில்
ஒப்புயர் வற்றநம் மொண்டொடி நும்நல மோர்ந்து வாழக்
கப்புயர் காட்டிடைக் கவ்விய கங்குலில் காளையன்னீர்
செப்புவீர் ஓர்குறி செவ்வழி யாய்நும்மூர் சேர்ந்ததற்கே

(தெ-ரை) "தலைவ, அண்ணா எப்பகைவர்க்குமே அஞ்சாமல் நாட்டை ஆளுகிறார். அவர்போல் நீரும் அஞ்சாமல் இருக்கிறீர் என்பதற்கு மகிழ நினைந்தாலும், நீர் காட்டு வழியில், இருளில் வருவது தலைவிக்குத் துன்பம் தருகிறது. நீர் ஊர் போய்ச் சேர்ந் ததற்கு ஏதேனும் ஓர் அடையாளம் செய்யவேண்டும்" என்று தலைமகளின் துயரைக்கூறி, தலைமகனைப் போகவிடுக்கிறாள்.

## திருமகட் புணர்ந்தவன் சேறல் :

வஞ்சம் கலவாத வாய்மை யுளங்கொண்ட வண்ணாநாட்டில்
நெஞ்சம் குடிவந்த நேரிழை யாளென் நினைவிலொன்றித்
தஞ்சம் தருவாள் தழையிருள் நீக்குவாள் தையல்நீயும்
கொஞ்சம் கவலையும் கொள்ளாது செல்லுன் குடிலிடத்தே

(தெ-ரை) "தோழி, அண்ணா நாட்டில், வஞ்சகம் கொள்வோர் யாரும் இருக்கமாட்டார்கள். என்னைப்பற்றிக் கவலை வேண்டாம் தலைவியை மனதில் எண்ணிக்கொண்டே நான் சென்றால் அவள் ஒளி எனக்கு வெளிச்சம் தரும்". என்று கூறிப் பிரிகிறான்.

# கச. இரவுக்குறி யிடையீடு அல்லகுறி.

### இறைவிக்கு இகுளை இறை வரவுணர்த்தல் :

திராவிட நாட்டினர் அண்ணவை நாடாளத் தேர்ந்ததெண்ணி
அராவினைக் கண்டவர் போல்சிலர் அரற்றும் பொருவொலிபோல்
குராநிறைச் சாரலில் கோதையுன் தூக்கம் குலையுமாறு
இராவிதில் யாரோ ஒலியொன் றெழுப்பிய தன்மையென்னே

(தெ-ரை) எட்டாம் நாள் இரவிலும் தலைவன் வருவதாகவும், வந்தால் மரம் அசைத்தல் பறவைகளை ஒட்டுதல் போன்ற ஏதாவது ஒரு அடையாளம் செய்வ தாகவும் கூறியிருந்தான். அன்றிரவில், தோட்டப்பக்கத்தே ஏதோ ஒரு ஒலி உண்டாகிறது அது கேட்ட பாங்கி, ''நாட்டுமக்கள் அண்ணவை நாடாளத் தேர்ந்தமைக்காக, சிலர் பொருமையால் கத்துவது போன்ற ஓர் ஒலி குராமரங்கள் நிறைந்த தோட்டத்தில் உண்டாகி உன் தூக்கத்தைக் கெடுக்கின்றது'' என்று தலைவிக்குச் சொல்லுவதன் மூலம், தலைவன் வந்துளான் என்று அறிவுறுத்துகிறான்.

### தான் குறிமருண்டமை தலைவி யவட்குரைத்தல் :

நேர்ப்பாட்டைப் போகாமல் நீதிக்கு மாருக நேர்மையின்றி
ஆர்ப்பாட்டப் போர்ப்பாட்டா லண்ணவை வீழ்த்துதற் கொண்ணினார்போல்
கார்க் காட்டுப் புள்ளார்ப்பைக் காதலர் காண்குறி யென்றுகான
ஒர்ப்பட்டுப் போய்வாட்டத் தோடின்றி மீண்டேன்யர ஞெண்டொடியே

(தெ-ரை) தலைவி குறித்த இடத்துக்குச் சென்றுள். நீண்ட நேரம் நின்றும் தலைவனைக் காணேம். திரும்பி வந்துவிட்டாள். காலையில் பாங்கியிடம் ''தோட்டத்துப்பறவைகள் இயற்கையாக ஓலமிட்டதைத் தலைவரின் அழைப்பு என எண்ணி ஏமாந்தேன். நேர்மைக்கு மாருன பாதையில் சென்று எவறும் ஆர்பாட்டம் நடத்தியே அண்ணவை வீழ்த்த சில எண்ணி ஏமாந்துவாடுவது போல் நானும் வாடினேன்'' என்று கூறி தான் குறி மருண்டா மையைக் கூறுகிறுள்.

### பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம் பல் :

இரவிதில் தான்தரும் இன்னலை ஓர்கணம் எண்ணிடாமல்
அரசியுன் காதலை அண்ணலுந் தோரா தமைவதென்ருல்
அரசியற் காழ்ப்பினல் அண்ண கருத்தினைக் காணுர்போல
உரமிலர் அல்லரே உற்றது வேறெதோ ஓர்ந்திடேனே.

(தெ-ரை) இது கேட்ட தோழி, ''எவ்வளவு இன்னல்களுக் கிடையே நீ அவ்விடம் செல்ல வேண்டியிருக்கிறது என்பதை அவர் உணரவேண்டும். அரசியல் பொருமையால் அண்ணவின் கருத்துக்களைக் காணுதவர் போல நெஞ்சுரம் அற்றவர் சிலர் உன் தலைவர். இருந்தும் ஏதோ தவறு நடந்திருக்கிறது''. என்று தலைவன் அவ்விடம் வராமல் இருந்து விட்டானே என்று ஐயப் படுகிறுள்.

## தலைமகன் புலந்து போதல் :

தோற்று றெனினும் துதிப்பாடிப் போற்றுமல் தூற்றுகின்ற
மாற்று றெனினும் மதிப்புதந் தாட்கொளு மண்ணுநாட்டில்
ஆற்று உளத்தோடிவ் வல்லுழன் றேவந்து மாரணங்காள்
ஏற்று ளிலேயேல் இனியெங்கு யான்சென்று வாழுவதே.

(தெ-ரை) தான் குறியிட்டபடி, குறியிடத்துக்கு வந்து, ஒலி செய்து அறிவித்தும் தலைவி வாராமை யெண்ணி வருந்துகிறான். தலைவி, வேறிடம் வந்து புலம்பி சென்றதை அவன் அறியான். பகைவரையும்கூட ஆட்கொண்டு, தன்னைத் தூற்றுவோருக்கும் மதிப்பு தரும் அண்ணு நாட்டில், மிகுந்த இடையூறுகளையெல் லாம் தாண்டி தலைவியைக் காண வந்தும், தன்னை காணத்தலைவி வாராமை எண்ணி வருந்தி ஊர்க்குத் திரும்புகிறான்.

## புலர்ந்தபின் வறுங்களந் தலைவிகண் டிரங்கல் :

செங்கனி வாயொடு சீர்முகைக் கொங்கையும் செம்மை சேர்ந்த
அங்கமே தங்கமாய் ஆர்ந்துள்ள தாழையா மாரணங்கே
செங்கழு நீர்மாலை சீர்பெற்று நீயிங்கே சேர்ந்திருத்தல்
இங்குநம் மண்ணுவின் ஏர்முனை யேற்றமோ சாற்றுவாயே.

(தெ-ரை) பொழுது விடிந்ததும், பாங்கியோடு தலைவி குறி யிடம் வருகிறாள். அங்கு ஓர் தாழம்பூவில் செங்கழுநீர் மலர் மாலை சூட்டப்பட்டிருப்பதைப் பார்த்து வருந்துகிறாள். மலர் மலர்ந்துள்ளமையும், அதன் நிறமும் சேர்ந்து அத்தாழையை ஒரு பெண்போலக் கருதுகிறாள் தலைவி. தான் வராததால், இப் பூவிற்குத் தலைவன் சூட்டிச் சென்ற மாலைதான் அது என்பதைக் குறிப்பாலறிந்த தலைவி, ''அண்ணு நாட்டின் ஏர்முனைச் சிறப்பு காரணமாக, தாழையில் செங்கழுநீர் மாலை வளர்ந்ததுவோ'' என்று எண்ணி தலைவனுக்காக வருந்துகிறாள்.

## தலைவி தனதுணைக் குரைத்தல் :

கருவிலுங் கண்ணியங் காக்குமென் காதலர் காணவந்த
மனோநிலை யென்ணுமல் மாதுநீ யண்ணற்கே மாசுகண்டாய்
மனோகரன் என்னும் மதிமிக்க தம்பிசூழ் முண்ணுநாட்டில்
எனோவுன தெண்ணமித் தாழையுள் சூட்டிய மாலையிண்டே.

(தெ-ரை) ''மற்றவர் மனநிலையுணர்ந்து தெளிவாகப் பேசும் ஆற்றலுடைய திரு. கி. மனோகரனைத் தன்தம்பியருள் ஒருவராக பெற்ற அண்ணு நாட்டில் வாழ்ந்தும் என் தலைவரின் மனநிலை அறியாமல் நீபேசிவிட்டாய், அவர் சிறந்த கண்ணியவான். தாழையின் மீதுள்ள இம்மலர் மாலையைப் பார். அவர் வந்து காத்துத் திரும்பியதைக் கூறும்'' என்று தலைவி தன் தோழிக்கு கூறுகிறாள்.

### தலைமகள் அவலம் பாங்கி தணித்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தூய்மையே | கொள்ளும் | துடியிடை | யுன்னைத் | தொடர்புகொண்டு |
| தாய்மையே | கொல்லும் | தகைமையோ | கொள்வார் | தலைவரின்று |
| வாய்மையே | வெல்லும் | வகைசொல்லி | நாடாளு | மண்ணைநாட்டில் |
| நோய்மையுஞ் | செய்வரோ | நுண்ணறி | வுள்ளவர் | கொங்கிடாயே |

*(தெ-ரை) "வாய்மையைத் துணையாகக் கொண்டு நாடாளும் அண்ணை நாட்டில், தூய்மையுடைய உன்னுடன் தொடர்பு கொண்ட தலைவர் பெண்களுக்கு இன்னல் தரும் செயல்களைச் செய்யமாட்டார் என்பது அறிந்து நீ வருந்தாமலிரு" என்று கூறித் தலைவியின் வருத்தத்தைப் பாங்கி தணிக்கிறாள்.*

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தீந்தமிழ் | பாவினும் | தேன்மிகுஞ் | சொற்களைத் | தேர்ந்துரைக்கும் |
| வேந்தனு | மண்ணைவை | வெல்லுதற் | கெண்ணியே | வெந்துநொந்த |
| மாந்தரை | போலநம் | மாதவள் | நேற்றிர | வெல்லாமிங்கே |
| போந்துநைந் | தார்ந்தனள் | புன்னிய | வானும | தூருமென்னே |

*(தெ-ரை) ஒன்பதாம் நாள் பகலில் தலைவன் அவ்விடம் வருகிறான். அவனைக்கண்ட தோழி "அண்ணைவை வெல்லவெண்ணி இறுதியில் தோற்றவர் துன்பம் உறுதலைப்போல, நேற்றிரவெல்லாம் உனக்காகக் காத்திருந்து துன்பமுற்றாள் தலைவி. புண்ணியவானே, உமது ஊரையாவது எங்களுக்குக் கூறும்" என்று கூறி, தலைவன் குறியிடம் தவறியதைச் சுட்டுகிறாள்.*

### இறைவியே லிறைவன் குறிபிழைப் பேற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தம்பிய | ரண்ணைவைத் | தம்மனத் | தெண்ணத் | தவறினும் |
| கொம்பிவ | ளொண்ணிடக் | கோதையே | கொஞ்சமும் | யான்தவறேன் |
| கம்பனும் | விண்டிடாக் | காரிகை | யாரெழல் | காணபோமென்று |
| நம்பியே | னென்னலின் | நள்ளிர | வேவந்து | நாடினேனே |

*(தெ-ரை) "பாங்கி, அண்ணைவ யெண்ண அவர் தம்பி ஒருவர் தவறினும் தலைவிைய எண்ண யான் தவறுவேனோ? கம்பன் போன்ற புலவராலும் வருணிக்க முடியாத அழகுடைய நங்கையைக் காண நான் நேற்று இரவெல்லாம் காத்திருந்து வறிதே திரும்பினேன்" என்று தலைவன் பாங்கியிடம் தலைவி குறிதவறியதைப் புலப்படுத்துகிறான்.*

### அவள்குறி மருண்டமை யவளவற் கியம்பல் :

| | | | | |
|---|---|---|---|---|
| எங்கணும் | செந்தமிழ்க் | கேற்ற | சேர்க்கின்ற | வண்ணைநாவில் |
| பொங்கிடும் | சொற்களின் | வாய்மை | புரியாமல் | வாட்டங்கொண்டு |
| மங்கிடும் | கட்சிக்த | மாறினோர் | போலநம் | மங்கையிங்கே |
| தங்கினாள் | நும்குறி | தப்பினாள் | துன்பமும் | தாங்கினளே |

(தெ-ரை) ''தலைவ, அண்ணாவின் கருத்தை உணராமல், வேறு கட்சிக்கு மாறியவர் பின்னர் வருந்துதல் போல, தலைவி குறியிடம் உணராமல் வேறிடம் சேர்ந்திருந்து காத்து வருந்தித் திரும்பினாள்'' என்று, தோழி, தலைவி குறிமருண்டமையைத் தெரிவிக்கிறாள்.

அவன்மொழிக் கொடுமை சென்றவட் கியம்பல்:

வண்மை வளங்கண்டு வாய்மை வழிசென்று வாழவைக்கும்
உண்மை உளங்கொண்ட அண்ணாவை உள்ளத்துள் ளெண்ணாதார்போல்
திண்மை உருக்கொண்ட தீரர் உணைத்தேடித் தேர்ந்திடாமல்
கண்மை இருள்தங்கிக் காத்துத் திரும்பினார் காவினின்றே.

(தெ-ரை) ''அண்ணா எண்ணாதவர் வாடுதல் போல, உன் தலைவரும் நேற்று உன்னைக்காணாது வாடியதாகக் கூறினார்'' என்று தலைவன் கூறியதைத் தலைவிக்குக் கூறுகிறாள் தோழி.

என்பிழைப் பன்றென்று இறைவி நோதல்:

கழகத்துக் கூட்டத்தே கைதட்டல் ஏதேனும் கேட்கநேர்ந்தால்
அழகார்ந்த சொல்வேந்த ரண்ணாதான் வந்தாரென் றார்ப்பரிக்கும்
கழகத்தார் போல்நேற்றிக் காற்றோசை கேட்டாலும் கங்குலக்கா
பழகத்தான் வந்திட்டா ரென்றெண்ணி பார்த்துப் பார்த் தேமாந்தேனே.

(தெ-ரை) ''பொதுக்கூட்டம் ஒன்றில் அண்ணா பேசுவதாக இருக்கும். அண்ணா சில வேளை கூட்டத்திற்கு நேரம் கழித்து வருவதுண்டு. மற்றவர் பேசிக்கொண்டிருக்கையில் ஏதேனும் கைதட்டல் கேட்டால் பின்னால் தூரத்தே இருப்பவர்கள் அண்ணாதான் வந்துவிட்டார் போலும் அதனால்தான் கை தட்டல் கேட்கிறது என்று போய் பார்த்து சில வேளை ஏமாறுவதுண்டு. அதுபோல, ஏதோ காற்றினால் கேட்ட ஓசையை யெண்ணி குறியிடம் தப்பிப்போய் நேற்று நான் ஏமாந்தேன்'' என்று தலைவி கூறுகிறாள்.

# வருந்தொழிற் கருமை.

தாய் துஞ்சாமை :

நாடாளும் திட்டங்கள் நாளும் பலதீட்டி நன்மைசெய்ய
பாடாளும் அண்ணாதான் பாதி யிராவென்றும் பார்த்திடாமல்
மூடாத கண்ணானார் என்றால் முதுமை வயதடைந்தும்
கூடாத கண்ணேனோ கோதைநம் மன்னைக்கும் கூறுவாயே

(தெ-ரை) இரவுக் குறியிடத்துத் தலைவி செல்ல முடியாதவாறு தாய் தூங்காமையை எண்ணி வருந்துகிறாள் தலைவி. ''தோழி, நாட்டுக்குத் திட்டங்கள் தீட்டுவதற்காக நம் அண்ணா நள்ளிரவு வந்தும் தூங்காமல் பணியாற்றுகிறார். வயதான நம் அன்னைகூட இன்னும் தூங்காமலிருக்கக் காரணம் என்ன'' என்று தோழியைத் தலைவி வினவுகிறாள்.

## நாய் துஞ்சாமை :

உடல்நைந் திடுமாறு லோர்நேர மண்ணா வுறங்கலலேபோல்
மடந்தை யெனைமறந் தன்னை மயக்கத் துறங்கினாலும்
உடந்தை யிலர்போல் உரக்கக் குரைக்கும் ஊர்நாய்கட்கு
மடந்த னெனவோ. மனதாலு மறவைக் கெண்ணிலோமே

(தெ-ரை) தாய் தூங்கினாலும் சில வேளை நாய்கள் குரைக்கும் ஒலி கேட்கும். அக்குரைப்பு இருந்தால் பலரும் விழித்துக் கொள்வர் என்று அஞ்சிய தலைவி, ''உடல் நலமின்றி இருந்தால், வேலை இருப்பினும் எப்போதாவது அயர்ந்து அண்ணா உறங்கிவிடுவதுண்டு. அதுபோல் இப்போது நம் தாய் தூங்குகிறாள். இருப்பினும், நமக்குப் பகைபோல இந்த நாய்கட்கு என்ன மடமையோ தெரியவில்லை, குரைத்துக்கொண்டே இருக்கின்றன'' என்று தோழிக்குக் கூறி, இரவுக் குறியிடம் செல்ல முடியாமைக்கு வருந்துகிறாள்.

## ஊர் துஞ்சாமை :

உடல்நலம் சீர்குன்ற வண்ணாவுக் கூறென்று நேருமானால்
கடல்வெள்ளம் போல்கூடி கங்குலே கண்டோலும் தூங்கிடார்போல்
தடங்கண்ணி யேநம் தனிமைநோய்க் கண்டோயிவ் வூர்மடவோர்
அடங்கிலர் இன்னும் அறியேனே உண்மையை யானுமின்றே

(தெ-ரை) தாயும், நாயும் உறங்கினும், சில சமயம் ஊர்மக்கள் உறங்காமலிருந்து தலைவிக்குத் தொல்லையுண்டு பண்ணுவர். ''தோழி, அண்ணாவுக்கு உடல் நலம் இல்லை என்று கேள்விப்பட்டாள், மக்கள் வெள்ளம் போல் கூடி நின்று, இராமுழுதும் தூங்காமல் நல்ல செய்தி கேட்க நாடியிருப்பர். இந்த ஊர் மக்கள், எனது தனிமை நோய் கண்டோ இன்னும் உறங்காமல் இருக்கிறார்கள்'' என்று வினவுகிறாள்.

## காவலர் கடுகுதல் :

அமிர்தாட்டி யெண்ணும்தன் னண்ணால் தடுமாற்றங் கொள்ளும்வண்ணம்
இமிர்கொட்டிக் காவல் புரிவோர் இனிமெய்குங் தேவைதானோ
தமிழ்நாட்டுக் கண்ணா தலைமையேற் றுள்கின்ற தனைமைதன்னால்
தமிர்காட்டும் பண்புள்ள தீமை புரிவோர்கள் தீர்ந்ததாலே

(தெ-ரை) தாயும், நாயும், ஊரும் உறங்கினும், நகர் காப்போர் ஊரை வலம் வருவர். அதுகண்டு தலைவி வருந்துவாள். அண்ணா ஆள்வதால் தீயவர் எவரும் வாழ்வதில்லை. பின் எதற்கு இந்தக் காவலர்கள் ஊரைச் சுற்றித் திரியவேண்டும்?

## நிலவு வெளிப்படுதல் :

தங்கும் அறியாமை தன்னை யகற்றி தாரணிதன்னில்
எங்கும் அறிவொளி யேற்றி மகிழ்வூட்டு மண்ணாநாட்டும்
நங்கண் ணனையார் நடமாட நன்மைசெய் நள்ளிரவில்
பொங்கும் நிலவேனோ பூங்கொடி நீயே புகலுவாயோ

(தெ-ரை) ''இவ்வுலகில், அறியாமையை அகற்ற அறிஞர் அண்ணாவின் அறிவு ஒளி எங்கும் பரவியிருக்கும்போது, இந்த நிலா ஒளி வேறு எதற்கு. நம் கண் போன்ற தலைவர், பிறர் அறியாமல் வர இவ்வொளி தடை செய்யுமே.'' என்று தோழிக்குத் தலைவி கூறி வருந்துகிறாள்,

## கூகை குழறுதல் :

அடக்கமே கொள்ளுநம் மாண்டகை யண்ணா விடபயின்றும்
ஒடுக்கமே கொள்ளாத உன்மத்தர் பேலிந்த கூகையாவும்
திடுக்கமே கொள்ளுமா றிவ்விரா தேம்பித்தேம் பிக்குழறின்
நடுக்கமே கொள்ளுமென் நெஞ்சம் நமதன்பர் நாடாரென்றே

(தெ-ரை) ''தோழி, அண்ணாவின் பாசறையில் பயின்றும்கூட, ஒரு சிலர், அடக்கமில்லாமல் உன்மத்தராகி உளறிக்கொட்டுவது போல, இவ்வூர்க்கோட்டான் அடிக்கடி கத்துகிறதே. இச்சத்தம் நம் தலைவருக்கு இன்னல் தருமே. அதை யெண்ணி என்னுள்ளம் அஞ்சுகிறது'' எனத் தலைவி உரைக்கிறாள்.

## கோழி குரற்காட்டுதல் :

ஊரவர் யாவரும் பேருவ கைகொள்ளும் சீரையுற்றும்
ஆரவா ரம்ஏது மில்லாம லாளும்நம் மண்ணாநாட்டில்
நேரலர் நொந்தபின் நீட்டி முழக்கல்போல் நீளிரவில்
கூரல கைக்கொண்ட கோழிகள் கூவுமிக் கூத்துமென்னே

(தெ-ரை) இவ்வண்ணம் ஒவ்வொரு இடையூராக வந்து இவற்றையும் மீறிச் செல்லத் துணிந்தால் கோழி கூவ ஆரம்பித்து விடுகிறது பொழுது விடியும் நேரமாதலால், தலைவன், தலைவர் இருவரும் சந்திக்கும் வாய்ப்பை இழக்க நேரிடுகிறது. இதை யெண்ணிய தலைவி ''மக்கள் பலரும் நல்வாழ்வு வாழ வழி வகுத்து ஆண்டும்கூட, அறிஞர் அண்ணா ஆரவாரம் இல்லாமல் அடக்கமாக உள்ளார். ஆனால் அவர் பகைவர் ஏதாவது கூக்குரல் எழுப்பியபடி இருப்பர். அதுபோல, இவ்விராநேரத்தில், இந்தக் கோழிகள் ஏன் கூவவேண்டும்'' என்று தோழியிடம் கூறி வருந்துகிறாள்.

# கரு. வரைதல் வேட்கை.

## தலைமகளைப் பாங்கி பருவரல் வினவல்.

தம்பி யுடையான் படைக்கஞ்சான் என்றித் தரணியாளும்
நம்பி நமதண்ணு நாடிதைக் காக்க நங்கைநீயே
வெம்பி யுடல்வாடும். வேதனை யேனோ விளங்கச்சொல்வாய்
வம்பி எவளேனும் வாட்டம் இழைத்தாளோ வாடுவேனே

(தெ-ரை) இவ்வண்ணம், தலைவனைத் தலைவி காணமுடியாத வாறு இடையீடுபட்டதால் பத்தாம் நாள் காலை தலைவி, துயரத் துள் ஆழ்ந்து காணப்படுகிறாள். அவனைக் கண்ணுற்ற பாங்கி "தம்பியுடையான். படைக்கு அஞ்சான் என அடிக்கடி கூறி, யாருக்கும் துன்பமின்றி அண்ணு இந்த நாட்டை ஆளும்போது, உன் உடல் வாடிஇருக்கக் காரணம் என்ன' என்று வினவுகிறாள்.

## அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

கண்ணனார் என்னையே காக்கூடிப் பின்னைசின் னாட்கழிந்தே
உண்ணநீர் வேட்டவர் போலநம் வீட்டிலே உற்றகாலை
அண்ணுவை நீங்கினோர் அப்புறம் சந்தித்தால் நாணலேபோல்
கண்ணாலே கண்டனள் அன்னையான் நாணிய கான்சியங்கே.

(தெ-ரை) "தோழி, ஒருநாள், என் தலைவர், நம்வீட்டுக்கு வந்து தண்ணீர் கேட்பவர் போல நின்றார். அவரைப் பார்த்த நான், அண்ணுவைப் பிரிந்தவர்கள், பின் எப்போதாவது அவரைச் சந்தித்தால் தலைகுனிவது போல, நான் நாணி நின்றேன். இக்காட்சியை நம் அன்னை கண்டு என்மீது ஐயம் கொண்டவள் போல் காணப்படுகிறாள்" என்று பதில் கூறுகிறாள் தலைவி. (இவ்வண்ணம் கூறியது, தலைவி தலைவனை விரைவில் மணந்துகொள்ள பாங்கி ஒருவழி வகுக்க வேண்டும் என்பதன்றி உண்மை யன்று)

## தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றல்.

குறைகூறு மன்னையும் கொன்னே குரைக்கின்ற நாயுமிவ்வூர்
உறைவோடும் கண்மூட லுற்றாலும் காவலர் ஊரிலுள்ள
துறைதோறும் செல்வதும் தூயவெண் டிங்களே தோன்றுவதும்
இறையோகுக் கண்ணுநாட் டின்னலே செய்யுமென் னேந்திழையே

(தெ-ரை) தலைவன் வருவதற்கு உரிய வாய்ப்பு இல்லாமற் போவது பற்றியும் தலைவி கூறுகிறாள். அவர் வருகைக்கு இடையூறாக, தாயும் நாயும், மக்களும், காவலரும் நிலவும் இன்னல் விளைவிக்கும் என்றும் தலைவி பாங்கிக்குக் கூறுகிறாள்.

## தலைமகனூர்க்குச் செல வொருப்படுதல்.

தன்னலம் பாராதிச் செந்தமிழ் நாடாளு மண்ணுநாட்டில்
என்னலம் யாவையும் ஈர்த்தவர் ஊரினை யெண்ணியேதி
இன்னலைக் கூறிநம் ஏந்தலைச் சார்தலே யென்றனுக்கு
நன்னலம் சேர்த்திடும் நற்றமி ழாக்கிடும் நங்கையின்றே

(தெ-ரை) "அறிஞர் அண்ணு, தன்னலமின்றி இந்த நாட்டை யாளும் போதும், என் நலத்தை உண்டவரைக் காணுது தவிக்கின்றேன். அவர் ஊர் அறிந்து நம் இன்னலைக் கூறி அவரோடு வாழ்தல் எனக்குத் தமிழ்போன்ற இன்பம் தரும்" என்று இயம்புகிருள்.

## பாங்கி இறைவனைப் பழித்துரைத்தல்.

நேசமே கொள்ளாத நேரலர் தம்மிடம் கூடநீண்ட
பாசமே கொண்டிந்தப் பாரரளு மண்ணுவாழ் ஊரிலென்றும்
நேசமே கொண்டுவாழ் நேரிழா யுனைவர் நேர்மையின்றி
பாசமே கொள்ளாத பாதக ராலானதோர் பான்மையென்னே

(தெ-ரை) "தலைவி, பகைவரிடமும் பாசம் காட்டி நாடாளும் அண்ணு நாட்டில் உன்னிடம், பாசம் கொள்ளாது, உன் தலைவர் நேர்மைதவறிய பதகராக ஆனது ஏனோ?" என்று கூறி தலைவனைப் பாங்கி பழித்துரைக்கிருள்.

## இறைவி இறையோன் தன்னை நொந்து இயற்பட மொழிதல்.

திருக்குறன் என்னும் திருமறை தந்தநம் வள்ளுவனுர்
திரும்பவும் வந்துதித் தண்ணுவாய் வரழ்ங் திருவிடத்தில்
விரும்பிய காதலர் கைவிடுங் காட்சியை வே ணடுவாரோ
சுரும்பமர் கூந்தலாய் சோர்ந்ததென் ஊழெனச் சொல்லுவாயே

(தெ-ரை) தலைவனைப் பழித்ததைப் பொருத தலைவி "பாங்கி, திருவள்ளுவ ன் மறு அவதாரமாக விளங்க அண்ணு நாடாளும் போது, காதலியைக் கைவிட்டாலும் காதகரும் வாழமுடியுமா? என் விதி என்னை இப்படி வாட்டுகிறது" என்று கூறி தலைவன் குறையுடையனல்லன் என் பதைத் தோழிக்கு அறிவுறுத்துகிருள்.

## கனவு நலிவுரைத்தல்.

கூடாத கொள்கையர் தம்மொடுங் கூடிவா பூலணுநாட்டில்
மூடாத கண்ணிமை மூடிய காலையென் முனைனேவந்து
தோடத கொண்டேனைத் தேடியே கொண்டெனைதத்தீண்டிப்பின்னும்
கூடாத முன்கனுக் கோழியும் கூவுமோ கோதையென்னே

(தெ-ரை) அன்றிரவு, தலைவி தலைவனைத் தன்கனவில் கண்டு தழுவுகிறாள். அக்கனவிலும் கூட தலைவனைத் தழுவவிடாமல் கோழி கூவி தலைவியின் தூக்கத்தைக் கலைத்து விடுகிறது. பதினோராம் நாள் காலை, பாங்கியை நோக்கிய தலைவி "பாங்கி, கொள்கையில் ஒற்றுமையில்லா தவருடனும் கூட, கூடி, அண்ணா ஆட்சி நடத்துகிறார். இந்நாட்டில், என்னுடன் கூட்டியவரைக் கனவிலேனும் கூடி வாழவிட இவ்வூர்க் கோழிகள் விடவில்லையே ஏன்?" என்று வினவுகிறாள்.

## கவினழி வுரைத்தல்.

மாற்றாரின் தோட்டத்து மல்லிகைப் பூவும் மணக்குமென்ற
கூற்றுரு மண்ணாவின் கொள்கையைக் கொள்ளா தெதிர்த்துநின்று
தோற்றாரை போலவெண் தோணலம் யாவும் தொலைந்தனவால்
ஏற்றாரை யான்பிரிந் தெங்கினி வாழ்வதென் னேந்திழையே.

(தெ-ரை) "மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும் - என்ற கொள்கையுடன் எதிரியையும் புகழும் அண்ணாவுடன் மாறுபட்டுப் போனால் அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக அழிந்தே போவர். அதுபோல என் உடல் அழகு தலைவர் பிரிவால் சிறிது சிறிதாக அழிந்து கொண்டே போகின்றது" என தலைவி தோழிக்குரைக்கிறாள்

## தன்றுயர் தலைவர்க் குணர்த்தல் வேண்டல்.

அண்ணா உடல்நல மற்றார் எனக்கேட் டனைத்துலகும்
எண்ணா இடருற்ற தென்னவே யானுற்றே னென்னுடைய
கண்ணா ரவர்மனம் காதலி யென்துயர் எண்ணுமாறு
பண்ணா திருந்திடின் பாவையே வாழ்வனோ பாரிதிலே

(தெ-ரை) "தோழி, அண்ணா உடல் நலம் இல்லாமல் இருப்பதைக் கேட்ட உலகத்து மக்கள் வாடியது போல நான் வாடுகிறேன். என் துயரை, அவரிடம் நீபோய் தெரியப்படுத்தாவிடில் எவ்வண்ணம் என்னால் வாழமுடியும்" எனக் கூறித்தன் துயரைத் தலைவனுக்கு உணர்த்த வேண்டுகிறாள்.

## துன்புறல் பாங்கி சொல்லெனச் சொல்லல்.

செந்தமிழ்த் தாயைத்தன் சிந்தையுள் எப்போழ்தும் சேர்த்துவாழும்
நந்தமிழ் நாட்டுக்கு நாயக னுயுள்ள வண்ணாவைப்போல்
சிந்தையில் எப்போழ்தும் சோயிழா யுன்னையே சேர்த்துவாழச்
சொந்தமாய் வந்தவர்க் குன்துயர் சொல்லவோ வேண்டுமின்றே

(தெ-ரை) அதுகேட்ட பாங்கி '' தலைவி, நீ நினைப்பதுபோல் உன்னை நினையாமல் அவ- இருக்கமாட்டார். தமிழ்த்தாய். அண்ணாவின் சிந்தையில் எப்போதும் இருப்பதுபோல, உன் தலைவர் சிந்தையில் எப்போதும் நீ வீற்றிருக்கிறாய். அவருக்கு இதைச் சொல்லவா வேண்டும்'' என்று கூறுகிறாள்.

### அலர் பார்த் துற்ற அச்சக்கிளவி.

இலமே யெனவரும் ஏழையர்க் கேன்றவை யீந்துவந்து
நலமே யெவர்க்கும் நயந்திடும் அண்ணாவாழ் நாட்டிலின்றும்
குலமே பெரிதென்று கூறிநம் காதல் குலைக்கவெண்ணி
அலரே உரைக்கும் அணங்கனோர்க் கஞ்சுவே னாரணங்கே

(தெ-ரை) '' தோழி, நீ சொல்வது சரிதான். ஆயினும், எல்லார்க்கும் நலமே செய்துவாழும் அண்ணா நாட்டில், இன்றும் கூட சிலர் குல மாறுபாடுகளைக் கூறி என் காதலை குலைக்க வெண்ணி அவர் தூற்றுவதைக்காண யான் அஞ்சுகிறேன்'' எனத் தலைவி மறுமொழி கூறுகிறாள்.

### ஆறுபார்த் துற்ற அச்சக்கிளவி.

உலகம் புகழும் ஊனுடை யண்ணா உறையுமூரில்
கலகம் கருதும் கயவர் உளம்போல் கருவிழியே
உலவும் இகலில் உரகம் உளியம் உழுவை போன்ற
பலவும் பரவும் பறம்பில் பரிவர் படர்வதெனனே.

(தெ-ரை) தன்கருத்தை வலியுத்த எண்ணிய தலைவி, ''அண்ணா நாட்டில் சில கயவர்கள் கலகம் செய்ய அலைவதுபோல, தலைவர் வரும் வழியில். பாம்பு, கரடி, புலி முதலியன உலவுகின்றமையை எண்ணி யான் பெரிதும் அஞ்சுகிறேன்'' என்கிறாள்.

### காமமிக்க கழிபடர் கிளவி.

தம்பியர்க் கண்ணாத் தமிழ்மேல் தணியாத தாகம்போல
எம்பிரான் மீதெனக் கேறபடும் வேட்கையை ஏற்குமாறென்
நம்பியர்க் கெவ்வணம் நானுரை செய்வதோ நாணமென்னும்
அம்பரம் நீந்திட வோர்புணை கூறுவா யஞ்சுகமே.

(தெ-ரை) '' தோழி, அண்ணாவின் தமிழ்மேல் தம்பியர்க்கிருக்கும் பேரவா போல,என் தலைவன்மீது எனக்கு அன்பு இருக்கிறது. இதை அவரிடம் கூற என் நாணம் தடுக்கிறது. அந்த நாணமாகிய வெள்ளத்தில் நீந்தீ கரையேற ஒரு தெப்பத்தைக் கூறிடு'' என, தன் காமத்தைக் குறிப்பாகத் தோழிக்குப் புலப்படுத்துகிறாள். (அம்பரம் - கடல் - வெள்ளம்)

## தன்னுட் கையா றெய்திடு கிளவி.

அன்பால் உலகையே ஆளும் அறிஞரா மண்ணுநாட்டில்
நின்பால் துயின்ருர் நிஜையாத தாலிங் நிலையுற்ருயோ
பொன்போல் மலரால் பொலியுமிப் புன்ஜைநோக் இப்புலம்யும்
என்போல் துயிலா திஜைந்திடுந் தோயமே நீயுமிங்கே

(தெ-ரை) இவ்வணம் தோழியிடம் கூறிய தலைவி கடலை நோக்கிக் கூறுவாள் போல "ஏ கடலே, நீ எப்போதும் தூங்காமல் அலைத்துக் கொண்டே உள்ளாயே. நீயும், அன்பால் ஆளும் அண்ணு நாட்டில், உன் காதலனை, என்போல் பிரிந்து வாடுகிருயோ" என்று வினவுகிருள். (தோயம் - கடல்)

## நெறி விலக்கு வித்தல்.

பலகலை கற்றதும் பண்பெலாம் பெற்றதும் பார்த்துபோற்றும்
உலகின ரண்ணுமீ துற்றபே ரன்பினு மூங்குடையாய்
விலங்கின முருமிவ் வேலையில் வெவ்வழி வாரலென்று
நலம்பல நல்குமென் நாயகன் தன்பால் நவிலுவாமே

(தெ-ரை) "தோழி, உலகமக்கள் அண்ணுவின் மீது வைத்திருக்கும் அன்பைவிட அதிகமான அன்பினை என்மீது வைத்துள்ளாய்; எனக்கோர் உதவிசெய்; விலங்குகள் அலையும் காட்டு வழியே வரவேண்டாம் என என் தலைவனுக்குக் கூறுவாயாக" என்று உரைக்கிருள்.

## குறி விலக்கு வித்தல்.

தசையுடல் போற்ற ரெனினும் தரணியோ குள்ளமெல்லாம்
இசையுடல் ஏற்றிய வண்ணுவிற் கென்றும் வளர்புகழ்போல்
பசைகெடா சாரலுள் பைங்கூழ் வளர்ந்தன பைங்கொடியே
நசைகெடா தாங்கனே நம்பியை நான்வர நாடுவாயே

(தெ-ரை) "தோழி, அண்ணு அவர்கள் தன் உடல் பற்றி அக்கரை கொள்ளாது வாழ்கிருர். ஆயினும் அவர் புகழுடம்பு எல்லாருள்ளத்திலும் வளர்கிறது. அவ்வளர்ச்சி போல, நம் வயல்களில் கதிர்களும் வளர்ந்துள்ளன. அப்பக்கமே நம் தலைவனை வரச்செய்வாயாக" என்று கூறி, தலைவன் இரவு வருகையைத் தவிர்க்குமாறு உணர்த்துகிருள் தலைவி.

## வெறி விலக்குவித்தல்.

இருளார் நெறியினில் ஏந்தல் வருவதை எண்ணிநங்காய்
மருளார்ந் திருந்தேன் மனநோய் அறியாநம் மன்னையின்று
அருளார் அறிஞரா மண்ணுவின் உள்ளம் அறியார்போல
முருகார் வெறியனை முன்னின் என்பாய் முன்பனுக்கே

(தெ-ரை) ''தோழி, என் காதலர் வராமையை எண்ணி நான் கலக்கமுற்று இருப்பதை, அண்ணுவின் உள்ளம் உணராதோர் போல நம் அன்னையும் உணராமல், என் தோய் தீர்க்க வெறியாடுதலை எண்ணியுள்ளாள்'' என்று கூறி, அதை தலைவற்கு உணர்த்துமாறு தோழியைத் தலைவி வேண்டுகிருள். (வெறியாடுதல் என்பது, நோய் வந்தது என்ன காரணம் என்றறிய, பூசாரி ஒருவனைக் குறி கேட்டலாகும்).

### பிற விலக்குவித்தல்.

இந்தி மொழிக்கோர் இடம்கொடுக் காமலே இன்தமிழை
உந்தி வளர்த்திட்ட உத்தம ரண்ணுவி . னூரில்யாரோ
வந்து மகள்வேண்டி நின்றதும் யான்கொண்ட வாட்டந்தன்னை
இந்து நுதலாளே இன்றவர் பால்சென் றியம்புவாயே

(தெ-ரை) ''தோழி, நம் அறிஞர் அண்ணு, இந்திமொழிக்கு இந்நாட்டில் இடம் தராமலேயே தமிழ் மொழியை வளர்க்கிருர் என்பதறிவாய். இங்கு என்னைப் பெண் வேண்டி யாரோ வந்து நம் தந்தை முதலியோரை வேண்டினர் என்று கேள்விப்பட்ட போது யான் பெரிதும் வருந்தினேன். இவ்வருத்தத்தைத் தலைவர்க்கு நீ சொல்வாயாக'' என்று கூறுகிருள்.

### குரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

அடுத்தாரை ஆட்கொளும் அண்ணுவின் பண்புடை ஆண்டகைக்குக்
கொடுக்காமல் போவாரோ கொள்கை வழிசென்று கோரிநின்ருல்
தடுத்தாரை வீழ்த்திடும் தாமரைக் கண்ணியே தாய்முதலோர்
தடுக்காமல் பார்த்துக்கொள் தார்மார்பர் வீட்டாரைச் சாரச்செய்தே

(தெ-ரை) ''தோழி, நம் தலைவரை, நம் வீட்டுக்குப் பெண் கேட்க வரச் செய். தம்மையடுத்தவர் யாராயினும், புகல்தரும் அண்ணு ஆளும் நாட்டில் அவரையாரும் தடுக்கமாட்டார்கள். நம் தாய் முதலோர் அவரைத் தடுக்காமலும் பார்த்துக் கொள்ளுதல் உன் பொறுப்பேயாகும்'' என்று தலைவனைப் பெண்கேட்க வருமாறு தூண்டச் செய்கிருள், தோழியைத் தலைவி.

## கசா. வரைவு கடாதல்.

### விஞய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

நந்தாய் அனைய நனியறி வாளனும் அண்ணுநாட்டில்
வந்தாய் எமது வனிதையை ஏன்ருய் வருத்தம்காணுய்
எந்தாய் நிதமும் இனைந்தவள் தூங்காமை கண்டெனையே
நொந்தாள் அவட்கு நுவன்றபொய் மாற்றத்தால் நோய்கொண்டேனே

(தெ-ரை) தலைவியின் குறிப்பறிந்த பாங்கி, தலைவனைச்சந்தித்து, தலைவியின் துயரங்களைக் கூறி அவளை விரைவில் மணம் புரிந்து கொள்ளுமாறு வற்புறுத்த விரும்புகிறாள். பன்னிரண்டாம் நாள் தலைவனைச் சந்தித்து, ''தாய் போன்று அனைவரையும் காக்கும் அண்ணா நாட்டிற்குள் நீ வந்து என் தலைவியை ஏற்றாய். பின், அவள் வருத்தம் பார்க்கிலை. அவள் வருந்திய நிலையறிந்த தாய், அதற்கான காரணம்கேட்டு என்னை நொந்துகொண்டாள். நான் உண்மையை மறைத்துப் பொய் காரணம் கூறும்படி நேர்ந்துவிட்டது'' என்று கற்பித்துக் கூறி தலைவனை விரைவில் வரையுமாறு வேண்டுகிறாள்.

### அலர் அறிவுறுத்தல்.

எண்ணா நலம்பல இந்நாட்டு மக்கட் கியற்ற யாளும்
அண்ணா பெருமை அகில உலகத்து மார்த்தலே போல்
வண்ணா உனைக்கொண்ட வஞ்சியாள் ஊரவர் வாயலர்ந்தாள்
கண்ணா எவனை கருதிலை யாமின் கருகுவளே.

(தெ-ரை) '' தலைவனே, அண்ணாவின் புகழை உலக மாந்தரெல்லாம் உரைப்பது போல, எம்மூர் மக்களெல்லாம் தலைவி காதல் வாய்ப்பட்டாள் என்று உரைக்கிறார்கள். இனி அவளைக் காக்க வேண்டியது உன் பொறுப்பே'' என்று அவரை அறிவுறுத்தி வேண்டுகிறாள் தோழி.

### தாயறிவுணர்த்தல்.

எதிரிகள் தங்கள் இதயத்தை எவ்வா றொளித்திடினும்
புதிரேது மின்றிப் புரிந்துகொள் தன்மையர் அண்ணாவைப்போல்
மதிநிறை யன்னையார் மங்கைக்கு நீதந்த முல்லைமாலை
கதிர்விடக் கண்டுமோ கண்டிடார் கன்னியின் காதலையே.

(தெ-ரை) ''நீ தந்த முல்லை மாலையை அணிந்திருந்த தலைவியைப்பார்த்த தாயர் அவளை ஐயுறுமின்றனர். எதிரிகள் தங்கள் உள்ளத்தை ஒளித்தாலும், மிகச் சுலபமாக அண்ணா புரிந்து கொள்வது போல், தலைவி தன் துயரை எப்படி மறைக்கினும் அவர்கள் உணர்ந்து விடுகின்றனர்'' என்றும் கூறுகிறாள் பாங்கி.

### வெறியச் சுறுத்தல்.

பகுத்தறி வோடிந்தப் பாரினை யண்ணாவே யாண்டிடினும்
பகுத்தறி வற்ற பழக்கங்கள் இன்னும் பயில்வோருள்ளார்.
அகத்துறு நோயை அறியாத தாயர் வெறியாட்டொன்றை
நிகழ்த்தவே யெண்ணினர் நேரிழை காப்பதுன் நேர்மையொன்றே.

(தெ-ரை) "அண்ணு, பகுத்தறிவு கொண்டு இந்நாட்டை யாண்டாலும், அவ்வறிவற்றவர் இன்னும் சிலர் இருக்கிறுர்கள். தலைவியின் நோய்க்குத் தெய்வக் குற்றம் என்று கருதி, எம் தாயர் வெறியாடுதலை நிகழ்த்த எண்ணியுள்ளனர்" என்று தலைவற்குரைக்கிருள்.

### பிறர் வரைவுணர்த்தல்.

இல்லற வாழ்க்கைதான் நல்லற வாழ்வென் என்றுமெங்கும்
சொல்லியே போற்றிடு மண்ணுயிங் நாடாளும் சூழ்நிலையில்
நல்லவன் எத்தனை நாட்கள்தான் நம்பியர் கண்படாமல்
செல்லுவள் சொல்லுவாய் சேயிழை வெல்லுவாய் சிந்தித்தின்றே.

(தெ-ரை) "அறிஞர் அண்ணு அவர்கள் இல்லற வாழ்வே நல்லறம் என அறிவுரை கூறுவதால், நல்லினம் பெண்களை மணம் புரிந்து கொள்ள காளையர் பலரும் எண்ணித் தேடுகின்றனர். அவர்களின் கண்ணிலிருந்து எத்தனை நாட்களுக்குத்தான் உன் தலைவி தப்பியிருக்க முடியும்" என்று கேட்கிருள் பாங்கி.

### வரைவெதிர் வுணர்த்தல்.

இதனை இதனுல் இவன்வெல்லு லென்ருயு மண்ணுநாட்டில்
மதனை எதிர்வெல்லும் மாணெழில் கொண்டநீர் மங்கைக்காக
நிதமும் கவலாது நோ்வந் தெமரை யணுகினீரேல்
பதமே உறுவீர் பசியுங் குறைவீர் பதட்டமேனே.

(தெ-ரை) "இன்னின்ன பணியை இன்னின்ஞரிடம் ஒப்படைக்க வேண்டும் என்ற அறிவறிந்த அண்ணு ஆளும் போதும், உன் கவலையை எப்படிப் போக்கிக் கொள்ளலாம் என்பதை நீ உணராதது வியப்பாயுள்ளது. சிறந்த அழகுற்ற நீர், எம்மைச் சார்ந்தவரை அனுகினீரேயகில் தலைவியை எளிதாக மணந்து வழலாம்" என்று பெண் கேட்க வருமாறு தோழி தலைவனை வற்புறுத்துகிருள்.

### வரைவு நாளுணர்த்தல்.

துன்ப இருள்நீக்கி இன்ப ஒளியேற்றித் தோன்றுகின்ற
அன்பு மனததோடின் ருளும்நம் மண்ணுவின் நறபுகழபோல
இன்ப நிலவூட்டும் இந்து வளர்கின்ற இந்நாளில்
அன்ப நுமைநாடு மாயிழை கொள்ளுவீர் ஆர்வத்தோடே.

(தெ-ரை) "அன்பரே, அண்ணுவின் புகழ்போன்று, நிலா ஒளி விடுகிற வளர்பிறை நாட்கள் இப்போழ்து உள்ளன, இந்நன்னுட்களில் உன் காதலியை மணம் புரிவது சிறப்புடைத்தாகும்" என்றும் தோழி உரைக்கிருள்,

## அறிவு அறிவுறுத்தல்.

மாற்றார் பிழையையும் மன்னிக்கும் மாண்புடை யண்ணாநாட்டில்
ஏற்றாய் நினையெண்ணி ஏங்கித் தவிக்கின்ற ஏந்திழையாள்
ஆற்றாள் எனினும் அறிவார்ந்த பண்பாட்டு ளாழ்ந்ததனால்
சாற்றாள் எவர்க்குமே சார்ந்திடா நின்பிழை சால்புதானே

(தெ-ரை) "தலைவ, உன்னையெண்ணி யெண்ணி ஏந்திழையாள் தவிக்கிறாள். மாற்றார் பிழையையும் மன்னித்தருளும் அண்ணா நாட்டில் நீ வந்து மணம் செய்து கொள்ளாத உன் பிழையைச் சொல்ல அவள் அறிவு இடந்தருமா? தன் ஆற்றாமையைச் சொன்னால் உன்னை நான் பழிப்பேன் என்று கருதி அதை என்னிடம் கூடக் கூறாமலிருக்கிறாள்-" என்று கூறி, இத்தகைய அறிவுடையாளை தலைவன் விரைந்து மணம் புணர வற்புறுத்து கிறாள்.

## குறி பெயர்த்திடுதல்.

எவருக்கு மெப்போது மஞ்சா வியல்புடை யண்ணாநாட்டில்
அவளுக்கு மாண்டகை தங்கட்கு மார்ந்துள்ள நட்பதனை
கவலைக்குள் ளாக்குவோர் காவிந்தப் பக்கத்தே காணக்கூடும்
அவலத்திற் குள்ளாவோ மென்றச்சம் கொண்டாளுன் னஞ்சுகமே

(தெ-ரை) "தலைவனே, அண்ணா நாட்டில் அஞ்சாமையுடையோர் பலர், அவருள் யாரேனும் இப்பக்கமாகவும் வரக்கூடும் எனத் தலைவி அஞ்சுகிறாள், இனி நீ இக்குறியிடம் வரவேண்டாம்" என்று வேண்டுகிறாள். இவ்வண்ணம் பன்னிரண்டாம் நாள் கழிகிறது.

## பகல் வருவோனை இரவு வருகென்றல்.

குறுகிய காலத்துள் கோவேந்தன் கொள்ளும் புகழைக்கொண்ட
அறிஞரே றண்ணாவின் ஆட்சியைக் காண்பதற் காகவெங்கும்
செறிந்திடும் சுற்றுலா செல்லுவோர் சூழும் செயலையெண்ணி
நறுநுதல் அஞ்சுவாள் நாளைநீ வந்திடு நள்ளிரவே

(தெ-ரை) பதின்மூன்றாம் நாள். பகல் நேரத்தில் வந்ததலைமனை நோக்கி, "தலைவ, மிகக்குறுகிய காலத்தில் அண்ணாவின் புகழ் எப்படி ஓங்கியது என்று அறிய, அகில உலகத்திலும் உள்ள தலைவர்களும் அங்கும் இங்கும் சுற்றுலா வந்து கொண்டேயிருப்பதால், பகலில் உன்னைவந்து சந்திக்கத் தலைவி அஞ்சுகிறாள்" என்று கூறி பகலில் வரும் தலைவனை இரவு வருகவென குறிப்பாலுணர்த்துகிறாள்.

## இரவு வருவானைப் பகல் வருகென்றல்.

மண்ணாளும் மன்னர் எவர்க்குமே கிட்டாத மாட்சிகொண்ட
அண்ணாவின் பேச்சை அருந்தி மகிழ்ந்திட வாரிருளும்
எண்ணாமல் கூடும் இயல்புடை மக்கள் இயங்குவதால்
பண்ணாளைக் காண பகலிலே வருவாய் பகுத்துணர்ந்தே

(தெ-ரை) தோழியின் கூற்றுப்படி, அன்று இரவு வந்த் தலைமகனை நோக்கி, ''தலைவ, அண்ணாவின் சொற்பொழிவுகள் இப்பக்கம் அடிக்கடி இரவிலும் நடக்கின்றன. அதைக் கேட்க இருளையும் எண்ணாது ஏராளமானோர் கூடுகின்றனர். ஆகவே இனி இறைவியைக் காணப் பகலில் வருவதே நல்லது'' என்கிறான்.

## பகலினும் இரவினும் பயின்று வருகென்றல்.

பகலிர வென்றெல்லாம் பாராதிந் நாட்டிற்காய்ப் பாடுபடும்
அகலறி வாளணு மண்ணுவாள் நாடுறை யாணழகா
இகசுகம் நாள்சில என்பதை யாகிலும் எண்ணிப்பார்த்து
பகலிரா வெப்போதும் பாவையை நீங்காது பற்றுவாயே

(தெ-ரை) பதினான்காம் நாள், தலைவனைச் சந்தித்த தோழி; ''தலைவ, அறிஞர் அண்ணா அவர்கள், பகலென்றும் இரவென்றும் பாராமல், நாட்டிற்காகப் பாடுபட்டுக் கொண்டு இருப்பது போல், பாவைக்கா, நீ, பகலிலும் இரவிலும் காத்திருந்து சந்திக்கவேண்டும். இன்பமனுபவிக்கக் கூடிய ஆண்டுகள் சில என்பதையாவது எண்ணிப்பார்'' என்று கூறுகிறாள்.

## பகலினும் இரவினும் அகலிவண் என்றல்.

எதையுமே எண்ணித் துணியும் இயல்புடை யண்ணாநாட்டில்
நிதமுமே வந்திடின் நேரிழைக் காகவே நேர்ந்தாயென்று
குதற்கமே கொள்ளுவோர் கோதையைத் தூற்றலும் கூடுமன்றோ
எதற்குமே அஞ்சிடாய் என்னினும் வாரல் இராப்பகலே

(தெ-ரை) பதினைந்தாம் நாள் காலையே வந்துவிட்ட தலைமகனை நோக்கிய தோழி, ''நீ நிதமும், இவ்வண்ணம் பகலிலிலும இங்கு வந்து நின்றால், எதையும் எண்ணிப் பார்க்கும் பழக்க முடைய அண்ணா நாட்டு மக்கள், உன் மீது ஐயுற ஏதுவாகும். எனவே, பகல், இரவு எப்போழ்துமே இங்கு வாராமலிருப்பதே மேல்'' என்று பின்னும் அறிவுறுத்துகிறாள்.

## உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறல்.

தேன்தமிழ் நாட்டிலே தீமைகள் ஏதுமே தோராவண்ணம்
சான்றவர் பாதையில் சற்றும் பிறழாத வண்ணநாட்டில்
ஆன்றவர் முன்னிலே ஆரணங் காளைநீர் ஆண்டுகோடல்
வான்புகழ் நும்குல வாய்மைகொள் நற்குடி வாழ்க்கையாமே

(தெ-ரை) தன் எண்ணத்தை மேலும் வலியுறுத்த வெண்ணிய தோழி ''எவ்விதத் தீமையும் நேராதவாறு, சான்றோர்கள் கூறிய நெறியைப் பின்பற்றும் அண்ண நாட்டில், நீரும் ஆன்றோர் முன்னிலையில், தலைவியை மணந்து கொள்ளுதல் தான், உம் புகழ்க்கும், குலப்பெருமைக்கும், நேர்மைக் குணத்துக்கும் நற் குடிப்பிறபிற்கும் ஏற்ற முறையாகும்'' என்று தலைவியை மணந்து இல்வாழ்க்கை நடத்துமாறு அறிவுரை கூறுகருள்.

## ஆறுபார்த்துற்ற அச்சங் கூறல்.

இன்ன செயினும் இனியவே செயச்சொல்லு மண்ணுவின்று
துன்ன லியன்ற தகைமையில் நாடிதை யாள்வதலே
மன்ன உலகினில் மாரு யியல்படைக் காட்டுமாக்கள்
இன்னு முலவுதல் இல்லையென் றெவ்வகை யெண்ணுவீரே

(தெ-ரை) ''துன்பம் செய்யினும், இன்பமே தரும்படி அறிவுரையை அண்ண கூறினும், காட்டு மிருகங்கள் கூடவா அவர் சொற்படி நடக்கும்? துன்பந்தரும் விலங்குகள் அண்ண நாட்டில் இல்லை என்று எப்படிக் கூறமுடியும்?;' எனக்கூறி, தலைவன் வரும் வழியின் கொடுமை குறித்து அஞ்சுவதை அறிவிக்கிருள்.

## ஆற்ருத் தன்மை ஆற்றக் கூறல்.

பகைவர்க்கு மன்புசெய் பண்புடை யண்ணயிப் பாரையாண்டும்
முகையது பூத்திடும் முன்னமே சாய்தல் முறைஞமதானே
வகையறி யாமலே வஞ்சியாள் தாவிட வாட்டங்கொள்ளும்
தகையறிந் தண்ணலே தையலை யாட்கொளத் தப்பிடீரே

(தெ-ரை) எதிரியையும் காப்பாற்றும் அண்ண நாட்டில், மலராத மொட்டைக் கருக விடலாமா? நீர் தலைவியின் ஆற்ருமையை ஆற்றி அவளை வாழ்விக்க வேண்டும்'' என்று வற்புறுத்துகிருள்.

## காவல் மிகவுரைத்தல்.

திருடரும் சிந்தை திருந்திட வண்ணாவின் செங்கோலாட்சி
மருவினும் பண்டை மனமுடை காவலர் மாற்றமின்றி
திரிபவர் தூங்கினும் தேன்மொழி தாயர்கண் தீராக்காலை
வருவதும் டோவதும் வாய்க்குமோ வீரநீ யெண்ணுவாயே

(தெ-ரை) ''அண்ணா நாட்டில், திருட்டுத் தொழில் புரிவோர் இல்லையென்றாலும், ஊர்க்காவலர்கள் சுற்றிக் கொண்டுதான் உள்ளனர். அதுமட்டுமன்றி, தாய்மார்கள் தூங்காவிட்டால் எப்படித் தலைவி வெளியில் வரமுடியும், திரும்ப முடியும்'' எனவினாவி, தலைவியின் நிலையை உரைக்கிறாள்.

## காம மிகவுரைத்தல்.

தம்பியர் யார்க்கும் தளர்வேது மேற்படின் தன்மைதீர்க்க
நம்பிரான் அண்ணாவின் நல்லுரை யன்றியோர் நாதியுண்டோ?
நம்பியே உன்னுடை நங்கையின் நோய்நாடித் தீர்ப்பதற்காய்
எம்பிரான் நீயன்றி யாரிந்த ஞாலத் திருக்கின்றாரே

(தெ-ரை) '' தலைவ, தம்பியர் யார்க்கும் தளர்ச்சி ஏதேனும் ஏற்பட்டால், அண்ணாவின் நல்லுரையன்றி வேறேதும் தீர்க்க முடியுமோ? அதுபோல, தலைவியின் நோய்தீர்க்க, இவ்வுலகில் உன்னைத்தவிர வேறு யாருளர்?'' எனக்கேட்டு, தலைவியின் காம நோய்பற்றித் தோழி தலைவனுக்கு எடுத்துரைக்கிறாள்.

## கனவு நலிபுரைத்தல்.

தொண்டுசெய் உள்ளமே யன்றி துறக்கமும் வேண்டேனென்னும்
அண்ணாவின் பண்புடை அன்பரே நீரென்யன் ஆயிழையாள்
கண்ணுறங் கும்போது காட்சியைத் தந்து களிப்பைஈந்து
ஒண்ணுதல் கண்விழித் தோர்ந்ததும் துன்பமே வுற்றனளே

(தெ-ரை) '' தொண்டு செய்வதையே கடமையாகக் கொண்டு, அதைவிட்டு வானுலக வாழ்வையும் விரும்பாத அண்ணாவின் பண்புடைய நீர், தலைவியின் கனாவில் தோன்றி, களிப்பைத்தரும் பொழுதே மறைவது எங்ஙனம்? கண் விழிக்கும் தலைவி துன்பமுறுதலை எண்ணவில்லையா['' என்று தலைவி தலைவனையே எண்ணியுள்ள பாங்கினைப் புலப்படுத்துகிறாள்.

## கவினழி புரைத்தல்.

ஏழையர் தம்நிலை ஏற்றம் பெறுவதைப் பற்றியென் றும்
ஆழவே சிந்தையில் ஆய்ந்திடும் நம்பிரான் அண்ணாவைப்போல்
ஏழையாள் நின்னொடு தங்கியே வாழ்வதற் கெண்ணியெண்ணி
கோழையர் நெஞ்சம்போல் கோதைதன் வண்ணம் குலைந்தனளே.

(தெ-ரை) ,,அன்பரே, அறிஞர் அண்ணாவின் சிந்தையில், ஏழை களின் வாழ்பற்றிய எண்ணமே எப்போழ்தும் உள்ளதைப்போல், உன்னோடு வாழும் வாழ்வு பற்றியே தலைவி எப்போழ்தும் எண்ணிக் கொண்டுள்ளாள், எதற்கும் அஞ்சிவாழும் கோழை களின் உள்ளம் நைவதுபோல, அவள் எழிலும் அழிந்து கொண்டே உள்ளது'' என்றும் கூறி, தலைவன் விரைவில் தலைவியை மணத்துகொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறாள் தோழி,

# கஎ. ஒருவழித் தணத்தல்.

## தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றல்.

ஏல்பல் கலைக்கழகம் சென்ற வண்ணாதன் தம்பிமார்பால்
கோல்முறை தந்தன்று கூறிய தன்மைபோல் கோதையுன்பால்
வேல்விழி யாள்தந்து வேண்டுவேன் காவென்று வேலையொன்றால்
சால்புடை யென்னூரைச் சார்ந்துயான் மீண்டபின் சந்திப்பேனே,

(தெ-ரை) இவ்வண்ணம் உரைத்த பாங்கியின் கருத்துக் கிசைந்து, தலைவியை விரைவில் மணம் செய்துகோள்ள எண்ணிய தலைவன், ''தோழி, ஒரு வேலை காரணமாக என்னூர்வரை யான் சென்று உடன் திரும்புவேன்; அமெரிக்காவில் உள்ள ஏல் பல்கலைக் கழகத்தாரின் அழைப்பையேற்று அண்ணா சேல்லும் போது, ஆட்சியைத் தன் தம்பியரிடம் தந்து, 'நன்கு காத்து வருக' என்று கூறியது போல், நானும், என்னூர் செல்லுமுன், ''உன் தோழியை நீ பாதுகாப்பாயாக'' என்று கூறி உன்னிடம் அவளை ஒப்படைக்கிறேன்.'' என்று கூறுகிறாள்-

## பாங்கி விலக்கல்.

நன்மைசேர் இன்பங்கள் நாளும் பலவாகு மண்ணா நாட்டில்
இன்மைதீர் எண்ணத்தோ டண்டியோர் மீண்டிட லென்றுமுண்டோ?
மென்மைகூர் ஒண்டொடி கண்டுமோ நின்னூர்மேல் ஆசைகொண்டீர்?
புன்மைநேர் பண்பினோர் போலநீர் எண்ணிடீர் போகிடீரே,

(தெ-ரை) ''பிழைக்கும் வழிதேடி, அண்ணா நாட்டுக்கு வரு வோர் திரும்பவும் தம் ஊர்க்கு ஏகுதலை எண்ணுவாரோ? உன் தலைவியைக் கண்ட பிறகும், நீர் ஊர் செல்ல வேண்டுமென்ற எண்ணம் உமக்கு எப்படி வந்தது? தீய பண்புடையோர் போல, நீரும் போதல் தகுமோ? போக வேண்டாம்'' என்று கூறி தலைவனைத் தடுக்கிறாள் தோழி.

## தலைவனீங்கல் வேண்டல்.

அண்ணவை நீங்கி அயல்நாடு சென்றாலு மன்புத்தம்பி
அண்ணவை எண்ண தரைக்கணம் வாழ்தலும் ஆவதுண்டோ
பண்ணனை நீங்கியான் பக்கத்தூர் போனாலும் பாவைதன்னை
எண்ணமல் வாழ்வதற் கென்னலு மொல்லுமோ வேந்திழையே.

(தெ-ரை) "தோழி, அண்ணவைப் பிரிந்து அயல்நாடு சென்றாலும் கூட அவர் தம்பியாரும் அண்ணவை மறப்பதேயில்லை. அதுபோல, நான் என்னூர் சென்றாலும் தலைவியை மறக்கவே மாட்டேன். மறந்து என்னல் வாழமுடியுமோ?" எனக்கேட்டு, தான் தன்னூர் செல்லலை வேண்டுகிறான்.

## தலைவனைப் பாங்கி விடுத்தல்.

தன்னினை வில்லாதித் தாரணி யாரெண்ணு மண்ணவைப் போல்
நின்னையெந் நேரமும் நெஞ்சிலே தொண்டாளும் நேரிழையாள்
இன்னுந்தன் னில்வாழ யெண்ணுவா ளென்றேநீ எண்ணுகின்றாய்
மன்னவா நீயிடை வந்துவந் தேகிடின் வாடிடாளே.

(தெ-ரை) தலைவன் கூறிய சமாதானத்தை யடுத்து, "தலைவ, அண்ண அவர்கள் தன் சொந்த நினைவு ஏதுமின்றி நாட்டு மக்களையே எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பது போல், உன் தலைவியும் உன்னையே எப்போதும் நினைந்து வாழ்கிறாள். நீயின்றி அவள் தன்னில் வாழாள். இடையிடையே நீ இங்கு வந்து செல்க" என்று கூறி, பாங்கி தலைவனைப் போக விடுக்கிறாள்.

## பாங்கி தலைவிக் கவன்செல வுணர்த்தல்.

செயலொன்றை மேற்கொள்ள சேயிழா யுன்சிந்தை சேர்ந்தாரின்றே
அயல்நின்ற தன்னூர்க் ககன்றுடன் மீள வகத்திலெண்ணி
அயல்நா டகன்றபோ தண்ணதன் தம்பிக் கறைந்ததேபோல்
மயல்நெஞ்சங் கொள்ளாமல் மங்கை உனைக்காக்க வேண்டினரே.

(தெ-ரை) பின்னர், தோழி, தலைவியைச் சந்தித்து "தலைவி, ஒரு வேலை காரணமாக, தலைவன் தன்னூர் சென்று வருவதாகக் கூறி, அண்ண அயல்நாடு சென்றபோது, நாட்டைக்காக்குமாறு தன் தம்பியர்க்கு உரைத்ததுபோல், உனைக் காக்குமாறு என்னிடம் உரைத்தார்" என்று சொல்லி தலைவன் ஊருக்குச் சென்றதை உணர்த்துகிறாள்.

## தலைவி நெஞ்சொடு புலத்தல்.

ஆன்றவர் யாவரும் போற்றிடு மண்ணமே லாணையிட்டு
மான்விழி உன்றனை யான்ஒரு போழ்தும் மறவேனென்று
நான்கிதழ் ஒன்றிய நாளன்று சொன்னதை நம்தலைவர்
ஏன்மறந் தாரோ இதுதா னுலகோ வறுப்பலேனே,

(தெ-ரை) அதுகேட்ட தலைவி தன் நெஞ்சுக்கு உரைப்பவள் போல "முதல் முதல் நம்மைக் கூடிய தலைவன், அண்ணாவின் மேல் ஆணையிட்டு, எப்போழ்தும் பிரியமாட்டேன் எனக்கூறினார். இன்று ஏன் மறந்தாரோ தெரியவில்லை. இதுதான் உலகோ" என்று கலங்குகிறாள்.

### சென்றோ னீடலிற் காமமிக்க கழிபடர் கிளவி.

தாம்பெற்ற கல்வியைத் தாரணி யார்க்கெலாம் தந்துதவும்
நாம்பெற்ற பேரறி வாளண மண்ணாநா டாளும்போது
யாம்பெற்ற துன்பத்தை யென்னுள்ள மாண்டார்க்கு மேனேயின்று
கூம்புற்று பேரின்பங் கொண்டுறங் கன்னங்காள் கூறிடீரே.

(தெ-ரை) மறுநாள் (பதினைந்தாம் நாள்) மாலையளவும் தலைவன் வாராமையை உணர்ந்த தலைவி, அவள் கண்பட்ட அன்னங்களை நோக்கி "மகிழ்ச்சியோடுறங்கும் அன்னங்காள், தான் கற்ற அறிவை இவ்வையகத்தார்க் கெல்லாம் வழங்கி உதவும் அண்ணா நாட்டை ஆளுகின்ற போதும், என் துன்பத்தை நீக்கிடுமாறு, என் தலைவரிடம் நீங்கள் கூறாமலிருப்பது ஏனோ" என்று, காம நோயால் வாடுகிறாள்.

### தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.

சொன்னசொல் மாறுத சொற்செல்வ ரண்ணாவின் தம்பிமாருள்
உன்கைத் தைக்கொண்ட உத்தமர் கூட ஒருவரென்று
நென்னல்தான் என்னிடம் நீட்டி முழக்கினாய் நேரிழாய்நீ
பின்னெதற் கஞ்சினை பேதைபோல் உன்னைப் பிரிவரென்றே.

(தெ-ரை) துயரத்தில் ஆழ்ந்த தலைவியைக் கண்ட தோழி "அண்ணாவின் தம்பியருள் உன் தலைவரும் ஒருவரென நேற்று தான் என்னிடம் பெருமையாகப் பேசினாய். அப்படியானால் அவர் சொன்னசொல் மாறுவாரோ? பின் எதற்காகப் பேதையைப்போல் அஞ்சுகிறாய்" என்று வினவி, அவளது துயரத்தை நீக்கித் தேற்றுகிறாள்.

### தலைவன் வந்தமை பாங்கி யுணர்த்தல்.

அறுவை சிகிச்சையில் அண்ணா குணமடைந் தாரெனவே
அறுவை நிலைமையின் நீங்கி யகமகிழ் தம்பிமார்போல்
உறுவை மகிழ்வை உனதுயிர் காதலர் தன்னூர்சென்று
பொறுமை யிலாமலே போற்றிய நம்மூர்க்குப் போந்ததாலே.

(தெ-ரை) பதினாறும் நாள் தலைவியைச் சந்தித்த தோழி, "உனக்கு ஒரு மகிழ்ச்சியான செய்தியைச் சொல்லப்போகிறேன். அமெரிக்காவில் அண்ணாவுக்கு அறுவை சிகிச்சை வெற்றியாக நடந்தபின் அவர் குணமடைந்து வருகிறார் என்ற செய்தி கேட்டு தம்பிமார்கள் மகிழ்ந்தது போல நீயும் மகிழப் போகிறாய். தன்னூர் சென்ற உன் தலைவன் நம்மூர் திரும்பியுள்ளதுநான் அச் செய்தி" என்று உணர்த்துகிறாள்.

## வந்தோன் தன்னெடு நொந்து வினதல்.

அன்பெனும் பாசத்தால் ஆர்த்துப் பிணித்தநம் மண்ணுநீங்கின்
துன்பெனும் மாக்கடல் தோய்கின்ற தம்பிமார் போலவுன்றன்
அன்பிலே யாழ்ந்தாளும் ஆழ்ந்தனள் நீரன் றகன்றகாலை
இன்றும்நீர் வாரா திருந்திடின் ஏந்திழை காண்பதெங்கே.

(தெ-ரை) வந்த தலைவனை நோக்கிய தோழி "அண்ணு ஏதாவ. தோர் காரணமாகப் பிரிந்தாலும் அவர் தம்பிமார் துன்பக் கடலில் மூழ்குவதுபோல, நீ பிரிந்தபோது உன் தலைவி துன்பத்துள் மூழ்கினுள் இன்றைக்கும் நீ வாராதிருந்தால் அவளைக் காண்பது (உயிருடன் காண்பது) அரிதாகப்போயிருக்கும்" என்றுவருந்திக் கூறுகிறுள்.

## தலைவன பாங்கியொடு நொந்து வினதல்.

புத்தரை ஏசுவை போன்றவர் மட்டுமே போற்றிநின்ற
சுத்தசன் மார்க்கத்தைச் சொல்லியே வாழ்ந்தநம் வள்ளலார்போல்
இத்தரை மீதிலே வாழ்ந்திடு மண்ணு விடந்தனிலோ
பத்தரை மாற்றுள் பயின்றனள் என்போல் பொறுப்பதற்கே.

(தெ-ரை) அது கேட்ட தலைவன் "புத்தர், ஏசுநாதர் போன்ற வர் போற்றிய கொள்கைகளை இராமலிங்க வள்ளலாரும் கூறி, துன்பங்களைப் பொறுக்கும் ஆற்றலை வளர்த்தார். அவரைப் போன்து அண்ணுவும் வாழ்கிறுர். நான் அண்ணுவின் தம்பி யாதலால் எத்துன்பத்தையும் பொறுக்க வல்லவன். தலைவி கூட அவ்வாற்றலை அண்ணுவிடமோபயின்று கொண்டாள்" என்று தலைவி ஆற்றியிருந்தது எவ்வண்ணம் என வினவுகிறுள்.

## தலைவியை ஆற்றுவித்திருந்த அருமை கூறல்.

பண்ணுர் மொழியாளைப் பாதுகாப் பாயென்று பாவையேற்கு
நண்ணு செயல்சொல்லி நாடினீர் நும்மூர்க்கு நங்கையானும்
அண்ணு மொழியை அவர்தம்பி செய்கையா யாக்கலேபோல்
எண்ணு துயரங்கள் யாவையும் நீக்கினேன் ஏந்திழைக்கே.

(தெ-ரை) "அன்பரே, உம்தலைவியை ஆற்றுவித்துக்காக் குமாறு எனக்குப் பணித்தீர். அண்ணுவின் கட்டளையைத் தம்பியர் செயலாற்றுதல் போல, உம் கட்டளையை யானும் செய்து முடித்தேன். தலைவியின் துன்பங்களை ஆற்றுவித்தேன்" என்று தோழி கூறுகிறுள்.

# கஅ. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்.

## என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றல் :

தனனின் அறிவால் தாரணி யாள்கின்ற வண்ணநாட்டில்
எனனின் முயற்சியா லீட்டும் பொருள்கொண்டே யேந்திழைக்குப்
பொன்னின் பரிசப் பொருளெல்லாம் தந்து மணம்புணர
உன்னின் தவரோ உரையவட் குண்கணும் என்பிநீவே,

(தெ-ரை) தலைவன் செல்வந்தன் எனினும், தலைவிக்கு பரிசப் பொருளீதந்து மணம் செய்ய எண்ணியவன் தன்னால் ஈட்டப் பட்ட பொருளையே தரவேண்டும் என்று கருதி ''தோழி, அறிஞர் அண்ணா, தனது அறிவுகொண்டே இந்நாட்டை யாள்கிறார்; உலக மக்களின் உள்ளங்களையும் ஆள்கிறார். ஆகவே, யானும் ஒரு முடிவுக்கு வந்துள்ளேன். என்னால் ஈட்டப்பெற்ற பொருள் கொண்டே தலைவியை மணக்க எண்ணி பொருளீட்ட அயல்நாடு போகப்போகிறேன். இச்செய்தியைத் தலைவிக்குக் கூறுக'' என்று தன் பிரிவைத் தலைவிக்கு உணர்த்த வேண்டுகிறான்.

## பாங்கி நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல் :

எதையும் இதமாய் இயம்பும் இயல்புடை யண்ணாவைபோல்
இதைநம் தலைவிக் கெடுத்தியம் பாற்றலைக் கற்றேனில்லை
எதையுமே தாங்கும் இதயமே கொண்டவர் தம்பிநீரும்
கதையையே சொல்லுவீர் காரிகை கண்டபின் செல்லுவீரே

(தெ-ரை) ''தலைவ, இதைச் சொல்லும் ஆற்றல் எனக்கில்லை. எதையும் இதமாகச் சொல்லும் ஆற்றல் அண்ணாவுக்குத்தான் உண்டு. அவரிடம் பயின்ற உமக்கு எதையும் தாங்கும் இதயமும் இருக்கும். உம் பிரிவை, நீரே அவளைக்கண்டு உணர்த்தி பிறகு செல்லுவீராக'' என்று கூறுகிறாள்.

## நீடேனென்றவ னீங்கல் :

விண்டதைச் செய்கையில் வேண்டிடும் பண்பதை வேட்கையுற்றுக்
கொண்டதன் கொள்கையில் மாறினறி கோலோச்சு மண்ணாநாட்டில்
பண்புபோல் காலைபோய் மாலையே மீளுவேன் பாவையையான்
கொண்டவள் நெஞ்சிலே கொள்ளவே சொல்லுவாய் கோமமேனே.

(தெ-ரை) தலைவியை நேரில் கண்டு தன் பிரிவினை உணர்த்துதல் இயலாது என்று கருதிய தலைவன் "தோழி, சொன்னதைச் செய்கையில் காட்டும் தலைவர் நம் அண்ணா. அவர் தம்பி யானும் கொள்கை வழியே நிற்பேன். எப்போழ்தும் போல காலை புறப்படுவேன்; மாலை வந்துவிடுவேன். காலம் நீட்டிக்கமாட்டேன் என்பதை அவள் உணருமாறு, கோபமின்றி நீயே சொல்வாயாக" என்று கூறி அவ்விடம் விட்டு நீங்குகிறான். (மாலை வருவதாகக் கூறினும் எந்த நாளின் மாலை என்று கூறாதது நோக்கத்தக்கது.)

### பாங்கி தலைவிக் கவன்செல வுரைத்தல் :

| | | | | |
|---|---|---|---|---|
| பண்டையோர் | கூறிய | பாதையில் | மாருத | பண்பையுற்ற |
| ஒண்டொடி | யேவுன்னை | ஊரார்முன் | கொளளுதற் | குள்ளியேதான் |
| அண்டினோர் | யார்க்கும் | அபயமே | தந்திடும | அண்ணாநாட்டில் |
| ஒண்டியா | யுன்னைவிட் | டூர்தாண்டி | சென றுளா | ருத்தமரே. |

(தெ-ரை) தலைவன் பிரிந்த பின், தோழி தலைவியைச் சந்தித்து "எல்லார்க்கும் அபயம் அளிக்கும் அண்ணா நாடாளுகிறார் என்பதாலோ என்னவே, உன்னைத் தனிமையில் ஆழ்த்திவிட்டு, உன்னை மணம் செய்து கொள்ளும் எண்ணத்தோடு ஊர்தாண்டி உன தலைவர் சென்றுள்ளார்." என்று தலைவன் பிரிவைத் தலைவிக்கு உணர்த்துகிறாள் தோழி.

### பூங்குழை இரங்கல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அன்னைப் | பரிவினும் | ஆர்வம் | மிகக்கூட்டி | அன்பைக்காட்டி |
| கன்னித் | தமிழ்போற்றிக் | கற்பின் | திறங்காக்கு | மண்ணாநாட்டில் |
| நின்னைப் | பிரியேனென் | றென்னை | யவர்நோந்த | போதெனக்குச் |
| சொன்னசொல் | சோருமென் | றஞ்சியோ | சொல்லாமல் | சென்றனரே. |

(தெ-ரை) அது கேட்ட தலைவி "தோழி, தாயைப் போன்ற பரிவு காட்டி அண்ணா ஆளும் இந்த நாட்டில், அவர் என்னைக் கூடிய முதல் நாள் 'நீ என்னைப் பிரியேன்' என்று கூறினார். அதை நான் எடுத்துக்காட்டித் தடுப்பேன் என்று கருதியோ, சொல் மாறியவர் என்று ஆகிவிடும் என எண்ணியோ என்னிடம் சொல்லாமலே பிரிந்து சென்றார்" என்று வினவி இரங்குகிறாள்.

### பாங்கி கொடுஞ்சொற் சொல்லல் :

| | | | | |
|---|---|---|---|---|
| தன்னை | முகத்தூற்றி | தாழ்வா | யுரைத்தாலும் | தன்தலைவர் |
| என்றும் | பெரியார்தா | னென்றெண்ணு | மண்ணாய்ன | ருளுமபோதும் |
| உன்னை | யொருபோழ்து | முன்ன | மறவாத | வுத்தமரை |
| என்னேநீ | எண்ணும | லிவ்வா | றியம்பினை | யேந்திழையே. |

(தெ-ரை) தலைவன்மீது பழிசுமத்திய தலைவியை நோக்கிய பாங்கி ''தலைவி, அறிஞர் அண்ணவைத் தூற்றுவதில் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் முனைந்து நின்றார்கள். எவ்வளவுதான் பெரியார் தன்னை இழி படுத்தித் தூற்றினாலும், அண்ணா அவர்கள், 'பெரியார் தான் என் தலைவர்' என்று எப்போதுமே கூறி வருகிறார். அவர் இன்று இந்த நாட்டை ஆளும்போதும், நீ, உன்னை எப்பொழுதும் நினைந்து வாழும் உன் தலைவனை இவ்வாறு இகழ்ந்துரைக்கலாமா'' என்று கூறுகிறாள்.

### தலைவி கொடுஞ்சொற் சொல்லல் :

புதர்களுள் பதுங்கும் புலிகள் அலையும் புனத்திலுள்ள
அதர்க்குள் தலைவர் அகன்றா ரெனநன் கறிந்திருந்தும்
குதற்கம் மொழிந்திடக் கூசிடா யிவ்வூர்க் குறைமதியென்
எதற்கும் கலங்கா திருந்திட யானென்று மண்ணவன்றே.

(தெ-ரை) அதுகேட்ட தலைவிக்குத் தோழி மீது சற்று சினம் ஏற்பட்டது. ஆனாலும் அதை நேரிடையாகத் தெரிவிக்காமல் ஊரரார் மீது பழிசுமத்திக் கூறுவதுபோல கூறுகிறாள். ''புலி போன்ற விலங்குகள் திரியும் காட்டு வழியே தலைவர் சென்றார் என்பதை உணர்ந்திருந்தும் அதுபற்றிக் கலங்காமல், குதற்கமாகப் பேசுகிறதே இந்த ஊர். இவ்வூராரின் அறியாமைதான் என்னே! எதற்கும் கலங்காமல் இருக்க நான் என்ன அண்ணவா'' என்று நொந்துகொள்கிறாள்.

### வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல் :

அன்பும் தயையும் அரியநற் பண்பங்கொள் ளண்ணநாட்டில்
துன்பம் எதையுமே தூக்கத்து மெண்ணாத தோகையுன்றன்
அன்பர் செலும்வழி யெங்குமே யார்வம் மிகவளிக்கும்
இன்பம் தரும்பல் லியற்கைச் செயல்நோக்கா தேகலேதே.

(தெ-ரை) தலைவியின் வருத்தமுணர்ந்த தோழி, ''இந்நாட்டை அன்பும் அருளும் மிக உடைய அண்ணா ஆளுகிறார். ஆகவே எங்கும் இன்பக் காட்சிகள் நிறைந்து விளங்கும். உன் அன்பரும் மிக நல்லவர். அவர் செல்லும் வழியில் இயற்கையான இன்பக் காட்சிகளைக் காண்பது எளிது. அப்போது உன் நினைவு அவருக்கு வரும்; வந்தால் உடன் திரும்பி விடுவார்.'' என்று தலைவன் திரும்பி விடுவான் எனக்கூறித்தலைவியைத் தேற்றுகிறாள்.

### பருவம் கண்டு பெருமகள் புலம்பல் :

எண்ணிலா இன்னலால் ஏழையர் வாடலை யெண்ணுமண்ணா
கண்ணலே நீர்த்துளி காண்பதைப் போலவே யின்றுமாலை
விண்ணிலே கண்டுயான் வேதனை கொண்டதை வேற்றுநாட்டு
மண்ணிலே சென்றநம் மாணபினர் எண்ணிடா மாயமென்னே.

(தெ-ரை) மாலை நேரம் வந்தது. பனி நீர்த்துளிகளைக்கண்டாள் தலைவி. ஏழைகளின் துயரம் எண்ணும் அண்ணாவின் கண்களில் கண்ணீர்த் துளிகள் காண்பதைப்போன்று அப்பனித் துளிகள் தலைவிக்குக் காட்சி தருகின்றன. கார் காலக் குறிப்பு தோன்றலினாலும், தலைவன் மாலை வருவேன் என்று கூறிய சொல்லை நினைந்ததாலும், தலைவன் வாராமை எண்ணித் தலைவி புலம்புகிறாள்.

இகுளை வம்பென்றல்:

| | | | | |
|---|---|---|---|---|
| செம்தொழில் | யாவையும் | செம்மைசேர் | பண்பொடு | செய்துகாட்டி |
| மெய்மையே | பேசியிம் | மேதினி | யாளுநம் | மண்ணாநாட்டில் |
| பொய்மைநீர் | கூடியிப் | பூமிமேல் | காரினைப் | போல்வதொன்று |
| மைவிழி | மாதுநீ | பேதுற | மாயமாய் | வந்ததென்னே. |

(தெ-ரை) இதை யுணர்ந்த தோழி "தலைவியே, செம்மையும் வாய்மையும் விளங்க பணியாற்றும் அண்ணா இந்நாட்டையாளும் போது, மேகத்தைப் போன்று, பொய்மையான நீர்த் துளிகளின் கூட்டம் எப்படி வரமுடிந்தது? இது ஏதோ மாயமாக வந்திருக்கிறது. காலமில்லா காலத்தில் வந்த மேகத்தைப் பார்த்து தலைவர் வரவேண்டிய காலம் வந்துவிட்டது என எண்ணி நீ மயங்காதே'' என்று கூறுகிறாள்.

இறைமகள் மறுத்தல்:

| | | | | |
|---|---|---|---|---|
| ஒவ்வோர் | செயலுக்கு | முற்றதோர் | காலத்தை | யோர்ந்துசெய்யும் |
| செல்வியர் | அண்ணயைச் | செந்தமிழ் | நாடாளும் | செம்மைகண்டு |
| தெவ்வரும் | பாராட்டும் | சேதியைக் | கேட்டுமா | சேயிழாய்நீ |
| இவ்விதம் | சொன்னய் | இயற்கையும் | பொய்க்குமோ | இந்நாட்டே. |

(தெ-ரை) தோழி கூறியதைக் கேட்ட தலைவி "பாங்கி, ஏற்ற காலத்தை உணர்ந்து எச்செயலையும் செய்யும் அண்ணா நாடாளும்போதுமா இயற்கை பொய்க்கும் என்று நீ எண்ணுகிறாய்'' எனக்கேட்டு தோழியின் கூற்றை மறுக்கிறாள்.

அவர் தூதாகி வந்தடைந்ததிப்பொழுதெனத் துணைவிசாற்றல்

| | | | | |
|---|---|---|---|---|
| பைந்தமிழ் | கொண்டேயிப் | பாரினை | யர்ண்டிடு | மண்ணாநாட்டில் |
| செந்தமிழ் | கற்றவுன | செம்மலும் | சொன்னசொல் | மாறுவாரோ |
| இந்தக ர் | உன்னுடை | ஏந்தலின் | தூதென | வெண்ணிடாமல் |
| சிந்தனை | செய்வதேன் | செந்தமிழ்ச் | செல்விநீ | செப்புவாயே. |

(தெ-ரை) "தலைவி, தமிழ் மொழிகொண்டே நாடாளும் அண்ணா நாட்டில், தமிழ் படித்த உன் தலைவர் சொன்ன சொல் மாறுவார் என்று நீ எண்ணுதல் தவறாகும் இந்த மேகம், தலைவர் வருகையை அறிவிக்கும் தூதாக நீ ஏன் எண்ணக் கூடாது?'' என்று வினவுகிறாள்.

## தலைமக ளாற்றல் :

உரிமைக்காய்ப் போராடு முள்ளங்கொள் ளண்ணுவை ஊக்குவித்த
பெரியார்க்கும் வீரமணியார்க்கு முள்ள பிணைப்பைப் போன்றே
பிரியோம் நம் வாழ்வினில் பேதுருய் நீயென்று பேசியோரும்
தரிவாரோ வாராமல் தையல்சொல் வாய்மையே தாபமேனே.

(தெ-ரை) தோழியின் சொற்கேட்ட தலைவி "உரிமைக்காகப் போராடும் அண்ணுவை ஊக்குவித்தவர் பெரியார். அப்பெரியாரைவிட்டுப் பலர் பிரிந்தபோதும் வீரமணி என்பவர் மட்டும் எப்போதும் பிரியாமல் தொண்டாற்றுகிறுள். 'அவ்விருவரையும் போல நானும் நீயும் பிரியாமலே வாழ்வோம்' என்று நம் தலைவர், நம்மைக் கூடியபோது உரைத்துள்ளார். ஆகவே அவர் வாராமலிரார். -தோழியின் சொல்லும் உண்மைதான். இனி நாம் வருந்த வேண்டியதில்லை," என்று எண்ணி தன் துயரை ஆற்றிக் கொண்டாள்.

## அவனவட் புலம்பல் :

நல்லா ருளமெங்கும் நீளும் வளரண்ணு நாட்டையாண்டும்
பொல்லா ஞெருவன் புவிபிதில் வாழ்வதும் புன்மையன்றே
எல்லா எழிலையும் என்பிரி வால்பிரிந் தேங்குவாளின்
இல்லா இடையினை எண்ணியென் உள்ளம் இளைவதெனே.

(தெ-ரை) பொருளீட்டச் சென்ற தலைவன், தன் செயல் முற்றுப் பெற்ற பின், அங்கு தன் தலைவியை நினைந்து "நல்லவர் உள்ளமெல்லாம் குடிகொண்டு வாழும் அண்ணு நாட்டையாளும் போது கூட, பிறருக்குத் துன்பம் விளைப்பவர் இந்நாட்டில் வாழ்வதுண்டோ? என் பிரிவால் தலைவிக்குத் துன்பம் தந்த யான் பொல்லாதவன் போலும். அவளை நினைந்து நினைந்து வாடுதலைச் செய்கிறது என் நெஞ்சம்" என்று எண்ணுகிருன்.

## மீண்டு வருங்காலைப் பாகனேடு சொல்லல் :

பார்தனில் யார்குறை பார்க்கினு சோர்வுறு மண்ணுநாட்டில்
ஆர்திரை யாதவன் ஆழ்ந்திடின் ஆயிழை யாற்றுவாளோ
கார்தனை மாதவள் காணுமுன் யானவள் காணுமாறு
ஊர்தியை வேகமாய் ஓட்டுவாய் பாகநீ ஓர்ந்து பார்த்தே.

(தெ-ரை) தலைவியை எண்ணிய தலைவன் மீள்கிருன். தன் ஊர்தியை ஒட்டி வரும் பாகனை நோக்கி "யாருக்கு எக்குறை நேர்ந்தாலும் வருந்தும் அண்ணு ஆளும் நாட்டில், கதிரவன் மறைவை கண்டதும் என் தலைவி கலங்குவாள். நாம் காணும் இம்மேகம் அவள் இருப்பிடம் செல்லுமுன் நாம் சென்றுவிட வேண்டும். இதை யுணர்ந்து, பாகனே, நீ ஊர்தியை வேகமாக ஓட்டுவாயாக" என்று கூறுகிருன்.

### மேகத்தொடு சொல்லல் :

தரையில் சிறந்த தலைவனு மண்ணுவின் நாடுநோக்கி
விரையும் முகில்காள் விரும்பி யுமையொன்று வேண்டுவன்யான்
வரையும் எழிலோ வியம்போ லொருத்தி வருந்திநின்றால்
உரையும் எனது விரைவின் வரவை உலருமுன்னே.

(தெ-ரை) தலைவன் வந்துகொண்டிருக்கும்போது, வானத்தில் அவன் கண்ட மேகம் ஒன்றினை நோக்கி "உலகில் சிறந்த தலைவனுகிய அண்ணு நாட்டைக் காண சென்று கொண்டிருக்கும் மேகமே, அங்கு எனக்காக ஏங்கித் தவித்து வாசலில் வழிமேல் விழி வைத்து காத்துக்கொண்டிருப்பாள் ஒருத்தி. அவளிடம் அவளைக் காண நான் விரைந்து வந்துகொண்டிருப்பதாகக் கூறுமாறு உன்னை வேண்டுகிறேன்" என்று சொல்லுகிருன்.

### பாங்கி வலம்புரி கேட்டு அவன் வர வறிவுறுத்தல் :

நலம்புரி கொள்கையால் நாநலத் திண்மையால் நாடுகாக்க
வலம்வரு மண்ணுவைப் போல்வரும் வஞ்சியா ளுந்தலைவர்
தலம்வரு மாட்சியின் தன்மையை முன்னமாய்த் தந்திடற்த
வலம்புரி சங்கொலி வந்ததுக் கேட்டிடாய் வாட்டமேனே.

(தெ-ரை) தலைவன் வரும்போது, வலம்புரி சங்கின் ஒலி கேட்கிறது. அவ்வொலி கேட்ட தோழி "தலைவியே, நாட்டுக்கு நன்மை செய்ய, அறிஞர் அண்ணு ஊரைச்சுற்றித் திரும்புவது போல், உன் தலைவரும் வருகிருர் போல். அதன் முன்னறிவிப்பு போல, வலம்புரி சங்கின் ஒலி கேட்பதை நீயும் கேள்" என்று கூறி தலைவன் வருகையைத் தெரிவிக்கிருள் தோழி.

### வலம்புரி கிழத்தி வாழ்த்தல் :

புல்லாமை யால்வாடும் போழ்திலென் காதலர் போந்தமையைச்
சொல்லாமல் சொல்லியென் சோர்வினைப் போக்கும் வலம்புரியே
இல்லாமை யால்வாடும் ஏழையர் வாழ்வினை யெண்ணுமண்ணு
வல்லாண்மை யால்பெற்ற வான்புகழ் போலொன்றும் வாழியவே.

(தெ-ரை) தலைவன் வருகையை முன்னறிவிப்பு செய்யும் வலம்புரி சங்கிற்குத் தலைவி வாழ்த்துகூற எண்ணி "தலைவன் பிரிவால் யான் வாடும்போது, அவர் வருகையை உணர்த்திய வலம்புரியே, அண்ணுவின் புகழ்போல நீடுழி வாழ்க" என்று வாழ்த்துகிருள்.

### தலைவன் வந்துழிப் பாங்கி நினைத்தமை வினவல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அண்ணு | நிறைவாழ் | வணைந்ததை | யெண்ணி | அகிலமெல்லாம் |
| எண்ணு | துயர்பல | வேற்றதைப் | போலுன்ற | னேந்திழையாள் |
| கண்ணு | உனது | பிரிவினை | யெண்ணிக் | கலங்கி நின்ருள் |
| பண்ணு | ளிவளைநீர் | பாரா | திருந்ததோர் | பண்டிமென்னே. |

(தெ-ரை) ஒரு திங்கட்கு மேலாகத் தலைவன் தலைவியைப் பிரிந்திருந்தான் என்பதால், தலைவன் வந்தவுடன் அவனை நோக்கிய தோழி "இத்துணை நாட்கள் தலைவியை எண்ணுமல் உம்மால் எப்படி வாழமுடிந்தது? நீர் பிரிந்த சிலநாட்களில் அறிஞர் அண்ணு அவர்கள் இவ்வுலகைவிட்டே பிரிந்து விட்டார்கள். அதுகேட்ட மக்கள் யாவரும் துயர் கொண்டதைப்போல, உன் தலைவி உம்மைப்பிரிந்து வாழ்வதில் துயருற்ருள்" என்று வினவுகிருள்.

### தலைவன் நினைத்தமை செப்பல் :

| | | | | |
|---|---|---|---|---|
| அன்பையே | தன்னுயி | ராயெண்ணி | வாழ்ந்தநம் | மண்ணுயின்று |
| மன்பதை | வாழ்வில் | மறைந்தா | ரெனினுமிம் | மாநிலத்தோர் |
| என்றுமே | எண்ணியே | வாழ்தல் போல் | யானுமென் | னேந்திழையை |
| என்னுளத் | தெப்போழ்தும் | ஏந்த | மறந்திடின் | வாழ்வுமேதே. |

(தெ-ரை) "தோழி, அறிஞர் அண்ணு மறைந்தாலும்கூட அவரை யாராவது மறந்துவிட முடியுமா? எப்போழ்தும் அண்ணுவையே எண்ணி மக்கள் வாழ்வது போல, நானும் தலைவியை எண்ணிக்கொண்டேதானிருந்தேன். இல்லாவிடில் எனக்கு ஏது வாழ்வு" என்று கூறுகிருன்.

### ஆற்றுவித் திருந்த அருமை சாற்றல் :

| | | | | |
|---|---|---|---|---|
| உலகத்து | மாந்தருள் | உத்தமப் | பேரறி | வாளனுகை |
| பலகற்று | வாழ்ந்தநம் | மண்ணுயிப் | பார்வாழ்வை | நீத்தபோது |
| கலக்கத்தை | யாற்றிய | காட்சியைக் | கூறியே | கன்னியாளை |
| உலகத்தே | வாழ்வித்தேன் | உன்பொருட் | டாகவே | உண்மைதானே. |

(தெ-ரை) தலைவன் கூறியது கேட்ட தோழி, "தலைவ, உன் பிரிவால் உன் தலைவி வாடியபோதெல்லாம், அண்ணு பிரிந்த போது, மக்கள் எப்படியோ ஆறுதல் கூறிக்கொண்டதைச் சுட்டிக் காட்டி, உன்னுடைய வருகை நிச்சயம் என்று இருக்கும்போது அவள் வாடுதல் காரணமற்றது என்பதையும் உணர்த்தினேன். அவளும் ஒருவாறு ஆறி வாழ்ந்தாள்" என்று தான் தலைவியை ஆற்றுவித்திருந்தமையைச் சாற்றுகிருள்.

